# பொருளடக்கம்



வெளியிடுவோர்:
சந்திரிகா பிரகாஷன
Ph: 90437 47036

# ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்

ஸ்ரீ மத் கிருஷ்ண பதாம்போஜ மானஸம் கவி புங்கவம்!
ஸ்ரீ மத் வித்யா ப்ரஸன்னாப்திம் குரும் வந்தே நிரந்தரம்!!

ஸ்ரீவித்யாபிரஸன்ன தீர்த்தர் வியாசராஜ மடப் பரம்பரையில் 37 வது பீடாதீஸராக அலங்கரித்த மஹனீயர். இவரது காலம் 1940 முதல் 1969 வரை ஆகும்(பீடத்தில் இருந்த காலம்). இவர் பூர்வா ஸ்ரமத்தில் வழக்கறிஞர் சமூக சேவகர், பல மொழிகளிலும் புலமை, ஸாஸ்திர ஞானம் என விளங்கியதோடு, பீடாதீஸராக அலங்கரித்ததுடன் ஹரிதாஸர் ஆகவும் பக்தி பிரச்சாரம் செய்த மஹா புருஷர். 'பிரஸன்ன' அங்கிதத்தில் கிருதிகளை ரசனை செய்து சமீபகாலத்தில் வாழ்ந்த ஸன்யாஸ தீக்ஷை பெற்ற ஹரி தாஸர் இவர். கிட்டத்தட்ட 30 வருடக்காலம் பீடத்தில் அமர்ந்து மூல கோபால கிருஷ்ணனை பூஜித்த மஹான். இவரது குரு ஸ்ரீவித்யா வாரிதி தீர்த்தர். இவரது ஆஸ்ரம சிஷ்யர் ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர். ஸ்ரீ ராகவேந்திர மடத்தின் ஸ்ரீ ஸுயமீந்திர தீர்த்தர், ஸ்ரீ ஸுஜயீந்திர தீர்த்தர், ஸ்ரீ பாதராஜ மடத்தின் ஸ்ரீ தயாநிதி தீர்த்தர், ஸ்ரீ ஸத்யநிதி தீர்த்தர் மற்றும் ஸ்ரீ உத்தராதி மடத்தின் ஸ்ரீ ஸத்யத்யான தீர்த்தர்' ஸ்ரீ ஸத்யாபிக்ஞ தீர்த்தர், ஸ்ரீ ஸத்யப்ரமோத தீர்த்தர் போன்றவர்களின் சமகாலத்தவர் இவர்.

பூர்வாஸ்ரமத்திலே இவரது பூர்வீகம் தமிழ்நாட்டிலே கோவை மாவட்டம் அவினாசிக்கு அருகில் உள்ள தெக்கலூர் என்பதாகும். இவரது மூதாதையர்கள் 19ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஸ்ரீ வித்யா காந்த தீர்த்தர் காலத்தில் ஸோஸலேவிற்கு இடம் பெயர்ந்தனர். இவரது பூர்வாஸ்ரம தாய் தந்தையர்கள் ஸ்ரீமதி ஸத்யபாமா மற்றும் ஸ்ரீ அஹோபிலாச்சார் (பின்னர் ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தராக பட்டம் ஏற்றவர்) தம்பதிகள் நாமக்கல் நரஸிம்மரைத் துதித்து சேவை புரிந்ததினால், பல பெண் குழந்தைகளுக்குப் பிறகு ஒரே மகனாகப் பிறந்தார். நரஸிம்மனின் அருளால் பிறந்தமையால் "வெங்கட நரஸிம்மா" என்று பெயர் வைத்தனர். பின்னாளில் இவர் தெக்கலூர்

வெங்கட நரஸிம்மாச்சார் (அ) T.V . நரஸிம்மாச்சார் என்றே பிரஸித்தியாக விளங்கினார்.

ஸ்ரீவித்யா ஸிந்து தீர்த்தர் (அக்கிபேளே ஸ்வாமிகள்) காலத்தில் மடத்தின் செல்வங்களையெல்லாம், பஞ்சத்தைப் போக்க, தான மாக அளித்து விட்ட சூழ்நிலையில், இவரது காலத்திற்குப் பின் ஸ்ரீ வித்யா ஸமுத்ர தீர்த்தர் காலம் வரை மடமானது பணப் பற்றாக்குறையினால் கடினமான சூழ்நிலையைக் கடந்து வந்த காலம் அது.

ஸ்ரீவித்யா ஸமுத்திரத் தீர்த்தர் தனக்குப் பிறகு பீடத்தை அலங்கரிக்க மிகச்சிறந்த பாண்டித்தியம் பெற்று விளங்கிய ஸ்ரீ அஹோபிலாச்சாரைத் தேர்ந்தெடுத்து, ஸன்யாஸம் அளித்து "ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர் "என நாமம் சூட்டினார். மடத்தின் நிலைமை அறிந்து' மைசூர் மகாராஜா வும் மடத்தின் நிர்வாகத்திற்கு ஆகும் செலவினை ஏற்று நடத்த ஒப்புக் கொண்டார். மடத்தின் முன்னேற்றத்திற்காக அப்போது பல தரப்பட்ட சேவைகளையாற்றிய மகனீயர் ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர். உத்தராதி மடத்தின் ஸ்ரீ ஸத்ய த்யான தீர்த்தர் முதலானோர் மெச்சிய ஞானம் கொண்ட தபோசீலர் இவர்.

ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் பூர்வாஸ்ரமத்தில் (அஹோபிலா ச்சார்) T.V. நரஸிம்மாச்சாரை ஸாஸ்திரத்தில் மிகச் சிறந்த நிபுணத்துவம் பெற வைக்க வேண்டும் என்ற இச்சை கொண்டி ருந்தார். அவர் ஸன்யாஸ ஆஸ்ரமம் ஏற்க, ஸ்ரீமதி ஸத்யபாமா அவர்கள் குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தியதுடன் தனது மகனை வளர்க்கும் மிகப்பெரிய பொறுப்பும் அவருக்கு இருந்தது. இந்நிலையில், அவர் T.V. நரஸிம்மாச்சாரை லௌகிக கல்வி யிலும் மிகச் சிறந்ததாக தயார் செய்தார். ஆச்சார் பெங்களூரில் B.A Honors பட்டம் பெற்று, மேலும் படிப்பைத் தொடர்ந்து, சென்னையில் சட்டம் படித்து BA.B.L பட்டம் பெற்றார். மைசூரில் வழக்கறிஞராக பயிற்சி மேற்கொண்ட நரஸிம்மாச்சார், சிறிது காலம் திருப்பூர் மாவட்டத்தில் உள்ள தாராபுரத்தில் வழக்கறிஞராக பணியாற்றினார். மடத்தின் சட்ட ஆலோசகராக செயல்புரிந்து, மடத்தின் சில நில ஆக்கிரமிப்பு விவகாரங்களில்

சட்ட ரீதியாக வெற்றி கண்டு, நிலங்களையும் சொத்துக்களையும் மீட்டு எடுக்க உதவி புரிந்தார்.

இந்நிலையில் ஸ்ரீவித்யா ரத்னாகர தீர்த்தர் பிருந்தாவனஸ்தர் ஆகும் முன், ஸ்ரீ வித்யா வாரிதி தீர்த்தரிடம் சூசனை அளித்து, T.V. நரஸிம்மாச்சாரின் ஸ்வரூப யோக்கியதையை அறிந்து, அவரை ஸாஸ்திர பாடத்தில் சிறந்த வகையில் தயார் செய்யும்படி வழி வகைக் கூறி, உணர்த்தினார். குருவின் வழிகாட்டுதலின்படி நெடுர் கிருஷ்ணமூர்த்தி ஆச்சாரிடமும், வீரசோழபுரம் கிருஷ்ணா ச்சாரிடமும் ஸாஸ்திரப் பாடங்களை சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தார் நரஸிம்மாச்சார். அதே வேளையில் வியாஸராஜ மடத்தில் பல தரப்பட்ட நற்காரியங்களைப் புரிந்து வந்த ஸ்ரீ வித்யாவாரிதி தீர்த்தர், மூல கோபாலகிருஷ்ணனின் பூஜைக்காக தங்க மண்டபம், வெள்ளி மண்டபம், தங்கத் தொட்டில், பட்டாபி ராமனுக்கு தங்க கிரீடம், கவசம் முதலியவற்றை சமர்ப்பித்ததுடன், வியாஸராஜபுரத்தில் மடத்தை உருவாக்கி, 'வ்யாஸ யோகி சரித்திரம்' என்ற கிரந்தத்தின் ஆராய்ச்சிகளை விளக்குவித்தார். ஸ்ரீஹரிவாயுகுரு மஹனீயர்களின் ப்ரேரணை யினால், சூசனையாகி ஸ்ரீ வித்யா வாரிதி தீர்த்தர் 1935-ம் ஆண்டு T.V. நரஸிம்மாச்சாரியாருக்கு ஸன்யாஸம் அளித்து, 'ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர்' என்று நாமகரணம் செய்தார். பின்னர் பீடத்தை ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தரிடம் ஒப்படைத்து 1939-ம் ஆண்டு பாத்ரபத மாஸ ஸுக்லபக்ஷ பஞ்சமியன்று ஸ்ரீரங்கத்தில் பிருந்தாவனஸ்தனார் ஸ்ரீ வித்யா வாரதி தீர்த்தர். ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர், தமது குருவிற்கு விஸேஷமாக வைபவங் களுடன் ஸமாராதனையை செய்து சேவை புரிந்தார்.

ஸ்ரீ வியாஸராஜ மடம் முக்கியமாக ஹரி தாஸ ஸாஹித்தி யத்திற்கு பெரும் பங்களிப்பை அளித்ததுடன், அத்தகைய தாஸ கான ஸேவை செய்பவர்களையும் விளக்குவிப்பதில் முக்கிய த்துவம் அளித்து வந்துள்ளது. ஸ்ரீ வியாஸராஜரிடம் இருந்து ஆரம்பித்து, ஸ்ரீ வித்யா காந்த தீர்த்தர், ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தர் வரை இத்தகைய சேவையை செய்து வந்ததை சரித்திரத்தில் காண முடிகிறது. அவ்வகையில் ஸ்ரீ மூல கோபால கிருஷ்ணனின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப்

பாத்திரரான ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர் "பிரஸன்ன" என்று அங்கிதத்திலே (முத்ரையிலே) எத்தனையே க்ருதிகளை ரசனை செய்துள்ளார். ஸ்ரீ பாதராஜர், ஸ்ரீ வியாஸராஜர், ஸ்ரீ புரந்தரதாஸர் போல எந்தவொரு தலைப்பிலும் பலவித ராகங்களில் க்ருதி களை ரசனை செய்யும் திறமை உடையவராக விளங்கினார். ஸாஸ்திர விஷயங்களின் ஸாரத்துடன், பக்தி ரஸத்தையும் கலந்து மிக ரம்மியமான இசையில் அமைந்த பாடல்கள் இவருடையவை ஆகும். த்விபதி, சதுஷ்பதி, ஷட்பதி எனக் கடினமான இசை வகையிலும் கூட க்ருதிகளை படைத்துள்ளார். கன்னடத்தில் அமைந்த படைப்புகள் பலவற்றுள் "பதரிகாஸ்ரம வர்ணனை," "வைகுண்ட வர்ணனை," "ஸுமத்வ விஜய ஸார ஸங்க்ரஹம்" போன்றவை மிக முக்கியமானதாகும். அவருடைய ஸாஹித்தியங்களில் "ஹுபேகே பரிமளத", "குனி குனி யெளொ பால கோபால", "ஜனும ஜனுமதலி" போன்றவை மிக பிரபலமானவை. குரு மஹனியர் ஸமஸ்க்ருதத்திலும் க்ருதிகளை வழங்கியவர். ஆங்கிலத்திலும் மிகச் சிறந்த புலமை வாய்ந்த இவர், புகழ் பெற்ற ஆங்கில எழுத்தாளர்களான ஷேக்ஸ்பியர், மில்டர், கெய்த் போன்றவர்களின் படைப்புகளாலும், ஸமஸ்க்ருதத்தில் காளிதாசனின் படைப்புகளாலும் ஈர்க்கப்பட்டு தனக்கென ஒரு பாங்கினை உருவாக்கி பலதரப்பட்ட மேடை நாடக படைப்புகளை அளித்துள்ளார். அவற்றில் சில கன்னடம் மற்றும் ஆங்கிலத்தில் கிடைக்கின்றன.

ஸ்வாமிகள் சமுதாய பிரச்சினைகளை நநோக்குவதிலும், சரி செய்வதிலும் முற்போக்கு சிந்தனையாளராக இருப்பினும், ஸம்பிரதாயங்களைக் கடைபிடிப்பதில் மிக கண்டிப்பாக இருந்தவர். ஸ்வாமிகளின் சமுதாயத் தொண்டும் ஞான காரியத்திற்கான சேவையும் அளவிட முடியாதது. அப்போதைய பேஜாவர் மடாதீசர் ஸ்ரீ விஸ்வேஸ தீர்த்த ஸ்ரீ பாதங்கள் உருவாக்கிய 'அகில பாரத மத்வ மஹா மண்டல' என்னும் மாத்வர்களை ஒருங்கிணைத்து ஸபைகளை அமைத்து தத்வ பிரசாரம் செய்யும் ஸத்காரியத்தில் , ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர் ஆரம்பம் முதலே, அவருடைய காலம் முழுவதும் வெவ்வேறு சபாக்களில் தலைமை பொறுப்பேற்று நடத்தியவர். இத்தகைய சபாக்களில் அவர் அளித்த சொற்பொழிவுகளின்

தொகுப்பு கட்டுரைகளாக வெளிவந்துள்ளன. உதாரணத்திற்கு சென்னையில் தர்மபிரகாஷ் மண்டபத்தில் நடைபெற்ற சபாவில் மைசூர் மகாராஜா முதலியோர் கலந்து கொண்டு கௌரவித்தது குறிப்பிடத்தக்கது. ஸ்வாமிகள் வியாசராஜபுரத்தில் உள்ள சந்த்ரிகா குருகுலத்தில் பயிலும் வித்யார்த்திகளுக்கு இலவசமாக உணவு விடுதிகளை ஏற்படுத்திக் கொடுத்து ஸ்ரீ மடத்தின் மூலமாக மாபெரும் சேவையாற்றியுள்ளார். முக்கியமாக கிரந்த பிரசாரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட குருமகனீயர் 'சந்த்ரிகா பதிப்பகம்' மூலமாக பல கிரந்தங்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார். முக்கியமாக பரமகுருவான ஸ்ரீ வித்யா ரத்னாகர தீர்த்தரின் படைப்புகளைத் தொகுத்து வெளியிட்டதுடன் "பாஷ்ய தீபிகா" முதலான கிரந்தங்கள் வெளிவர ஸ்ரீ மடத்தின் மூலம் பொருள் உதவியும் ஊக்குவிப்பும் நல்கியவர். 'தஸப்ரமதி தர்ஸன ப்ரகாசினி சபாவின்' மூலம் ஸத்காரியங்களை நடத்தி ஊக்குவித்தவர் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர். தாம் பிருந்தாவனஸ்தராகும் காலம் நெருங்குவதை உணர்ந்து மடத்தின் சிஷ்யரான மிகச் சிறந்த பண்டிதரான ஸ்ரீ பூர்ணபோத ஆச்சாரைத் தேர்ந்தெடுத்து, 'ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர்' என்று நாமக்கரணம் செய்து ஸன்யாஸ தீக்ஷை வழங்கினார்.

ஸ்ரீ வித்யா பயோநிதி தீர்த்தர் பூர்வாஸ்ரமத்திலேயே ஸ்வாமி க ளிடத்தில் அத்யயனம் செய்தவர். விஸேஷமாக தஸ ப்ரகர ணங்கள், ஸூத்ர பாஷ்ய தீபிகா, ப்ரமாண பத்ததி, தத்வ பிரகாசிகா போன்றவற்றை கற்றுத் தேர்ந்தவர். பெங்களூரில் ஸ்ரீ வியாஸ ராஜ மடத்தின் திவானாகவும் ஸேவையாற்றியவர். அத்தகைய சிஷ்யருக்கு ஆஸ்ரமத்தை அளித்ததுடன், பீடத் தையும் ஒப்படைத்து, 1969-ம் ஆண்டு மார்கஸீர்ஷ மாஸ (மார்கழி) பௌர்ணமி தினத்தன்று ஸோஸலேவில் பிருந்தாவனஸ்தரா னார் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தர். இன்றும் தம்மை வேண்டும் பக்தர்களுக்கும், ஸேவை புரிவோருக்கும், ஞான, பக்தி, வைராக்கி யத்தையும், விஸேஷமான பாண்டித்தியத்தையும் அருள்பவரான, இத்தகைய மகனியரின் பாதம் பணிந்து போற்றுவோமாக !

அடியேனின் தந்தை வழிப் பாட்டி திருமதி ஸீதா லக்ஷ்மி ராக வேந்திர ராவ் அவர்கள் அவரது சிறுவயதில் கோவையில் அவரது இல்லத்தில் ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்தரின் முன்னிலையில் அவரது க்ருதிகளை பக்தியுடன் பாடியதாலே ஸ்வாமிகள் தமது கரகமலத்தினாலே வழங்கிய கோபால கிருஷ்ண விக்ரஹம் எங்கள் இல்லத்தில் 80 வருடங்களாக பூஜிக்கப்பட்டு வருகிறது என்பதாலும், எங்களது பூர்வீகம் ஸ்ரீ வியாஜராஜர் பிரதிஷ்டை செய்த காடு ஸ்ரீ ஹனுமந்தராயர் உள்ள தாராபுரம் என்பதாலும் குருமஹனீயரின் அருளால் அவரின் சரித்திரத்தை எழுதக்கூடிய பாக்கியத்தை அருளி யுள்ளதாக உணர்கிறேன்.

இத்தகைய மகிமை பொருந்திய ஸ்ரீவித்யாபிரஸன்ன தீர்த்தரின் சொற்பொழிவுகளையும் அவர் இயற்றிய நாடகங்களில் குறிப்பாக "பாட்டியின் மகாமக யாத்திரை", "ஜாமண்ணனின் சிரோடி', "கஞ்சனின் கை", போன்ற நாடகங்களின் தமிழாக்கத்தை யும், "ஜகன்னாத கேஸவ" ஸ்ரீசத்யநாராயணன் அவர்கள் தொகுத்து வெளியிட்டுள்ளார். சமீபகாலத்தில் அவர் வெளியிட்ட பல்வேறு மொழிபெயர்ப்பு நூல்களான 'வாதிராஜரின் ஸ்வப்ன பதம்', 'மோஹனதாஸரின் கோலுஹாடு', "பிரஸன்ன வேங்கட தாஸரின் நாராயண பஞ்சர" போன்ற நூல்களின் வரிசையில் இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு ஸ்ரீவித்யாபிரஸன்னதீர்த்தரின் அந்தர்யாமியான ஸ்ரீ மூலகோபால கிருஷ்ணன் ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் மற்றும் மன சாந்தி இவைகளை அருளவேண்டும். இதுபோல் அனேக மொழி பெயர்ப்புகளை வெளியிட வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

ஸ்ரீ வித்யா பிரஸன்ன தீர்த்த குருவாந்தர்கத பாரதி ரமண முக்ய ப்ராணாந்தர்கத ஸ்ரீ மூல கோபால கிருஷ்ணனின் பாதார விந்தங்களில் ஸமர்ப்பணம்! ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து !!

**பிரஸங்க பூஷணம் S. லக்ஷ்மிபதிராஜா**

மேடவாக்கம், சென்னை

17-12-2020

## நான்காவது அகில இந்திய மத்வ சித்தாந்த மாநாடு

23&24 டிசம்பர், 1960

ஸ்ரீவித்யா பிரசன்ன தீர்த்தர்
(ஸ்ரீவியாசராஜ மடத்தின் பீடாதிபதி மற்றும்
அகில பாரத மத்வ மஹா மண்டலத்தின் தலைவர்)

ஆற்றிய தலைமை உரை

பூஜ்ய மடாதிபதிகளே,
மதிப்பிற்குரிய மைசூர் மகாராஜா அவர்களே,
வந்திருக்கும் ஆண்களே மற்றும் பெண்களே:

இந்த மாநாட்டில் கலந்துகொள்வதில் நாம் அடையும் மட்டற்ற மகிழ்ச்சியை இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறோம். அகில பாரத மத்வ மஹா மண்டலத்தால் நடத்தப்படும் இந்த மாநாட்டை, ஒரு பெரிய சகாப்தம் என்றே சொல்லலாம். அதற்கு பல காரணங்கள் உள்ளன. இந்த ஆண்டு இந்த மாநாடு, தென்னிந்தியாவின் தலைசிறந்த நகரத்தில் நடைபெற்று, அனைத்து முக்கிய அறிஞர்களையும் இங்கே வரவழைத்துள்ளது. மஹா மண்டலம் துவக்கப்பட்ட நாளிலிருந்து, நடத்தப்பட்ட அனைத்து மாநாடுகளும், தலைசிறந்தவர்களால் துவக்கி வைக்கப்பட்டு, கற்றறிந்த அறிஞர்களால் பங்கேற்கப்பட்டிருக்கிறது, அனைத்து மடாதிபதிகளும் இதில் பங்கேற்று, இந்த மாநாடுகளுக்கு நற்பெயரையும் மதிப்பையும் முக்கியத்துவத்தையும் கொடுத்திருக்கின்றனர். அனைத்து மடாதிபதிகளும் திரண்டு இந்த மாநாட்டிற்கு வந்திருப்பது, இந்த மஹா மண்டலம் துவக்கப்பட்டதற்கான காரணத்தை அவர்கள் அனைவரும் ஒருசேர ஆதரிக்கின்றனர் என்பதையே காட்டுகிறது.

உடுப்பியில் நடந்த இத்தகைய முதல் மாநாட்டை, நமது மதிப்பிற்குரிய மைசூர் மகாராஜா, மேதகு ஸ்ரீ ஜயசாமராஜ ஒடெயார் பஹதூர், அவர்கள் துவக்கி வைத்திருந்தார். இரு ஆண்டுகளுக்கு முன்னர் ஹைதராபாத்தில் நடந்த மாநாடு, பாரதத்தின் சிறந்த குடிமகன் மற்றும் ஜனாதிபதி டாக்டர். ராஜேந்திர

பிரசாத் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது. மகா மண்டலத்தின் மதிப்பு மற்றும் மண்டலம் நடத்தும் இத்தகைய மாநாடுகளின் மதிப்பு, ஆண்டுக்கு ஆண்டு ஏறிக்கொண்டே போகிறது. இந்த ஆண்டு, இந்த மாநாட்டைத் துவக்கி வைப்பதற்கு வந்திருக்கும் மேதகு ஸ்ரீ ஜயசாமராஜ ஒடெயார் அவர்களை வரவேற்பதில் நாம் மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

பாரம்பரிய மற்றும் நவீன கல்விகளைக் கற்றவராகவும், உலகம் முழுக்க பயணித்ததால் கிடைத்த அனுபவங்களிலிருந்து மிகச் சிறந்த நிர்வாகியாகவும், கவித்துவ மற்றும் தத்வஞானம் நிறைந்த அறிவு நிறைந்தவராகவும், அனைத்து பிரச்னை களுக்கும் அறிவியல் பூர்வமான தீர்வுகளைக் காண்பவராகவும் நாம் மேதகு மகாராஜாவைப் பார்க்கிறோம். ஆகவே, இந்த மாநாடு இத்தகைய ஒருவரால் துவக்கப்பட்டு நடப்பதை மிகவும் பொருத்தமான ஒன்றாகக் கருதுகிறோம். இத்தகைய மாநாட்டில் பங்கேற்றுப் பேசுவதில் மிகவும் பெருமையாக நாம் கருதுகிறோம்.

நாம் தற்போது அறிவியல் யுகத்தில் வாழ்ந்து வருகிறோம். சமூகத்தில் அறிவியலின் தாக்கம் மிகவும் அதிகமாக இருக்கிறது. நாம் சுகமாக வாழ்வதற்கு அறிவியல் கண்டுபிடி ப்புகளே உதவி வருகின்றன. அறிவியல் கண்டுபிடிப்புகளாலும், வளர்ச்சியாலும் மனித வாழ்க்கை அனைத்து விதங்களிலும் மேம்பட்டிருக்கிறது. உலகமே இதனால் முன்னேறி வருகிறது என்று சொல்லலாம். அறிவியல் மேலும் பல அற்புத செயல் களை / கண்டுபிடிப்புகளை நிகழ்த்தும் என்று எதிர்பார்க்கலாம். அறிவியல் விஞ்ஞானிகளில் சிலர் பிற்காலத்தில் தத்வ ஞானிகளாக மாறி, எல்லாம் வல்ல அந்த இறைவனைப் பற்றிய ஆராய்ச்சியில் தங்களை ஈடுபடுத்தி, அவனைப் பற்றிய உண்மை களை வெளிக்கொண்டு வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நாமும் அதையே விரும்புகிறோம். ஆனால், அறிவியல் வளர்ச்சியால் மனிதகுலமானது ஒரு மிகப்பெரிய அழிவையும் எதிர்நோக்கியிருக்கிறது. உலகையே அழிக்கவல்ல ஆயுதங்கள் மனிதர்களின் வசம் உள்ளன.

உலகில் எங்கு பார்த்தாலும் பனிப்போர் நிலவுகிறது. 'படைப்புக்கு ஒரு காரணம் உள்ளது. மற்றும் மனிதனும் படைப்பில் ஒரு அங்கம்தான்' என்னும் விஷயம் அறிவியல் வளர்ச்சியால் மறக்கப்பட்டு வருகிறது. இந்த வளர்ச்சியால், மனிதன் வேறு எந்த படைப்பையும் மதிப்பதில்லை. விஷயம் மற்றும் ஆத்மா வுக்கிடையே சமநிலை இல்லாததுதான் இந்த பனிப்போர் மற்றும் அழிவு ஆகியவற்றுக்குக் காரணம். மனித மனமும் ஆத்மாவும் அறிவியல் வளர்ச்சியின் சமநிலைக்கு வரும் வரையில், இத்தகைய அழிவுக்கான சூழ்நிலை இருந்துகொண்டே இருக்கும். ஆகவே, உலகத்தில் உள்ள அனைத்து முக்கிய தலைவர்களின் சிந்தனையும், மனித வளர்ச்சிக்கான வழிகளை கண்டுபிடித்துக் கொண்டே இருப்பதிலும், அந்த மனிதர்களின் சமூக நிலையையும், ஆன்மிக நிலையையும் மேம்படுத்திக் கொண்டே இருப்பதிலும், செலவழிக்க வேண்டியதாகிறது. அப்போதே மேற்சொன்ன அழிவு ஆயுதங்கள், வளர்ச்சிக்கான ஆயுதங்களாக மாறக்கூடிய சாத்தியம் உள்ளது.

நமது ஸ்ரீமன் மத்வாசார்யரின் நோக்கமும் இதுவாகத்தான் இருந்தது. போலவே நமது ஆன்மிக உலகின் பிற மத ஆசார்யர் களின் சிந்தனையும். தற்கால இளைஞர்கள், அனைத்திலும் அறிவியல் பூர்வமாக கேள்விகளைக் கேட்டு, அதன்பிறகே திருப்தியடைகிறார்கள். எதையும் அவர்கள் அப்படியே ஏற்றுக் கொள்வதில்லை. சோதனை செய்து முடிவுகளை பார்க்க முயல் கிறார்கள். மனோதத்துவ விஷயங்களில் இத்தகைய சோதனைகளுக்கு வழியில்லை. ஆனால் அதற்கும் ஒரு மாற்று வழி கண்டுபிடித்தால், இந்த அறிவார்ந்த சமூகம் அதை ஏற்றுக்கொள்ளும். நமது வேதங்கள், பிரம்மசூத்திரங்கள், பகவத் கீதை, புராண இதிகாசங்களுக்கு நமது ஸ்ரீமன் மத்வாசார்யர், நடைமுறைக்கு ஒத்த விளக்கங்களைக் கொடுத்திருக்கிறார். அறிவியலுக்கும், பொதுஅறிவுக்கும் ஏற்றவாறு அவரது விளக்கங்கள் இருக்கின்றன. பிரத்யட்சத்திற்கும், பொது அறிவிற்கும் அவர் மிகப்பெரிய முக்கியத்துவத்தைக் கொடுத் திருக்கிறார். 'பார்ப்பதை மட்டுமே நம்புவது' என்பதே அவரைப் பொறுத்தவரை உண்மை என்று கூறுகிறார்.

நவீன உலகில், அறிவியல் ரீதியாக சிந்திக்கும் / செயல்படும் வாலிபர்களுக்கு, மனோதத்துவ விஷயங்களை அறிவியல் ரீதியாக கையாளும் ஶ்ரீமன் மத்வாசார்யரின் அணுகுமுறை கண்டிப்பாக பிடிக்கும். ஶ்ரீமன் மத்வாசார்யரின் மிகச்சிறந்த விளக்கங்களை, உரியவர்களுக்கு சரியான முறையில் விளக்குவதே மஹா மண்டலம் மற்றும் மண்டலம் நடத்தும் இந்த மாநாட்டின் நோக்கமாகும்.

மஹா மண்டலத்தின் குறிக்கோளை எட்டுவதில், இன்று நாம் பங்கேற்றிருக்கும் இந்த மாநாடு உதவி புரிகிறது. ஶ்ரீமன் மத்வா சார்யரின் கருத்துகளை, போதனைகளை பின்பற்றுபவர்களை ஒருங்கிணைக்கும் வேலையை இந்த மஹா மண்டலம் செய்து வருகிறது. இக்காலத்தில், தனியாக செயல்பட்டால் சாதிப்பதை விட ஒரு குழுவாக செயல்பட்டால் சாதிப்பது மிகவும் அதிகமாக இருக்கிறது. ஒரு நிறுவனமானது தான் செயல்படுவதற்கு தேவையான வசதிகளை தன்னகத்தே வைத்திருக்கும். அனைத்து மாத்வர்களையும் ஒருங்கிணைத்து ஒரு நிறுவனமாக மாற்றி, அந்த ஒரு குழுவின் நலனுக்காக மட்டுமல்லாமல் மொத்த மனித குல மேம்பாட்டிற்காகவே விளங்கவேண்டும் என்பதே இந்த மஹா மண்டலத்தின் உயரிய நோக்கமாகும். உலக / பொது நலனுக்காக மாத்வர்கள் அனைவரும் ஒருங்கி ணைத்து செயல்பட்டால், அவர்களால் மிகப்பெரிய அளவிலான மாற்றங்களை இந்த உலகில் கொண்டு வரமுடியும். ஶ்ரீமன் மத்வாசார்யரின் கருத்துகள் / போதனைகள் யாவும், உலகில் உள்ள அனைத்து மக்களின் நலனுக்காகவே / மேம்பாட்டிற் காகவே உள்ளன என்பது நமக்கு தெரிய வருகிறது. அவர் சொன்னதையே செய்தார். அனைத்து மக்களின் மதிப்பைப் பெறுவதற்கு அது மிகவும் சரியான வழியாகும்.

அவரது மிகச்சிறந்த கிரந்தமான ‘தாத்பர்ய நிர்ணய’த்தில், ஒருவர் தகுந்த மரியாதையைப் பெறவேண்டுமெனில், அதற்கு அவரது பிறப்போ, கல்வியோ மட்டும் காரணமல்ல, அவரது மனத் தூய்மையும், அனைத்திலும் சிறந்தவனான இறைவனிடம் அவருக்கு இருந்த பக்தி மற்றும் நம்பிக்கையுமே முக்கிய காரணமாக இருக்க முடியும். ஆசார்யரின் வாழ்க்கை வரலாற்றி

லிருந்து நமக்குத் தெரிய வருவது என்னவென்றால், அவர் தனது தத்வ விளக்கங்களை தமது வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு மட்டுமல்லாமல், உண்மையான பக்தி மற்றும் பற்றற்ற தன்மை கொண்ட யாருக்கும் விளக்கி அவர்களை மேம்படுத்தியிரு க்கிறார் என்பது தெரியவருகிறது. அத்தகைய சிலர், (அவர்கள் அடைந்த வழிமுறைகள் வேறாக இருந்தாலும்) மோட்சத்தை அடைந்திருக்கின்றனர் என்று அறிகிறோம்.

தற்கால வாலிபர்கள், தற்காலிக விஷயங்களில் தங்களின் மனதைப் பறிகொடுத்தவர்களாக இருந்து, ஸ்ரீமன் மத்வாசார்யரின் மிகச்சிறந்த மற்றும் நடைமுறைக்கு ஒப்பக்கூடிய விளக்கங் களைப் பற்றிய அக்கறையே இல்லாமல் இருக்கின்றனர். தற்போது இருப்பவர்களில் பெரும்பாலானவர்கள், தங்கள் பிறப்பினால் மட்டுமே தங்களை மாத்வர்கள் என்று சொல்லிக் கொள்கிறார்களே தவிர, ஸ்ரீமதாசார்யரின் தத்வங்களை புரிந்து கொண்டதாலும், அவற்றை தம் வாழ்க்கையில் செயல்படுத்து வதாலும் அல்ல. ஸ்ரீமதாசர்யரின் தத்வங்களை விளக்கங்களை, நமது இளைஞர்களின் மனதில் ஏற்றி, அவர்களுக்கு புரிய வைக்க வேண்டிய வேலையே இந்த மஹா மண்டலத்தின் முக்கிய வேலையாக இருக்க முடியும். அதில் நிறைய நடைமுறை பிரச்னைகள் வரலாம்.

மாத்வர்கள், அனைத்தையும் துறந்து, முனிவர்களைப் போல வாழ்ந்திருந்த காலம் முடிந்துவிட்டது. மன்னர்களின் ஆதரவு, மானியங்கள் ஆகியவை கிடைத்த நாட்களும் தற்போது இல்லை. மேலும், அவர்கள் (மாத்வர்கள்) சமூகத்தில் மிகவும் முன்னேறியவர்களாக இருப்பதால், அவர்களை தாழ்த்தும் (கீழே இழுக்கும்) வேலையும் நடைபெற்று வருகிறது. அவர்களுக்கு தாமாக கிடைக்கவேண்டிய வாய்ப்புகளும் மறுக்கப்படும் காலம் இது. வலிமையான பண்பாட்டினைக் கொண்டிருப்பதால், மோட்ச த்திற்கான வழியைக் காட்டக்கூடியவர்களாக இருந்தாலும், இவர்களின் நிதிநிலைமை மிகவும் மோசமாகவே இருக்கிறது. இத்தகைய நிலையில், அவர்கள் தங்களின் இந்த பண்பாட்டினை இழக்கும் அபாயத்தை எட்டியிருக்கின்றனர். ஸ்ரீமதாசார்யரின் தத்வங்களை புரிந்து கொள்வதில் அக்கறை காட்டுவதில்லை

என்று தற்கால வாலிபர்களை குறை சொல்லிப் பயனில்லை. வாழ்வதற்கு தேவையான அடிப்படை தேவைகளை அடைந்த பிறகு, எந்தவொரு நிறுவனத்திற்கும் அவர்களை தங்களின் பண்பாட்டினின் அருமைகளை புரிய வைப்பதில் பிரச்னை இருப்பதில்லை. ஆகையால், மஹா மண்டலமானது தங்களின் சமூக மற்றும் நிதிநிலை கடமைகளை கருத்தில் கொள்ள வேண்டும்.

சாஸ்திரங்களில் கைதேர்ந்த ஒரு சில பண்டிதர்களை மட்டும் நாம் உருவாக்கினால் போதாது. நமது மக்கள் ஸ்ரீமதாசார்யரின் தத்வங்களைப் படித்து, அதில் அடங்கியிருக்கும் ஆழ்ந்த கருத்துகளை புரிந்து கொள்ளும்போது மட்டுமே, அவற்றை பரவலாக்க முடியும். ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களை வேறு எந்த மொழியில் மொழிபெயர்த்தாலும், அந்த வேலை எவ்வளவு சிறந்ததாக இருந்தாலும்கூட, மூலமொழியில் இருக்கும் சுவை, பொருள் ஆகியவற்றை மாணவர்கள் அப்படியே புரிந்துகொள்ள முடியாது.

ஆகவே, நமது இளம் பிள்ளைகளுக்கு சம்ஸ்கிருத மொழியை கற்பிப்பதற்கு அனேக இடங்களில் ஆசிரியர்களை / வகுப்புகளை நியமித்து தக்க ஏற்பாடுகளை செய்யவேண்டும். நமது முக்கிய புராண, இதிகாசங்கள், நமது பண்பாட்டின் மிகச்சிறந்த கிரந்தங்கள் அனைத்தும் சம்ஸ்கிருதம் என்னும் அற்புத மொழியிலேயே உள்ளது. சம்ஸ்கிருதத்தை கற்றுக் கொடுக்கும் பழைய முறையே நன்றாக வேலை செய்தாலும், அதை மேலும் பரவலாக்க, ஒரு புதிய வகையைக் கண்டுபிடிக்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளோம். பண்பாட்டினை / சாஸ்திரங்களை அறிந்த பண்டிதர்கள், மிகக் குறைந்த அளவிலேயே இருந்தாலும், அவர்கள் அந்த பண்பாட்டின் ஏதோவொரு கிளையை நன்கு படித்து தங்கள் வாழ்க்கையையே அதற்காக அர்ப்பணித்தவர்கள். இதனால், நமக்கு மிக அருமையான பண்டிதர்கள் பலர் கிடைத்தார்களே தவிர, அதனால் சமூகத்திற்கு அதிக பலன் கிடைக்கவில்லை. இன்றைய சூழ்நிலையில், மாணவர்களை தங்களின் பள்ளிப் படிப்பினை விட்டுவிட்டு சாஸ்திரங்களை படிக்கக் கூப்பிடுவது என்பது கஷ்டமான காரியமாகும். இது

சரியான வழியாகத் தோன்றினாலும், நடைமுறைக்கு சாத்தியமானதல்ல.

சாஸ்திரங்களை கற்பிப்பதற்காக இன்று இருக்கும் சில பாட சாலைகளைப் பார்த்தால், இன்றைய மாணவர்கள் ஏன் அதில் படிக்க வருவதில்லை என்பது புரிகிறது. அப்படி வருபவர்களும், வேறு பள்ளிகளில் இடம் கிடைக்காததால் வந்தவர்களும், மிகவும் ஏழையாக இருந்து அந்தப் பள்ளிகளில் படிக்க முடியாத வர்களாகவுமே இருக்கின்றனர். ஆகையால், மஹா மண்டலத் திற்கு, மாணவர்களின் பொருளாதார நிலைமையை கணக்கில் ஏற்றுக்கொண்டு, கூடவே நமது சாஸ்திரங்களில் அதிக ஆர்வத்தைத் தூண்டுமாறு செய்வதே, முக்கியமான கடமையாக இருக்க வேண்டும். சாஸ்திரங்களைப் படிப்பவர்களாக இருந்தாலும், பள்ளிப் படிப்பையும் விடக்கூடாது. இன்றைய கால கட்டத்தில், ஒருவர் எவ்வளவுதான் பண்டிதராக இருந்தாலும், அவர் மற்றவர்களுக்கு பயனுள்ளவராக இருத்தல் அவசியம். ஆகவே, மஹா மண்டலமானது, ஒருவரை பண்டிதராக்குவதுடன், அவரை பயனுள்ளவராகவும் ஆக்குதல் வேண்டும். 'ஜீவன் பத்ராணி பஷ்யந்தி'. ஆன்மிக மற்றும் கலாச்சார ரீதியாக மேம்படுவதற்கு, முதலில் ஒரு அடிப்படை வாழ்க்கை முறையாவது வேண்டும்.

ஆன்மிக மற்றும் நீதிநெறியில் உச்சத்தை அடைவதற்கு, சுத்தமான மற்றும் ஆரோக்கியமான உடல்நலம் வேண்டும் என்பதை நமது ஸ்ரீமதாசார்யர் தமது சொந்த வாழ்க்கையிலேயே உதாரணம் காட்டியிருக்கிறார். ஸ்ரீஆசார்யர், அற்புதமான, தூய்மையான தேகத்தைக் கொண்டிருந்தார். 32 வாலிபர்களுடன் மல்யுத்தம் செய்து அவர்களை வெல்பவராகவும் இருந்தார். நூறு பேரால் சேர்ந்து நகர்த்த முடிந்திராத, ஒரு மிகப்பெரிய பாறையை தன் ஒரே கையில் தூக்கும் வலிமையைப் பெற்றிருந்தார்.

நமது மாத்வ மாணவர்களுக்கு அவர்களின் பள்ளிப் படிப்பிற்காக உதவவேண்டும் என்பதை மஹா மண்டலம் ஏற்கனவே அறிந்திருக்கிறது. இதற்காக ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு, அதில்

நன்கொடைகளும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இதற்கு, கல்வி நிதி என்று பெயரிப்பட்டுள்ளது. இந்த திட்டத்தால் குறிப்பிடத் தக்க வெற்றியும் கிடைத்திருக்கிறது. அடுத்த ஜூன் மாதத் திலிருந்து மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கப்பட உள்ளது. மண்டலத்தின் கீழ், மாணவர்களுக்கான இரு விடுதிகள் ஒன்று மைசூரிலும் மற்றொன்று தார்வாடிலுமாக வெற்றிகரமாக செயல்பட்டு வருகின்றன. இரு இடங்களிலும் விடுதிகள் சொந்த கட்டிடங்களிலேயே நடந்து வருகின்றன. மண்டலத்தின் குறிக்கோளை எட்டும் வழியில் இது ஒரு முக்கிய படியாகும்.

சமஸ்கிருதம் படிக்கும் சில ஏழை மாணவர்களுக்கு உதவித்தொகையும் வழங்கப்பட்டு வருகின்றன. ‘தத்வ வாத’ என்னும் தலைப்பில் கன்னட மற்றும் ஆங்கில மொழியில் ஒரு மாத பத்திரிக்கையை மஹா மண்டலம் நடத்தி வருகிறது. இந்தப் பத்திரிக்கை ஏற்கனவே புகழ் பெற்றிருந்தாலும், அதன் நிர்வாகக் குழுவினர் இதனை மேலும் மேம்படுத்தும் / தரத்தை உயர்த்தும் எண்ணத்தில் இருக்கின்றனர். சில நிதி நெருக்கடிகள் இருந்தாலும், அந்த பத்திரிக்கையை சுயசார்ப்பற்ற நிலையை அடையச் செய்யவேண்டும் என்று மஹா மண்டலத்தினர் கருதி, அதற்கான வழிமுறைகளை செய்து வருகின்றனர்.

மஹா மண்டலத்தின் மிகப்பெரிய சாதனை என்னவென்றால், ’பூர்ண ப்ரக்ஞ வித்யாபீட’ என்னும் மிகப்பெரிய சம்ஸ்கிருதக் கல்லூரியை பெங்களூரில் கட்டியதுதான். குறைந்த காலத்தில் எழுந்துள்ள அந்த அற்புதமான கட்டிடம், பாராட்டிற்குரியது. அங்கு படிக்கும் சில மாணவர்கள் வருங்காலத்தில் மிகப்பெரிய பண்டிதர்களாக வருவார்கள். அங்கு படிக்கும் மாணவர்கள், தங்களின் படிப்பை முடித்தபிறகு தங்களின் வாழ்க்கையை எப்படி நடத்தப் போகிறார்கள் என்பதை மண்டலம் கவனிக்க வேண்டும். இதுவரை செய்திருக்கும் சிறு வேலையை, மிகப்பெரிய அளவில் வெற்றிகரமாக மண்டலம் நடத்தும் என்று அனைவரும் நம்பிக்கையுடன் காத்திருக்கின்றனர்.

மண்டலம் செய்யவேண்டிய மிகவும் அவசரமான, அவசியமான செயல் என்னவென்றால், ஸ்ரீமதாசார்யர் மற்றும் அவரது

உரையாளர்களான ஸ்ரீஜயதீர்த்தர், ஸ்ரீவியாசராயர், ஸ்ரீவாதிராஜர் மற்றும் ஸ்ரீராகவேந்திர ஸ்ரீபாதங்களவர் ஆகியோரின் கிரந்தங் களை ஆராய்ச்சி செய்வதுதான். இந்த வேலையில் கற்றறிந்த அறிஞர்கள் அமர்த்தப்பட வேண்டும். இந்த ஆராய்ச்சியின் முடிவில், ஸ்ரீமதாசார்யரின் தத்வ கிரந்தங்களை படிக்க வரும் மாணவர்களுக்காக, சுலபமான மற்றும் சரியான பாடப் புத்தகங்கள் தயாரிக்கப்பட வேண்டும்.

ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களை ஆங்கிலத்தில் மற்றும் பிற மாநில மொழிகளிலும் மொழிபெயர்க்க வேண்டும் என்று பலர் விரும்புகின்றனர். நம்மைப் பொறுத்தவரையில் அது பயனற்றதும், முடியாததாகும் ஆகும். மிகச்செறிந்த தத்வ விசாரங்களை பிற மொழிகளில் மொழிபெயர்ப்பது மிகவும் கடினமான செயலாகும். மொழிபெயர்ப்பினை புரிந்து கொள்வதற்கும்கூட, ஒருவர் நியாய, வியாகரண, பூர்வ மீமாம்சை ஆகியவற்றில் தேர்ந்தவராக இருக்கவேண்டும். அப்படி இல்லையேல், அவை அவருக்கு புரியப் போவதில்லை. சில சமயங்களில், மொழிபெயர்ப்புக்கு, மூல நூலே உரையாக மாறிவிடலாம். ஆகவே, அறிஞர்களுக்கு மொழிபெயர்ப்பு தேவையில்லை; புதிதாக படிப்பவர்களுக்கு மொழிபெயர்ப்பு புரியப்போவதில்லை.

தற்போதைய தேவை என்னவெனில், எளிய சமஸ்கிருதத்தி லேயே, புரியக்கூடிய வகையில் இந்த கிரந்தங்கள் தயாரிக்கப்பட வேண்டும். புதிதாகக் கற்க வரும் மாணவர்களுக்கு இவை பயன்படும். இத்தகைய புத்தகங்களில் மிகவும் கடினமான சொற்களைப் பயன்படுத்தக்கூடாது. பல வகுப்பில் படிக்கும் மாணவர்களுக்கு பயன்படும் வகையில் இவை தயாரிக்கப்பட வேண்டும். அப்போதே மறுமலர்ச்சி உண்டாகும்.

ஸ்ரீமதாசார்யரின் வாதங்கள், மிகச்சிறந்த தர்க்கத்திலும், ஆதாரங்களிலும், அமைந்தவை. அவரது முடிவுகள் பொது அறிவுக்கு எட்டுமாறு இருக்கக்கூடியவை. எந்தவித ஆதார மில்லாத தர்க்கங்களையும் அவர் நம்மிடம் திணிப்பதில்லை. அவர் சொன்னதற்காக மட்டும் எதையும் யாரும் பின்பற்றத்

தேவையில்லை என்கிறார். அப்படி திணிக்கவேண்டுமெனில், அவருடைய சொந்தக் கருத்துகளாக இல்லாமல், நன்கு அறியப்பட்ட ஆணித்தரமான ஆதாரங்களுடன் கூடிய [37] கிரந்தங்களை அவர் எழுதியிருக்கத் தேவையேயில்லை. மனோ தத்துவ, தத்வ பிரச்னைகளை கையாள்வதில் அவர் மிகச் சிறந்தவராக விளங்குகிறார். அவரது ஏதாவது ஒரு கிரந்தத்தை முழுமையாக படித்தவரும்கூட, தத்வ விஷயங்களில் விற்பன்னர் ஆகி, அவரது கோட்பாடுகளை உலகத்திற்கு எடுத்துச் சொல்ல முழுத்தகுதி படைத்தவராகி விடுகிறார். இதிகாச புராணங்களில் ஏதேனும் ஒரு இடத்தில் குழப்பம் இருந்தால், மற்றவர்களைப் போலல்லாமல், ஸ்ரீமதாசார்யர் அந்தக் குழப்பத்தை அற்புதமாக தீர்த்து வைக்கிறார்.

ஸ்ரீமதாசார்யரின் எழுத்தாள, வரலாற்று, நாடக ஆளுமைத் திறன், அவரது மிகச்சிறந்த கிரந்தமான 'மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில்' முழுமையாக வெளிப்படுகிறது. பல இதிகாச சம்பவங்கள் அழகாகக் கோர்க்கப்பட்டு, ஒரு அற்புத சித்திரமாக படிப்பவருக்கு காட்டப்படுகிறது. பல்வேறு குழப்பங்கள், பிரச்னைகள் ஆகியன மிகவும் கவனமாக தீர்க்கப்பட்டுள்ளன. இந்த கிரந்தம் மட்டும் இல்லையெனில், பல புராண இதிகாசங் களைப் படிப்பவர் மனதில் இன்னும் குழப்பங்கள் நிறைந்திருக்க வாய்ப்புண்டு.

ஆகவே, ராமாயண, பாரதங்களை விடவும் ஸ்ரீமதாசார்யரின் மகாபாரத தாத்பர்ய நிர்ணயம் மிகவும் முக்கியமான கிரந்தம் என்று சொல்லலாம். ஸ்ரீமதாசார்யருடையது, நம்பிக்கை தரும்படியான தத்வம். அவர் எதையும் விளக்க பயப்பட்டு தப்பியோடும் தத்வஞானி அல்ல. மோட்சத்தைப் பற்றி அவர் விளக்குவது மிகவும் உறுதியானதாக இருக்கிறது. எந்தவொரு இலக்கையும் விட அதை அடைவதற்கு எடுக்கப்படும் வழிமுறைகள் முக்கியமானவை என்று கருதுகிறார். மனிதனே படைப்பின் மையப்புள்ளி என்றும் அவனுக்கு ஒரு நோக்கம் இருக்கிறது என்கிறார். ஒவ்வொரு மனிதனும், தன்னுடைய வளர்ச்சிக்காக உழைப்பது மட்டுமின்றி, சமுதாய மேம்பாட்டிலும் பங்கெடுக்க வேண்டியவனாகிறான்.

'தேன வினா த்ருணமபி ந சலதி', 'நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' ஆகியவற்றை பிரம்ம சூத்திரத்தின்படி சரியாக விளக்கவில்லை யெனில், படிப்பவர்களுக்கு குழப்பமே ஏற்படும். கர்த்ருத்வத்தைப் பற்றி கேள்விகள் இல்லாதவர்களே கிடையாது. பாரத தாத்பர்ய நிர்ணயத்தில், இதற்கான விளக்கத்தை ஆசார்யர் தெளிவாக விளக்கியிருக்கிறார். அவரைப் பொறுத்தவரை, மனிதனின் செயலானது, அவனது சுபாவம், கர்ம வினை மற்றும் அவன் எடுக்கும் முயற்சிகள் ஆகியவற்றின் விளைவாகவே இருக்கிறது. கடைசியாக சொன்ன 'எடுக்கும் முயற்சிகளே' மற்ற இரண்டையும் விட முக்கியமானவையாகும். ஏனெனில் இதுவே அவற்றை செலுத்தும் காரணியாக இருக்கிறது. ஆன்மிக மேம்பாட்டிற்கு மனித முயற்சியே முக்கிய காரணம் என்கிறார். மொத்த உலகத்தின் செயல்களையும் கட்டுப்படுத்துபவனான பர பிரம்மன், தகுதியின் அடிப்படையிலேயே மனிதர்களுக்கு அவர்களுக்குத் தேவையான நீதியை / முடிவை வழங்குவேன் என்று கூறியிருக்கிறார்.

மஹா மண்டலத்தின் பல்வேறு திட்டங்கள் வெற்றியடையவும், அவர்களுக்கு பொருளாதார, மனிதவள உதவிகள் இந்த சமூகத்தி லிருந்து கிடைக்கட்டும் என்று வேண்டுகிறோம். இந்த மாநாட்டி லிருந்து நாம் அனைவரும் பல விஷயங்களை கற்றிருக்கிறோம் என்று நம்புகிறோம். மண்டலத்தின் வளர்ச்சிக்குத் தேவையான யோசனைகளை நீங்களும் வழங்க வேண்டும் என்று நாம் விரும்புகிறோம்.

***

## ஆன்மிக அன்பர்களுக்கு ஸ்ரீகளவரின் செய்தி

இன்றைய உலகத்தில், பிராமண சமூகமானது பல்வேறு பிரச்னைகளில் சிக்கியிருக்கிறது என்பது அனைவரின் அபிப்பிரா யமாகும். இதற்கு என்ன காரணம்? இதில் தவறு யாருடையது? என்று ஆராய்வது இந்த கட்டுரையின் நோக்கமல்ல. வர்ணாசிரம தர்மங்கள் என்றால் என்ன? அவற்றின் சிறப்பு எத்தகையது? வர்ணாசிரம தர்மங்கள், நம் சமூகத்தை எந்த அளவுக்கு அமைதியாக இருக்கச் செய்யும்? ராமராஜ்யத்திற்கும்கூட வர்ணாசிரம தர்மங்கள்தானே ஆதாரம் என்றும் கேட்கலாம். வர்ணாசிரம தர்மங்கள் அழிந்தன. மக்கள் தர்மத்திலிருந்து விலகினர். நாத்திகர் ஆயினர். நம் சமூகமே நாசமானது. கலி பிரவேசம். இன்னும் என்னென்ன ஆகப்போகுதோ? என்று சமூகத்தையே தலை மேல் கை வைத்து அவமானப்படுமாறு கட்டுரைகளை எழுதமுடியும். இத்தகைய கட்டுரைகள் உண்மை யையே பேசினாலும், பேச வந்த விஷயத்துக்கு இவை சற்றும் பொருந்தாத விஷயங்களாகும். கடந்த காலத்தின் சிறப்புகளை மறுபடி மறுபடி கேட்டுக் கொண்டிருப்பது யாருக்கும் பிடிப்பதில்லை.

தர்மம் அழிந்தது, சமூகம் நாசமானது, பிராமணர் கெட்டுப் போயினர், நல்வழியே தென்படுவதில்லை என்னும் அபஸ்வர பேச்சுகளை பேசுவதிலும் மக்களுக்கு உற்சாகம் இருப்பதில்லை. பிராமண சமூகமானது மறுபடி மீண்டு எழுவதற்கு, புகழப்படும் நிலையை அடைவதற்கு செய்ய வேண்டிய வேலைகள் என்ன? இதைப் பற்றி சிந்திக்காமல், பிராமண சமூகமானது பழைய பெருமைகளைப் பற்றி மட்டும் பேசிக்கொண்டிருந்தால் அது சரியல்ல. சமூகத்தை முன்னேற்றுகிறோம் என்பவர்களின் பார்வை இந்தப் பக்கமும் விழவேண்டும். சனாதன தர்மத்தை விரும்புபவர்களும், பிராமண சமூகத்திற்கு நல்ல தலைமைகளும் இருக்கும் இந்த சூழ்நிலையில், பிராமண சமூகத்தின் எழுச்சிக்கு செய்யவேண்டிய செயல்களை, மிகவும் தெளிவாக, எவ்வித சார்பும் இல்லாமல், பயப்படாமலும், அறிவுபூர்வமாகவும் செய்ய வேண்டும். 'சர்வ நாஷே சமுத்பன்னே அர்த்யந்த்ய ஜதிபண்டித:' என்று சொல்வது போல, பிராமண சமூகத்தின் முக்கிய நோக்க

ங்களை காப்பாற்றிக் கொண்டு, எதிர் நோக்கும் அபாயங்களை சமாளிப்பதோடு, மறைந்து / அழிந்து போன சிறப்புகளை மறுபடி நிலைநிறுத்துவதற்கான தயாரிப்புகளை ஒரு சமூகம் வரவேற்க வேண்டும்.

சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள நெறிமுறைகளை, அதன் முக்கிய கருப்பொருள்களை உணர்ந்து, அதனை அப்படியே பின்படுத்த முடியாததற்கு குற்ற உணர்ச்சி கொள்ளத் தேவையில்லை. அதன் முக்கிய கருப்பொருளை உணராமல், அதனை அப்படியே பின்பற்றாமல் இருப்பதே, ஒரு சமூகத்தின் மேம்பாட்டிற்கு ஒரு முட்டுக்கட்டை என்று முக்கிய காரணம் சொல்லலாம். ஞானத்தை வளர்த்தல், அகிம்சை, பிக்ஷை ஏற்பது, பேராசைப்படாமல் வாழ்வது ஆகியவையே பிராமணர்களின் தர்மம் என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

பழைய காலங்களில் பிராமணத்வத்தை மறுபடி நிலைநிறுத்து வதற்கு, சனாதனிகள் தங்களில் தொழிலை தியாகம் செய்து, ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் நம் முன்னோர் செய்ததைப் போல, பரலோகத்தையே விரும்பி அதையே குறிக்கோளாக வைத்துக்கொண்டு, தபோ நிரதராக, மற்றவர்கள் தாமாக கொடுப்பதை மட்டும் பெற்று உண்டு வாழ்ந்து வரவேண்டும் என்று சொல்லி, இதுவே நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள சரியான வழி என்று சொன்னால், அது எவ்வளவு பேரின் காதுகளுக்கு இதம் அளிக்கும் என்று சொல்வது கஷ்டமான விஷயம் அல்ல. இப்படி இருக்க வேண்டும் என்று உபதேசம் செய்யும் சனாதனியாவது இப்படி வாழ்வாரா என்று சொன்னால் அதுவும் சந்தேகமே. முந்தைய காலங்களில் இப்படி வாழ்ந்ததற்கு இப்போது ஏன் வாழ முடியவில்லை என்று காரணம் சொல்வதும் கஷ்டம் இல்லை.

வர்ணாசிரம தர்மங்கள் கெடாமல் இருந்தபோது, பிராமணனை காப்பாற்றுவது நம் தலையாய கடமை என்று எண்ணி, இதர வர்ணத்தவர்கள் முழுமையாக நம்பி, அதன்படியே அந்த பிராமணனை அவர்கள் காப்பாற்றியதால், பிராமண சமூகமானது எந்தவித லௌகிக தொழிலிலும் ஈடுபடாமல் சுகமாக, சாஸ்திர

பாடங்களில் கவனம் கொடுத்து, மற்றவர்களுக்கு ஞானத்தை கற்பிக்கும் தொழிலில் மட்டும் ஈடுபட்டிருந்தனர். அந்த சூழ்நிலை மறுபடி வரவேண்டுமென்று சொல்லி, இந்த காலத்து பிராமணர்கள் தாங்கள் செய்து வரும் வேலையை / தொழிலை விட்டுவிட்டால், அவர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்துவது எப்படி?

அந்த காலத்தில் ஆத்யாத்ம ஞானார்ச்சனையிலும், தவத்திலும் ஈடுபட்டு, நதி தீரங்களிலும், புண்ணிய க்ஷேத்திரங்களிலும் வசித்து வந்த பிராமணர்களின் நலனை / மேம்பாட்டினை அரசு கவனித்துக் கொண்டிருந்தது என்று நினைக்கலாம். பெரிய வேலைகளில் இருப்பவர்களும், தொழில் செய்பவர்களும், விவசாயம் செய்பவர்களும், தங்களின் வேலைகளை / தொழிலை விட்டு மிகவும் அமைதியானதொரு வாழ்க்கையை வாழ்வதற்கு மகிழ்ச்சியுடன் தயாராக இருப்பர் என்பதில் சந்தேகம் தேவையில்லை.

இன்றைய காலத்தில் பிராமண சமூகத்திற்கு இருக்கும் சாதக பாதங்களை நாம் ஆராயாமல், பிராமணனின் மறுமலர்ச்சிக்கான வழிமுறைகளை வகுப்பது சாத்தியமாகாது. பல்லாயிரம் ஆண்டுகளாக, கல்வி கற்பது / போதிப்பது என்று இவற்றையே மிக முக்கியமான செயல் என்று கருதி அதிலேயே ஈடுபட்டு வந்திருக்கும் பிராமணனுக்கு 'அறிவு' என்னும் பெரிய செல்வம் மட்டுமே மிஞ்சியிருக்கிறது. பிராமணனின் பிற செல்வங்கள் அனைத்தும் பிறரால் திருடப்பட்டு / கவரப்பட்டிருந்தாலும், அறிவு என்னும் மிகப்பெரிய செல்வத்தை யாராலும் திருடமுடியவில்லை. பிராமணனுக்கு கௌரவம் கொடுத்து காப்பாற்றிவந்த பலர், ஒரு கட்டத்தில் அவர்களை கைவிட்டனர். அப்போது காப்பாற்றுபவர்கள் யாரும் இல்லாமல், பிராமணர்கள் தங்களை தாங்களே காப்பாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று.

தொழில் போட்டிகளில் பிராமணனுக்கு வெற்றி கிடைத்தபோது, பிறரின் பொறாமை / கோபத்திற்கு ஆளானார்கள். எண்ணிக்கை யில் அதிகமாக இருந்த பிறர், பிராமணர்களுக்கு அனைத்து விதங்களிலும் தொந்தரவு கொடுப்பதில் ஈடுபட்டனர். அரசு

வேலைகளில் பிராமணனுக்கு வாய்ப்புகள் குறைந்தன. வாழ்க்கைக்குத் தேவையான நவீன கல்விகளைக் கற்பதற்குச் சென்ற பிராமணர்களுக்கு, கல்விச்சாலைகளிலும் பிரச்னைகள் வந்தன. மக்களாட்சி திட்டத்தில், அதிக எண்ணிக்கையிலான பிற மதங்களைச் சேர்ந்தவர்களுக்கு நடுவில், எண்ணிக்கையில் மிகக் குறைவாக இருந்த பிராமணன் எழுப்பிய குரல் யாருக்கும் கேட்கவில்லை. பல உட்பிரிவுகளைக் கொண்ட இந்து சமூகம், பிராமணர் & இதரர் என்று இரு விதங்களாக பிரிந்து நின்றது.

கல்வியைத் தவிர வேறு பணிகளே வேண்டாம் என்று ஆயிரக் கணக்கான வருடங்களாக, உடலை வருத்தாமலேயே கழித்து விட்டதால் பிராமணனின் உடல்வலு குறைந்தது. இத்தகைய நிலையில் இருக்கும் பிராமணனின் கடமை என்ன? தங்களின் பண்பாட்டினை அழியாமல் காப்பாற்றுவது எப்படி? தான் போக வேண்டிய பரலோகத்திற்கு செய்ய வேண்டிய சாதனைகளை செய்வது எப்படி? இத்தகைய கேள்விகளுக்கான பதில்களே இன்றைய பிராமண சமூகத்திற்கு மிகவும் தேவையானதாகும்.

பிராமணன் நிம்மதியுடன் வாழவேண்டும். கௌரவத்துடன் வாழவேண்டும். நல்ல உடல் நலத்தைப் பெறவேண்டும். நிம்மதியான வாழ்க்கை என்பது ஆத்ம திருப்தி இல்லாமல் சாத்தியமில்லை. அரசு வேலைகளைவிட கல்வியறிவு கண்டிப்பாக தேவை. விவசாயம், வாணிபம், கைத்தொழில் ஆகியவற்றைப் பற்றிய அறிவு கண்டிப்பாகத் தேவை என்று கட்டாயம் இல்லாவிட்டாலும், இவற்றை அறிந்தவன், இவற்றின் மூலமாகவும் வெற்றியாளன் ஆகமுடியும். ஆக, நிம்மதியான மற்றும் கௌரவமான வாழ்க்கைக்கு, கல்வியறிவு மிகவும் அவசியமானதாகும்.

நல்ல வாழ்க்கை வாழ்வதற்கு, நவீன கல்வியறிவு தேவைப் படுவதால், சிறு வயதிலிருந்தே பள்ளி, கல்லூரிகளில் பல ஆண்டுகள் படித்து, அதன் மூலம் தங்கள் வாழ்க்கையை கட்டமைத்துக் கொள்ளவேண்டிய அவசியம் பிராமணர்களுக்கு இருக்கிறது. வாழ்க்கை முழுவதும் வெட்டியாக தின்று கழிப்பதிலேயே செலவிடுபவர்களுக்கு, நம் பழங்கால கல்வியை

முறையாக கற்றுக்கொடுப்பதற்கான வாய்ப்புகளே மிகவும் குறைவு. நமது பண்டைய கல்வியானது, கல்வியறிவுக்காகவும், பரலோகத்துக்கு பயன்படும் என்னும் திருஷ்டியிலும் மட்டுமே கற்றுக்கொள்ள வேண்டுமே தவிர, பணம் சம்பாதிப்பதற்காக இதை படிக்க வேண்டும் என்று சொல்வது சரியல்ல.

இறைவனின் அருளால் வாழ்க்கையை நடத்துவதற்குத் தேவை யான செல்வத்தைப் பெற்றவர்கள், லௌகிக விஷயங்களுக்கு மனதை பறிகொடுக்காமல், பிரம்மவித்யை யிலேயே ஈடுபட்டு, சிறுவயதிலிருந்தே அவற்றைக் கற்று, பண்டிதர்கள் ஆகி, சமூகத் திற்கு ஒரு நல்ல வழிகாட்டியாக மாறவேண்டியது மிகவும் அவசியமாகிறது. இத்தகையவர்களின் எண்ணிக்கை, பிராமண சமூகத்தில் மிகவும் குறைவாகவே இருக்கிறது; மாதம்தோறும் சம்பாத்தியம் செய்தே தம் வாழ்க்கையை நடத்தவேண்டும் என்ற நிலையில் இருப்பவர்களே அதிகமாக இருக்கின்றனர் என்றபிறகு, நமது பிரம்மவித்யை, நமது பண்டைய கலாச்சாரம், தத்வங்கள் ஆகியவை நமது பிராமணர்களுக்கிடையே வளர்வது எப்படி? பிராமணத்வம் மறுமலர்ச்சி பெறுவது எப்படி என்பதையும் கவனிக்க வேண்டும்.

அல்லது, சிறுவயதில் நடைமுறை வாழ்க்கைக்குத் தேவையான நவீன கல்விமுறையின்படி கல்வியைக் கற்று, வாழ்க்கையை அமைத்துக்கொண்ட பிறகு, பிராமணன் ஆனவன், தனது மதத்தின்படியான சாஸ்திரங்களைப் பயின்று, பிராமணத்வத்தை காப்பற்றிக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் வரவேண்டும். வாழ்க்கைப் பயணத்தில் போராடியவாறு, வாழ்க்கையின் பிரச்னைகளில் மூழ்கியுள்ளவர்களுக்கு, நம் பண்டைய சாஸ்திரங்களில் ஈடுபாடு ஏற்படும் வாய்ப்பு மிகவும் குறைவு. அப்படி வாய்ப்பு கிடைத்தாலும், அதில் ஆர்வம் உண்டாவது மிகவும் கஷ்டம். அப்படி ஒருவேளை ஆர்வம் ஏற்பட்டாலும், சிறு வயதிலேயே படிக்காமல் விட்டதை வயதானபிறகு படித்துப் புரிந்துகொள்வதென்பது முடியாத விஷயம். இப்படியாக பிரம்ம வித்யை, சம்சார வாழ்க்கை இவ்விரண்டையும் சரிசமமாக ஏற்று நடத்தி வருவது என்பது மிகப்பெரிய சவால். நமது சாஸ்திரங்களைப் படிப்பதில் எவ்வளவு விருப்பம் இருந்தாலும்,

அது நடைமுறை வாழ்க்கைக்கு / சம்பாதியத்திற்கு உதவாது என்கிற பயம் இருப்பதால், படிக்கத் தகுதியானவர்களும் அதை ஒதுக்குவது சகஜம்.

எல்லா இடங்களிலும் பாடசாலைகளை நிர்மாணம் செய்ய வேண்டும்; பண்டிதர்களை நியமிக்க வேண்டும்; மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கி அவர்களுக்கு சாஸ்திரங்களை கற்றுக் கொடுக்க வேண்டும். இதனால் பிராமணர்கள் அதிக எண்ணிக்கையில் பிரம்மவித்யையை கற்றுத் தேர்வார்கள் என்று ஒப்புக்கொண்டாலும், இதை நடைமுறைப்படுத்துவது எந்த அளவிற்கு சாத்தியம்? நடைமுறை வாழ்க்கை என்பது இதற்கு நேர்மாறாக இருக்கிறது என்கிற வாதத்தை மறக்கமுடியாது. குமரி முதல் இமயம் வரை, ஒவ்வொரு கிராமங்களிலும், ஒவ்வொரு ஊர்களிலும் அங்கங்கு சிறிய அளவில் வாழ்ந்திரு க்கும் பிராமணர்களுக்கு பாடசாலைகளை நிறுவி, அவர்களுக்கு பிரம்மவித்யையை கற்றுக் கொடுப்பது என்பது சாத்தியமில்லாத ஒன்று.

இப்படிப்பட்ட பாடசாலைகளை முக்கிய நகரங்களில் கட்டி, அதில் பிரம்மவித்யையை கற்றுக்கொடுப்பதன் மூலம், மாணவர்கள் தங்களின் பள்ளிப் படிப்பை விட்டுவிட்டு இங்கு வரவேண்டி யிருக்காது. இப்படி முக்கிய இடங்களில், பெரிய பாடசாலை களைக் கட்டி, அதில் மிகவும் குறைந்த அளவிலேயே மாணவர்கள் படிக்க வந்தால், அது பிராமணர்களுக்கிடையே கல்வியை பிரசாரம் செய்தது போல் ஆவதில்லை. அப்படியே அந்தந்த பாடசாலைகளில் படிக்க வரும் மாணவர்களும், வேறெங்கும் படிக்க இடம் கிடைக்காதவர்களும், வேறு வழி யின்றி ஏழ்மையில் படிக்க வருபவர்களாகவுமே இருக்கின்றனர். புத்திசாலிகளான மாணவர்களுக்கு பிரம்மவித்யையை படிக்கக் கிடைக்கும் வாய்ப்புகள் மிகக்குறைவு.

அப்படியெனில், பிராமண சமூகத்தில் பிரம்மவித்யையை பிரசாரம் செய்வது சாத்தியமே இல்லை என்று இல்லை. எப்படி சில நாடுகளில் வாலிபர்களுக்கு சிறிது ஆண்டு காலம் கட்டாயமாக ராணுவத்தில் வேலை செய்ய வேண்டும் என்று

சொல்கிறார்களோ, அதைப் போலவே பிராமண சமூகத்திலும், அதை மேம்படுத்த விரும்புவோர், பிரம்மவித்யையானது முழுவதுமாக அழிந்துபோவதற்கு முன், மாணவர்கள் சில ஆண்டுகள் கட்டாயமாக அதை கற்றுக்கொண்டே ஆகவேண்டும் என்று சொல்லவேண்டும். இத்தகைய ஏற்பாடுகள் நல்லபடியாக நடக்கவேண்டுமெனில், பிராமண சமூகத்தில் அனைவரும் ஒரே நோக்கத்துடன் மகிழ்ச்சியாக இதில் ஈடுபட வேண்டும்.

மத்திய மாநில அரசுகள், பல்வேறு துறைகளை, பூரண சுதந்திரத்துடன் தாங்கள் நிர்வகித்து வந்தாலும், சில முக்கிய துறைகளான, நாட்டுப் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள் ஆகியவற்றை மத்திய அரசு மட்டுமே தனித்து நிர்வகிப்பதைப் போல, பிராமண சமூகமும் பிரம்ம வித்யா சம்பந்தட்ட விஷயங்களில் மகிழ்ச்சியுடன் மத்திய நிறுவனங்களின் ஆலோசனைகளுக்கு மதிப்பு கொடுத்து நடப்பது மிகவும் முக்கியம்.

மேற்கண்ட யோசனைகள் நடைபெறுவது சாத்தியமே என்று எண்ணுவோம். பிரம்மவித்யா கல்வியை எப்படி பரப்புவது என்பதை சிறிது பார்ப்போம். பிராமணனுக்கு உபநயனம் என்பது முக்கியமான கர்மம். பிரம்மவித்யையை படிப்பதற்கு அதிகாரத்தைக் கொடுக்கக்கூடிய கர்மம். சிறுவனுக்கு 7வது வயதில் செய்யவேண்டிய இந்த செயலை, இன்றைய சமூகத்தில் இத்தனை சிறிய வயதில் செய்வது மிகக் குறைவாகவே இருக்கிறது. சுமாராக 11வது வயதில் உபநயனம் செய்வது அனைவருக்கும் சாத்தியமானதாக இருக்கிறது. அந்த வயதிலேயே சிறுவர்களுக்கு சிறிது அறிவு வளர்ந்து, கல்வியைப் படிப்பதற்கு ஏற்றவாறு இருக்கிறார்கள். இப்படி உபநயனம் ஆனபிறகு, ஓராண்டு காலம் பிரம்மவித்யைக்காக ஒதுக்கி வைத்து, அந்த சமயத்தில், வேறு எந்த கல்விக்காகவும் பள்ளிக்கும்கூட அனுப்பாமல், அந்த வடுவை ஓரிடத்தில் வைத்து, பிரம்மவித்யையை முழுவதுமாக கற்றுக்கொடுப்பது அவசியம்.

முந்தைய காலத்தில், வடுக்களை பற்பல ஆண்டுகள் குருகுல வாசத்தில் வைத்து, கல்வியைக் கற்பித்து குருகளின் அருளுக்குப் பாத்திரராகி செய்து வந்தனர். தற்போதைய காலத்தில், வடுவை ஓரிரண்டு ஆண்டுகளாவது இத்தகைய குருகுலத்தில் வைத்து கற்றுக்கொடுப்பது சாத்தியம் இல்லை என்று இல்லை. இத்தகைய ஓராண்டு குருகுல வாசத்திற்குப் பிறகு பள்ளி, கல்லூரியில் வாழ்க்கைக்குத் தேவையான பிற கல்விகளைக் கற்று, அதன்படி வாழ்க்கையை நடத்துவதற்கு எவ்வித தடையும் இல்லை.

இந்த ஓராண்டு காலத்தில் படிக்க வேண்டிய வழிமுறைகள் என்ன? எந்த கிரந்தங்களைப் படிப்பது? எங்கு படிப்பது? படிப்பதற்கான வசதிகள் எப்படி இருக்கவேண்டும்? இப்படி சிறிய காலத்தில் படிப்பதால் வரக்கூடிய நன்மைகள் என்ன? என்பதையெல்லாம் யோசிப்பது அவசியம். பிராமணனுக்கு வேத அத்தியயனம் மிகவும் அவசியம். ஆகையால் இந்த ஓராண்டு கல்வித் திட்டத்தில், வேத அத்தியயனமும் இருக்கவேண்டும். பிரம்மவித்யைக்கு சம்ஸ்கிருத மொழியின் அறிவு தேவையாதலால், சம்ஸ்கிருத எழுத்தினை முதலில் படித்துவிட்டு, இந்த காலத்தில் எவ்வளவு முடியுமோ அவ்வளவு மொழியறிவை அவர்கள் பெறவேண்டும். அமரகோசம் மற்றும் முக்கிய ஸ்தோத்திரங்கள் சிலவற்றை மனப்பாடம் செய்து கொண்டு கூடவே ருக்மிணீச விஜயம் அல்லது ரகுவம்சம் இவற்றிலிருந்து குறைந்த பட்சம் நான்கு சர்க்கங்கள் வரைக்கும் காவிய பாடம் ஆகுமாறு இந்த திட்டம் இருக்கவேண்டும். சொற்களின் மூலத்தை சொல்லும்படியான அறிவு வரவேண்டும். எளிய ஸ்லோகங்களின் அர்த்தம் மற்றும் அதன் இலக்கணக் குறிப்பு சொல்லும்படியாக விபக்தி, லிங்கம் ஆகிய ஞானத்தைப் பெறுவதும் இந்த காலத்தில் சாத்தியமே.

முன் சொன்னாற்போல, வடுகளுக்கு 11வது வயதில் உபநயனம் ஆகியிருப்பதால், அனைத்தையும் புரிந்துகொள்ளும் சக்தியும் நன்றாகவே வந்திருக்கும். வெளியுலகத் தொடர்பு இல்லாமல், குருகுலத்திலேயே இருப்பதால், திட்டமிட்டபடி ஓராண்டு காலத்தில் இவை அனைத்தையும் கற்றுக்கொடுப்பது

சாத்தியமே. அந்த வடு சாமர்த்தியம் உள்ளவனாக இருந்தால், இன்னும் அதிகமாக கற்பதற்கும் சாத்தியமே.

குருகுலவாசம் என்பது கட்டாயம் என்றான பிறகு, ஏழை, செல்வந்தர் என்கிற பேதம் மறைந்து, அனைத்து மாணவர்களும் ஒரே மாதிரியான கல்வியைக் கற்கவேண்டும். அது மட்டுமல்ல. அனைத்து சிறுவர்களும், சரியான வயதில், உபநயனமும், குருஉபதேசமும்கூட சிறந்த இடங்களில் (வித்யாபீட) நடந்து, அதே இடங்களில் அவர்களது குருகுல வாசமும் நடைபெற வேண்டும். இந்த திட்டம் நடைமுறைக்கு வரவேண்டுமெனில், பிராமண சமூகத்தில் இருக்கும் சிறுவர்கள் அனைவருக்கும் போதுமான குருகுலங்கள் இருக்க வேண்டும். இதற்கு நிறைய பணம் தேவையாக இருக்கும் என்றாலும், பிராமண சமூகத்தின் சக்திக்கு மீறியதல்ல. மேற்கண்ட யோசனைகள், மூன்று மதத்து பிராமணர்களுக்கும் பொருந்தும் ஆகையால், அந்தந்த மத சிறுவர்களுக்கு, அந்தந்த மத மடாதிபதிகள், மடங்களின் சக்திக்கு ஏற்றவாறு, குறைந்த பட்சம் 25 குருகுலங்களையாவது திறந்து, அந்த சிறுவர்களுக்கு உபநயனம் செய்வித்து, அவர்களுக்கு குருகுல கல்வி கொடுப்பது மிகவும் முக்கியமான கடமையாகும்.

சற்று வசதியாக இருக்கும் மடங்களில், நூற்றுக்கணக்கான மாணவர்களுக்கு குருகுலப் பயிற்சி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். மாணவர்களின் குருகுல கல்விக்காக அவர்களின் பெற்றோர்களுக்கு எவ்வித செலவுகளும் இருக்கக் கூடாது. நன்கு கற்றுத்தரும் ஆசிரியர்களை நியமித்து, மடாதிபதி கள் தம் நேரடி பார்வையில், மாணவர்களுக்கு கல்வி கற்றுக் கொடுப்பது மட்டுமல்லாமல், அவர்களுக்கு அந்த ஓராண்டு காலம் நல்ல உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றை செய்து கொடுப்பது, ஹரிப்ரீதியாகும் விஷயம். இத்தகைய இடங்களில் (மடங்களில்), ஆண்டிக்கு இருமுறை உபநயன நிகழ்ச்சிகள் நடைபெற வேண்டும். குருகுல கல்விக்கு உபநயனமே துவக்கம். கல்வியைக் கற்று வெளியேறிய மாணவர்களின் இடத்திற்கு புதிய வடுக்கள் வருவதற்கு தயாராக இருக்கவேண்டும். இப்படியாக ஒவ்வொரு மடத்திலும், தொடர்ந்து குருகுல

கல்விமுறை நடந்துகொண்டே வரவேண்டும். அந்த குருகுல கல்வியில் மட-பேதங்களே இல்லாமல், அவர்கள் எந்த மடத்தினராவது இருக்கட்டும், பக்கத்தில் இருக்கும் மடங்களில் கல்வியைக் கற்க முடிபவர்களாக இருக்க வேண்டும்.

பிராமண சமூகத்தில் இருக்கும் வடுகள் அனைவரின் கல்விக்காக இருக்கும் மடங்கள் போதுமா? என்ற கேள்வி எழுகிறது. போதாது என்றால், முக்கிய நகரங்களில், மடங்களின் மேற்பார்வையில் குருகுல கிளைகள் திறக்கப்பட வேண்டும். இந்த வேலைகள் பொதுமக்களின் உதவிகள் இல்லாமல், வெறும் மடங்களால் மட்டுமே நடக்கக்கூடிய செயல் இல்லை. அந்தந்த நகரங்களில் இருக்கும் மாத்வ சங்கங்களோ, சமிதிகளோ இவற்றை செய்யலாம். இந்த விஷயத்தில் கவனத்தில் கொள்ளவேண்டிய விஷயம் ஒன்று உண்டு. இப்படி பல்வேறு இடங்களில் கொடுக்கப்படும் கல்விமுறையானது, ஒன்றாகவே இருக்க வேண்டும். ஒரே பாடத்திட்டமாக இருக்கவேண்டும். பல வித பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள், ஒரே பாடத்திட்டத்தைப் படித்து, இறுதியில் ஒரே நிறுவனத்தில் நடத்தப்படும் இறுதித் தேர்வில் எப்படி தேர்வுகளை எழுதி தேர்ச்சி பெறுகிறார்களோ அப்படியே, குருகுல கல்வியானது அனைத்து இடங்களிலும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும்.

இதற்கு அனைத்து மடாதிபதிகளின் தலைமையில் ஒரு சங்கத்தை துவக்க வேண்டும். கல்விக்கு வரும் மாணவர்கள், அந்த சங்கத்து விதிமுறைகளுக்கு உட்பட்டு நடக்கவேண்டும்.

இத்தகைய சிறிய காலத்து கல்வியில், சமூகத்திற்கு உண்டாகும் நன்மை என்ன? பிரம்மவித்யையை பரப்புவதற்கு இது எப்படி உதவி செய்யும் என்னும் கேள்விக்கான பதிலை பார்க்க வேண்டியது அவசியம். சிறுவயதில் கற்ற கல்வியானது எப்போதுமே மறக்காது. ஓராண்டு காலமே ஆனாலும், திட்டமிட்டபடி, நல்ல சூழ்நிலையில், பெற்ற கல்வியானது என்றைக்கும் மனதிலிருந்து அழியாது. குருகுல கல்விக்குப் பிறகு, பள்ளி கல்லூரிகளில் அவரவர் தகுதிக்கேற்ப எவ்வளவு படிக்க முடியுமோ அவ்வளவு படித்து, ஏதோ ஒரு வேலையில்

சேர்ந்து வாழ்க்கையை நடத்துபவனுக்கு, சிறிய வயதில் கற்ற கல்வியானது, தற்போது நேரம் கிடைக்கும்போதெல்லாம் மறுபடி படிக்க வேண்டும், தொடர வேண்டும் என்ற எண்ணம் வரும். சிறிது கஷ்டப்பட்டாலே அவனுக்கு கல்வி கிடைக்கும். கடன் வாங்கியாவது மேலும் படிக்க வேண்டும் என்கிற சிந்தனை வரும். இப்படியே நடந்தால், சில காலங்களிலேயே பிராமண சமூகம், நல்ல முன்னேற்றத்தை அடையும் என்பதில் சந்தேகம் இல்லை.

இரண்டாவதாக, பிரம்மவித்யையானது மிகவும் கஷ்டமானது. சிலபல ஆண்டுகள் தொடர்ந்து படித்து வந்தாலும், தத்வங்களை அறிவது கடினமே. இன்னும் பல ஆண்டுகள் கழித்து இத்தகையவர்கள் இருப்பார்களோ இல்லையா என்பதே சந்தேகம். தத்வங்களையே அறியாமல், மதத்தில் நம்பிக்கை / பிடிப்பு வருவது எப்படி? மதத்தில் நம்பிக்கை வராமல், பிராமணர் களின் நடவடிக்கைகள் தொடர்ந்து நடப்பது எப்படி? அப்படியே நடந்தால், பிராமணத்வம் குறைந்து கொண்டே போய்விடும். தற்போதைய சூழ்நிலையில், நம் மதத்து தத்வங்கள் அனைத்து இடங்களிலும் பரவியதற்கு, மக்களிடையே பிரபலமாவதற்கு, நம் மடங்களின் சிறந்த பிரசாரமே காரணமாகும். சந்திரிகா, நியாயாம்ருத, தர்க்க தாண்டவ முதலான மிகச்சிறந்த கிரந்தங்களை இயற்றி, மத்வ மதத்தையே மேம்படுத்திய ஞானிகளில் சிறந்தவரான ஶ்ரீ வியாசராஜ குருசார்வபௌமரும், இவரின் வித்யாகுருகளான மகாமகிமரான ஶ்ரீஶ்ரீபாதராஜ குரு சார்வபௌமரும், யுக்திமல்லிகா, ருக்மிணீச விஜய முதலான சிறந்த கிரந்தங்களை இயற்றியவரான ஶ்ரீவாதிராஜ குருசார்வ பௌமரும், பல ஆழமான வேதாந்த தத்வங்களை மிகச்சுலபமாக புரிய வைக்கக்கூடியவர்களாக இருந்தாலும், இத்தகைய மிகச் சிறந்த கிரந்தங்கள் இருந்தாலும், காலக்கிரமத்தில் மக்களிடையே தத்வஞானத்தை அறிவதற்கான விருப்பம் குறைந்துவிட்டது என்று சந்தேகத்தில், சாஸ்திரார்த்தங்களை எளிய நடையில் தெளிவான கன்னடத்தில் கீர்த்தனைகளின் ரூபத்தில் பண்டித பாமரர்களுக்கு புரியும் வண்ணம் இயற்றி பரப்பியதோடு மட்டும ல்லாமல், இத்தகைய பிரசாரத்திற்காக ஒரு தனியான வழியை

உருவாக்கி, அதற்கு தாமே மூலபுருஷராக இருந்து, அனைவருக்கும் அருளியது, நாம் அனைவரும் அறிந்ததே.

ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீகனகதாசர், விஜயதாசர், ஜகன்னாததாசர், கோபாலதாசர் முதலான ஞானிகளும், தாச ஸ்ரேஷ்டர்களும் இத்தகைய சாஸ்திர பிரசார விஷயத்தில் ஹரிவாயுகளின் சேவையை செய்து, ஞானவிளக்கானது மக்களிடையே ஒளிரும் வண்ணம் காப்பாற்றி வந்தனர் என்றால் அது மிகையல்ல. சில இடங்களில் வியாசகூட, தாசகூட என்னும் இரு கிளைகள் வெவ் வேறானவை என்றும், தாசகோஷ்டியினர் பண்டிதர்களை கேலி பேசுகிறார்கள் என்றும், சாஸ்திர பிரவசனங்கள் தேவையில்லை என்றும், தாம் பண்டிதர்கள் இல்லாத காரணத்தால் சாஸ்திர பிரவசனங்களை செய்யாமல் வெறும் தேவர நாமாக்களை பாடுவதாலேயே பகவத் பிரசாதம் கிடைக்கும் என்றும் சொல்லி வருகின்றனர் என்னும் வாதங்கள் இருக்கின்றன.

தாச சாகித்யங்கள், சச்சாஸ்திரத்தின் சார்பாக தோன்றி, அவற்றின் ஆதாரத்தினாலேயே வளர்ந்து, அந்த சாஸ்திரங்களை எல்லா விதங்களிலும் சார்ந்திருக்கின்றன. தாச சாகித்யங்கள் அனைத் தையும் படித்து அறிந்தாலும், சச்சாஸ்திரங்களைக் கேட்டு, படித்து அறியாமல், மோட்சம் கிடைக்காது என்னும் பேச்சு எங்கும் காணப்படவில்லை. 'குருவின குலாம ஆகுவதனக தொரெய தண்ண முகுதி' என்றும் சொல்லும் தாசகோஷ்டியினர், சாஸ்திர ஞானத்தின் தேவையை, முக்கியத்துவத்தை குறைத்து விட்டனர் என்று சொல்லலாமா?

ஸ்ரீமத் சந்திரிகாசார்யர் முதலான பிரபுகளே இத்தகைய பிரசாரத்தின் தேவையை எடுத்துச்சொல்லியிருக்கும்போது, அவரின் சிஷ்யரான தாசர்கள், வேறு கோஷ்டியினர் என்று சொல்வது சரியா? அல்லது நற்சாஸ்திரங்கள் அனைத்தையும் குருவிடமிருந்து கற்று, பண்டிதராக இருக்கையில், இத்தகைய உத்தம சாஸ்திரங்களின் பிரசாரம் அவராலேயே ஆக முடிந்திருக்குமே? தாமே பண்டிதராக இருக்கும்போது, மற்ற பண்டிதர்களை அவர் கேலி செய்தார் என்று சொல்வது நகைப்பு ற்குரிய விஷயமே. 'நியாயாம்ருத பிரவசனேன லப்ய: ன

மேதயா பஹுதா ஸ்ருதேன' என்னும் வேத வாக்கியம், பிரவசன ங்களின் சிறப்பினை சொல்கிறதா? அவரைப்போலவே, தாசர் களும், 'நால்கு வேதகளு ஓதிதரேனு' என்று சாஸ்திர பிரவசன ங்கள் வீண் என்று சொன்னால் ஹரியின் பக்தி இல்லாமல், சாஸ்திரங்களை படித்தாலும் பிரயோஜனமில்லை என்று 'அதாதோ பிரம்ம ஜிக்ஞாஸா' என்னும் பாதராயண சூத்திரத்தில் இருக்கும் 'அத' என்னும் சொல்லின் அர்த்தத்தை ஒட்டி சொல்லி யிருக்கிறார்களே தவிர, இதில் வேறு அபிப்பிராயம் எதுவும் இல்லை.

வெளிப்படையாக சொல்லவேண்டுமெனில், நம் மக்களிடையே நம் தத்வங்கள், அதன் அர்த்தங்கள் கொஞ்சமாவது போய் சேர்ந்திருக்கிறதென்றால், அது தாச சாகித்யத்தின் பிரசாரத்தின் பலனே ஆகும். தாச சாகித்யத்தின் மகத்துவத்தை விளக்குவது இந்த கட்டுரையின் நோக்கம் இல்லை என்றாலும், இப்படிப்பட பிரசாரத்தினால் மக்களிடையே ஞான வளர்ச்சி எப்படி வளர்ந்தி ருக்கிறது என்பதை காட்டுவதற்கு இதுவே பயன் படுகிறது. மக்களிடையே தத்வங்கள், சாஸ்திர விஷயங்கள் போய் சேருவதற்கு பல்வேறு நிறுவங்கள் பொறுப்பு ஏற்றுக் கொண்டு நடப்பது அவசியமாகிறது. இத்தகைய சாஸ்திர விஷயங்களை சுலபமாக புரிந்து கொள்வதற்கு, புத்தங்களை அச்சிட்டு அனைவருக்கும் கிடைக்குமாறும் ஏற்பாடு செய்ய வேண்டும். மத கிரந்தங்கள் அனைத்தும் வியாக்யானம் செய்யப் பட்டு, அனைவரின் அறிவிற்கும் எட்டுமாறு செய்யப்பட வேண்டும். பண்டிதர்கள், சாஸ்திரங்கள் அறிந்தவர்களால் எழுதப் பட்டு, சாஸ்திர விஷயங்களைக் கொண்ட மாதப் பத்திரிக்கைகள், குறைந்த விலைக்கு அச்சிட்டு மக்களுக்கு கிடைக்கச் செய்வது நல்ல பலனைத் தரும்.

பிராமணர்கள் இருக்கும் பகுதிகளில் பண்டிதர்கள் உபன்யாச ங்களை செய்து, மக்களின் சந்தேகங்களை போக்குவது மிகவும் அவசியம். இவை அனைத்தையும்விட புதுமையாக 'போஸ்டல் ட்யூஷன்' என்னும் வகையில், பல பாட விஷயங்களை தொகுத்துக்கொண்டு, தபால் மூலம் சாஸ்திர உபதேசங்களை வெகு தூரம் இருப்பவர்களுக்கும் கிடைக்கச் செய்வது

கஷ்டமான விஷயம் இல்லை. இந்த முறையில், மக்கள் தங்கள் சந்தேகங்களை கடிதம் மூலமே தெரிவித்து, அதன் தீர்வை பெற்றுக் கொள்வதும் கஷ்டமல்ல.

மேலே பார்த்த யோசனைகளின்படி சாஸ்திர பாடங்களைப் படிக்க நேரம் காலம் இருக்கும் அதிர்ஷ்டசாலிகளுக்கு, அவர்களுக்கு தகுந்த வழியில் கற்றுக் கொடுப்பதற்கு, அனைத்து வித்யாபீடங்களிலும், நான்கு சாஸ்திரங்களிலும் தேர்ச்சி பெற்றிருக்கும் பண்டிதர்கள் இருந்து, இவர்களையும் பண்டிதர்களாக மாற்றி, இவர்களும் தங்களின் சிஷ்யர்களுக்கு பிரவசனங்களை செய்து, இப்படியாக இந்த ரீதியில் இந்த கல்வி தொடர்ச்சியாக நடக்க வேண்டும்.

வேதாந்த விசாரங்கள் இந்த விதமாக பரப்ப முடியுமா? பக்தி இல்லாதவர்களுக்கு உபதேசம் செய்யலாமா? இப்படியாக செய்தால், சாஸ்திரங்களின் மர்மங்கள், அவற்றை படிக்கத் தகுதி இல்லாதவர்களுக்கும் பரவி, அந்த சாஸ்திரங்களுக்கே அபசாரம் செய்தது போல் ஆகிவிடாதா? என்ற கேள்விகள் வரலாம். ஆனால், வழிவழியாக வந்த சம்பிரதாய முறையில், சாஸ்திர ங்களை 'குருமுகேன' (குருவிடமிருந்து நேரடியாக) சிஷ்யருக்கு சொல்லிக் கொடுக்கும் விதத்தில் ஒரு கட்டுப்பாடு இருக்குமே தவிர, மக்களுக்கு வெறும் மேலோட்டமாக சொல்லிக் கொடுப்பதால், மக்கள் நம் தத்வங்களை கற்றுக் கொள்ளட்டும் என்னும் சிந்தனையில் பிரசாரம் செய்தால் அது சரிவராது. மேலும், இது தகுதி உள்ளவர்களுக்கு மட்டுமே சொல்லிக் கொடுப்பதால், கற்றுக் கொடுப்பவர்களுக்கு எவ்வித தோஷங்களும் வருவதில்லை. சுதாதி கிரந்தங்கள், ஸ்ரீமதானந்த தீர்த்தரின் 37 கிரந்தங்கள் என அனைத்தும் தற்போது அச்சில் இருப்பதால், பணம் கொடுப்பதற்கு தயாராக இருக்கும் யாருக்கும் இவை கிடைப்பதில் தடையில்லை. ஒரு வேளை, தகுதி இல்லாதவர்களும், தமோ யோக்யரும் பணம் கொடுத்து அந்த புத்தகங்களை வாங்கினால், அதனால் அந்த புத்தகங்களை வெளியிட்டவர்களை குறை சொல்ல முடியுமோ? படிப்பவர் களுக்கு உதவியாக இருக்கட்டும் என்று செய்த விஷயத்தில் அச்சிட்டவர்களுக்கு தோஷம் வருவதில்லை.

பிராமண குலம், தகுந்த முறையில், குருகுல வழியினை பின்பற்றி, ஆத்மஞானத்தைப் பெற்று, ஸ்வ-தர்மானுஷ்டங்களை சரிவர பின்பற்றி வருவதால், இவ்வுலகில், வாழ்க்கையை நிம்மதியுடன், கௌரவத்துடன் வாழ்வது மட்டுமல்லாமல், மறு உலகிற்குப் போவதற்கு தேவையான சாதனைகளை செய்தது போலவும் ஆகிறது.

பிராமண சமூகத்தின் மறுமலர்ச்சியில் பிரம்மவித்யையை பரப்புவது மிகவும் முக்கியமான வேலையாக இருந்தாலும், இன்னும் பிற மாற்றங்களையும் கொண்டு வருவதற்கு மறந்து விடக்கூடாது. இன்றைய அரசியல் சூழ்நிலையில் பிராமண சமூகமானது, அழிந்து போகாமலிருக்க பல மாற்றங்களை செய்து கொண்டு, பிராமணரின் முக்கிய கடமைகளை, பண்பாடுகளை காப்பாற்றிக் கொண்டு வருவது மிகவும் அவசியம். பிராமணர்களில் ஒற்றுமை இல்லை என்பது பொதுவாக அனைவரின் கருத்து. ஓரளவுக்கு இது உண்மையும் கூட. இதற்கான காரணத்தை ஆராய்ந்தால், ஒற்றுமை இல்லாததற்கு, பொறாமை, கோபம் ஆகியவை காரணமல்ல. பிராமணன் நன்கு கல்வி கற்றவனாகையால், எந்தவொரு நம்பிக்கைக்கும் சுலபமாக வீழ்பவனல்ல.

எந்தவொரு விஷயத்தையும் நன்கு ஆராய்ந்து, சரியான சந்தர்ப்பம் வந்தபோது அதற்கு கண்டனம் தெரிவிப்பது கற்றவர் களின் தோஷம் இல்லை. இத்தகைய கண்டனங்கள் மிகவும் தேவையே. பிராமண சமூகத்திலேயே பல்வேறு கருத்து வேறு பாடுகள் இருக்கிறது என்றும் சொல்வார்கள். இவை அனைத்து சமூகங்களிலும் இருக்கக்கூடியவையே. பல்வேறு ஆராய்ச்சி / கருத்துக்கேட்புக்குப் பிறகு பிராமண சமூகம் ஒரு விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்தால், அதுவே அந்த சமூகத்தின் மேம்பாட்டி ற்குக் காரணமாகும்.

அரசுப்பணியே பிராமணனின் வாழ்க்கைக்கு மிகவும் தேவை யென்கிற அபிப்பிராயம் பிராமண சமூகத்திற்கு வந்தபிறகு, அவர்களின் மேம்பாட்டில் சிறிது தேக்கம் காணப்பட்டது. அரசு வேலை வேண்டும் என்னும் ஆசையில், இருந்த சொத்து

பத்துக்களை விற்றுவிட்டு, தாஸ்ய வாழ்க்கையே அதிகாரம் என்னும் பிரமை அவனின் மனதில் வந்தது. யாருக்கும் பயப்படாமல், ஸ்வதந்த்ரனாக இருந்த பிராமணன், தற்போது பயம் கொண்டு, ஒரு தாசனாக (அடிமையாக) இருக்க வேண்டிய தாயிற்று. இப்படியாக, சுமார் 95% பிராமணர்கள், அரசு வேலைகளில் சேர்ந்து, அவர்களின் பரம்பரை சொத்தான அறிவு, பண்பாடுகளை களைந்து கொண்டனர். அங்கங்கு ஒரு சில அதிர்ஷ்டசாலிகள், வெளிநாடுகளுக்குச் சென்று படித்து, அறிவாளி யாகி பெரிய பதவிகளை அடைந்து, பின்னர் இந்த சமூகத்தால் புறக்கணிக்கப்பட்டு - இப்படியாக இந்த பிராமண சமூகத்தின் சக்தியே குறைந்தது. பிராமண சமூகம் மறுபடி மறுமலர்ச்சி அடையவேண்டுமெனில், அவர்களுக்கு இருக்கும் அறிவினை செலவழித்து, அதற்குத் தக்கவாறு பலன்களைப் பெறும் இடங்களில் அவர்கள் சேர்ந்தாலே ஒழிய, பள்ளிகளில் சேர்ந்த நாளிலேயே, ஒரு பெரிய ஆசிரியரின் வேலையையோ, ஒரு தாலுகா ஆபீஸில் குமாஸ்தாவின் வேலையையோ, கம்பெனி களில் டைபிஸ்ட் வேலையையோ, இவற்றையே குறிக்கோளாக வைத்துக்கொண்டால், பிராமண அறிவு அவ்வளவும் வீணாகிப் போய்விடும்.

அரசு வேலையின் ஆசையில் விழுந்த பிராமணனின் வளர்ச்சி வளர்ந்து கொண்டே போகிறது என்பதில் சந்தேகமில்லை. இதன்படி பார்த்தால், அரசு வேலைகளில் இருக்கும் பிரச்னைகள் பிராமணனின் நல்ல வேளை என்றே சொல்லவேண்டி யிருக்கிறது. பிராமணனின் அறிவுக்கூர்மைக்கு மீறியதல்ல இந்த வேலை. வாணிகம், விவசாயம், வைத்தியம், வழக்கறிஞர் தொழில், பொறியியல், என்று தற்கால லாபம் தரும் பற்பல தொழில்கள் / வேலைகள் இருந்தாலும், அவற்றில் தன் அறிவினை செலுத்தி ஈடுபடுவதற்கு பிராமணன் பயப்படுபவனே அல்ல. பிராமணனின் முக்கிய குறிக்கோள் மற்றும் தன் அனுஷ்டானங்களை விடாமல், தன் வாழ்க்கையை நடத்துவதற்கு, இந்த வேலைகளை செய்யலாம் என்று மதப் பிரசாரகர்கள் சொல்கின்றனர். பற்பல மக்கள் சுதந்திரமான தொழில்களில் ஈடுபட்டு, செல்வத்தை ஈட்டி, நாட்டில் பிராமண

சமூகமானது, பிறரைவிட மிக முக்கியமாக வேண்டப்படும் ஒரு அங்கமாக ஆகும் நிலைவரும் என்பதில் சந்தேகமில்லை.

அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற வளர்ச்சியடைந்த நாடுகளைப் பார்த்தோமேயானால், அங்கு வெறும் நான்காம் வகுப்பு படித்தவர்கள் மட்டுமே அரசு வேலைகளில் சேர்கிறார்களே தவிர, நல்ல அறிவாளிகள், சராசரிக்கும் அதிகமாக படித்தவர்கள் அரசு வேலைகளில் சேர்வதில்லை. அரசு வேலை என்பது முட்டாள்களுக்கானது என்று மேற்குலக நாடுகளில் ஒரு எண்ணம் உண்டு. நாட்டின் அனைத்து செல்வங்களும், தனிப்பட்ட மனிதர்களிடம் இருக்கிறதே தவிர, வேறெங்கும் இல்லை. நம் பிராமண சமூகமும் இந்த நீதியையே பின்பற்றினால், நல்ல வளர்ச்சியை காணமுடியும் என்பதில் சந்தேகமில்லை.

பிராமண சமூகத்தில் சனாதனிகள், நவீன மற்றும் போராட்டக் காரர்கள் என்று இரு விதமான மக்கள் இருப்பது வருந்தக் கூடியதாகும். என்னதான் பிரச்னையாக இருக்கட்டும், பழைய பண்பாடுகளை அழியாமல் காப்பாற்றிக் கொண்டு வருபவர்கள் சனாதனிகள் என்றும் அத்தகைய பண்பாட்டினை மதிக்காமல் அவற்றை அழித்து வரும் போராட்டக்காரர்கள், நவீனர் என்றும் நடைமுறையில் பெயர் பெற்றிருக்கின்றனர். இதில் யாருடைய பக்கம் சரியானது என்று விமர்சிப்பது இந்த கட்டுரையின் நோக்கமல்ல. இரு குழுவினரின் முக்கிய நோக்கமும் இந்த சமூகத்தின் மேம்பாடாகவே இருக்கையில், இருவரின் நீதியும் மேலெழுவது சாத்தியம். சமூகத்தின் மேம்பாட்டிற்கு சாதகனின், பிராமணனின் குறிக்கோள்களை காப்பாற்றுவது மட்டுமே முக்கியம் என்று சொல்ல வேண்டியது அவசியம். நடைமுறை வாழ்க்கைக்காக, பழைய பண்பாட்டினை இழப்பது என்பது சமூகத்தின் மேம்பாட்டிற்கு எதிரான செயல் என்று சொல்ல வேண்டியதில்லை.

ஆனால் பற்பல விதங்களில் தாக்கப்படும் சனாதன தர்மங்கள், பழைய பண்பாடுகளை, பல்வேறு நவீன ஆயுதங்களிலிருந்து காப்பாற்றுவது சாத்தியமாக இருப்பதில்லை. நவீன நாகரிக மக்களான ஜெர்மனி போன்ற நாடுகளின் இத்தகைய

தாக்குதல்களை நாம் எதிர்கொள்ளும் விதம் சரியல்ல. சனாதனிகளின் வாதங்கள், சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட வழிகளே என்பதில் சந்தேகமில்லை. ஆனால், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவாறு தற்போதைய சூழ்நிலையில் நடப்பது என்பது சஜ்ஜனர்களுக்கு சாத்தியமா? அப்படியே, எந்த முயற்சியும் செய்யாமல் சாஸ்திரங்களுக்கு எதிரான நடவடிக்கைகளை செய்பவர்கள், சனாதன தர்மத்வேஷிகள் எனப்படுவரா? என்று நாம் பார்க்கவேண்டும். இதை நடுநிலையோடு ஆராய வேண்டும்.

சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவாறு இருந்த வழிமுறைகள், தற்போதைய உலகில் வழக்கொழிந்து போனதற்கு எவ்வளவு பேர் கண்ணீர் விட்டு அழுகின்றனர்? தற்போதைய ஒரு நவீன / புதிய முன்னேற்றத்தை / மாற்றத்தை உதாரணத்திற்கு எடுத்துக் கொள்ளலாம்.

பிராமண சமூகத்தில், சிறுமியாக இருக்கையில் திருமணம் செய்துகொடுப்பது என்பது தர்மமாகும். நன்கு வளர்ந்த பெண்ணை திருமணம் செய்து கொடுப்பதில் எந்த புண்ணியமும் இல்லை. அதுமட்டுமல்ல. அதில் பிரச்னைகளும் உண்டு என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. இப்படி இருக்கையில், கன்யா திருமணத்திற்கு தடை விதிக்கும் சட்டத்திற்கு எவ்வளவு பிராமணர்களே கையெழுத்து போட்டிருக்கின்றனர் என்பதை பார்க்கவேண்டும். சனாதனிகளின் கூக்குரல் உலகத்திற்கு கேட்க வேயில்லை. வேறுவழி இல்லாமல் இதை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும் என்பது இதன் பதில். ஆனால், இந்த நேரத்தில் கற்கவேண்டிய, கற்று திருந்திக் கொள்ளவேண்டிய விஷயங்கள் பல உண்டு.

மேற்படி சட்டத்தினால், சுமார் 90% சதவிகிதம் பேர் 'அப்பாடா, தப்பித்தோம்' என்றே நினைத்து பெருமூச்சு விட்ட வண்ணம் இருக்கின்றனர். தர்மம் நாசமடைந்தது என்று இவர்களே சொல்லிவந்தனர். அப்படியெனில், இவர்கள் தர்மத்தை விரும்பு வர்கள் என்று இல்லை. சமூகத்தில் பழக்கத்திற்கு வந்து, சனாதனிகள் மற்றும் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு,

தர்மத்தின் போர்வையையே போர்த்திக்கொண்டு சமூகத்தின் ரத்தத்தை, அதிலும் ஏழை எளிவர்களை துன்புறுத்தி வந்த ‘வரதட்சிணை’யே இந்த தர்மத்தின அழிவிற்கு காரணம். பிராமண சமூகமும், சனாதனிகளும் இந்த பிசாசினை உடனடியாக துரத்தினால் ‘கன்யா விவாகம்’ என்னும் மசோதாவின் சமயத்தில் பிராமண சமூகத்திற்கு எதிராக இருந்த குரல் இவ்வளவு அதிகமாக இருந்திருக்காது.

மேற்குலக அரசாங்கத்தில் கிடைக்கும் வேலையின் மீதான ஆசையே இந்த பிசாசின் வளர்ச்சிக்கு காரணம். இவ்வளவு படித்தவர்களுக்கு இவ்வளவு விலை என்று அவர்கள் படிப்பிற்கேற்ப சமூகமே மாப்பிள்ளைகளுக்கு ஒரு விலையை நிர்ணயித்து, அதிக வயது ஆவதற்குள் திருமணம் ஆகிவிட வேண்டும் என்ற கட்டாயத்தில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஏழை பெண்களின் குடும்பங்கள் கண்ணீரில் தத்தளிக்கின்றனர். எவ்வளவு பெண்கள், தம் பெற்றோரில் கண்ணீரினைக் கண்டு பொறுக்காமல், தற்கொலை செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதை தெரியாதவர்கள் இருக்கமுடியாது. சனாதனிகளும், சமூகத்தை முன்னேற்றுபவர்களும் இத்தகைய நோய்க்கு சமூகத்தில் இடம் கொடுக்காதிருந்தால், நம் சமூகத்தின் மேல் இத்தகைய பாதிப்பு வந்திருக்காது. தற்போதும் சமூகமானது, கருணையுடன் தன் அகங்காரத்தை விட்டு, பரிசுத்தம் ஆக வேண்டுமெனில், இந்த மசோதாவை வெற்றி பெறாமல் இருக்கச்செய்ய முடியும்.

ஒரு சம்பிரதாயத்தை பின்பற்றுவதில் ஏதோ ஒரு பிரச்னை இருந்து, மக்களின் மனதில் அந்த சம்பிரதாயம் ஒரு நல்ல இடத்தை வகிக்காமல் இருந்தால் மட்டுமே, எந்தவொரு புதிய மாற்றமும் அந்த சம்பிரதாயத்தை மாற்றுவதற்கு சாத்தியமாகும். ஆகையால், நம் பிராமண சமூகத்தின் சத் சம்பிரதாயங்கள் அனைத்தும் எந்தவொரு பிரச்னைகளுக்கும் அடிபணியாமல், அனைவரின் கருணைப் பார்வைக்கு உட்பட்டு காப்பாற்றப் பட்டால், அரசின் கட்டுப்பாடுகளுக்கு தேவையே இருக்காது என்று உறுதியாக சொல்லலாம்.

இன்றைய சூழ்நிலையில், சனாதனிகளின் மனதை அலைக் கழிக்கும் இன்னொரு பிரச்னையைப் பற்றி கொஞ்சம் பேச வேண்டியது அவசியமாகிறது. ‘தாழ்த்தப்பட்டவர்கள் மற்றும் தீண்டத் தகாதவர்கள்’ என்னும் விஷயமானது அரசியல் மட்டங் களிலேயே முதல் இடத்தைப் பிடித்திருக்கிறது. தாழ்த்தப் பட்டவர்கள் உயரவேண்டும். சமூகத்தில் அவர்களும் சுத்தமாக வேண்டும். அவர்களின் பொருளாதார நிலை மேம்பட வேண்டும். அவர்களின் ஏழ்மை விலகவேண்டும். அவர்களது அறியாமை நீங்கவேண்டும். அவர்களும் இந்து சமூகத்தில் ஒரு கௌரவான நிலையை எட்ட வேண்டும் என்பதில் யாரும் ஆட்சேபம் தெரிவிக்க முடியாது. இதை எதிர்ப்பவர்கள் சமூகத்தின் துரோகிகள் மற்றும் தேச துரோகிகளே ஆவர். ஆனால், தாழ்த்தப் பட்டவர்களின் மேம்பாட்டிற்காக செய்யப்பட்டு வரும் வேலைகள், அவர்களுக்கோ, சமூகத்திற்கோ அல்லது நாட்டிற்கோ நன்மை பயக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றே தெளிவாக சொல்லமுடியும். தாழ்த்தப்பட்டவர்களின் கல்வி, அரசு வேலை, விவசாயம், வணிகம், வயிறு நிறைய உணவு போன்ற முக்கிய தேவையான விஷயங்களை அவர்களுக்கு விநியோகித்தாலும் அதை யாரும் ஆட்சேபம் செய்யமுடியாது. சாஸ்திர ரீதியாக, பாஞ்சராத்ர்யாதி ஆகம ரீதியாக, பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக நிர்மாணம் செய்யப்பட்ட கோயில் களில், பலவந்தமாக அவர்களை நுழைய வைத்ததால், அவர்களுக்கு கிடைத்த பலன் என்ன? ‘கோயிலில் நுழைய முடியாததால் நாம் களங்கம் கொண்டுள்ளோம். தற்போது கோயில்களில் நுழைந்துள்ளதால் நாங்களும் தூய்மை அடைந்துள்ளோம்’ என்று தாழ்த்தப்பட்டவர்கள் எப்போதாவது சொல்லியிருக்கிறார்களா? பரலோகத்திற்கு செல்வதற்கு ஆலய பிரவேசம் ஒரு முக்கிய சாதனம் என்னும் சிந்தனை அவர்களுக்கு இருக்கிறதா?

முதல் முறை ஆலயத்திற்குள் நுழைந்தபிறகு, அதில் எவ்வளவு பேர் தொடர்ந்து அங்கு சென்று சாதனைகளை செய்கின்றனர் என்று பார்க்க வேண்டும். ஆலய பிரவேசம் செய்யாது இருந்ததால், அவர்களின் கௌரவத்திற்கு என்ன குறை ஏற்பட்டிருந்தது? கிருத்துவர்கள், இஸ்லாமியர்கள் ஆகியோர்

இந்துக் கோயில்களில் நுழைய சந்தர்ப்பம் இல்லாததால், அவர்களின் தகுதி / மகிமை குறைந்துவிட்டது என்று என்றாவது நினைத்தார்களா? ஒருவேளை தாழ்த்தப்பட்டவர்களுக்கு தெய்வ பக்தி இருக்கிறது என்று நினைத்தால், அவர்கள் வணங்குவதற்கு வேறு வழிகளே இல்லையா? புதிய ஆலயங்களை நிர்மாணம் செய்திருக்கலாம். பல பழைய ஆலயங்கள் இருக்கையில், புதிய ஆலயங்கள் எதற்கு என்னும் கேள்வி எழுந்தால், கோயில்களில் தேவதா சான்னித்யத்தை நம்புபவர்கள் அதை எந்தவொரு ஆதாரத்தின் மேல் நம்புகிறார்கள்? எந்த ஆகமத்தின்படி கோயில்களில் விக்ரகங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறதோ, அந்த சான்னித்யத்தை பெற்றிருக்கிறதோ, அந்த ஆகம முறைகளிலேயே, இந்த தாழ்த்தப்பட்டவர்களின் நுழைவினால் அந்த சான்னித்யம் நாசமடைகிறது என்று தெளிவாக சொல்லியிருக்கும்போது, அந்த ஆலய பிரவேசத்தினால், தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஆகும் நன்மைதான் என்ன?

கோயில்களில் தேவதா சான்னித்யம் இருக்கிறது என்று நம்ப வேண்டுமெனில் ஆகமங்களை நம்பவேண்டும். ஆகமங்களை நம்ப வேண்டுமெனில், தேவாலய பிரவேசங்களை வீண் என்று நம்ப வேண்டும். அனாவசியமாக இத்தகைய தேவதா சான்னித்யத்தை அழிப்பதால், கோடிக்கணக்கான பிறரின் தேவதா ஆராதனைக்கு தடை ஆனதே இதன் விளைவு. பசி என்று வந்தவனுக்கு நல்ல பட்டு வேட்டி கொடுத்ததைப் போல, அறியாமை, ஏழ்மை, பசி என்று வந்தவர்களுக்கு, இந்த பிரச்னைகளை தீர்ப்பதை விட்டு, அவர்களுக்கு சற்றும் பயன் இல்லாத இத்தகைய போராட்டங்களை செய்து, அவர்களின் தலைக்கு குல்லா போடுவது, அரசில் அவர்களுக்கான மேம்பாட்டிற்கான எந்தவொரு திட்டமும் போடாமல் அவர்களை ஏமாற்றும் அரசியல்வாதிகளின் வேலையே ஆகும்.

இந்த போராட்டத்தினால் எந்த பக்கத்தவர்க்கு அதிக நஷ்டம் என்று பார்த்தால், பிராமண சமூகம் அதிகமாக கஷ்டப்படத் தேவையில்லை. பவித்ரமான பழம்பெரும் புண்ய தலங்கள் கெட்டுப் போனது என்னமோ ஆனதுதான். சனாதனிகள் இத்தகைய போராட்டக்காரர்களை எதிர்த்தது தவறில்லை.

ஆனால், கோயில்களில் தேவதா தரிசனங்களே முக்கியமாக உள்ள பிராமணர் அல்லாதோர்க்கு இது நஷ்டமே தவிர, பிராமண சமூகத்திற்கு அல்ல. பிராமணர்களுக்கு புண்ணிய க்ஷேத்ரங்களை தரிசனம் செய்வது ஒன்றும் முக்கியமானது அல்ல. பிராமணனுக்கு பற்பல சாதனை விஷயங்கள் உண்டு. பிரம்மஜிக்ஞாசமே முக்கிய சாதனையாக இருக்கும் பிராமண சமூகத்திற்கு சாலிகிராமம், துளசி ஆகியவற்றிலிருந்தே ஒவ்வொரு வீட்டையும் பவித்ரமான கோயிலாக மாற்றும் சக்தி இருக்கும்போது, இந்த போராட்டத்திற்காக இவ்வளவு கவலைப்பட வேண்டியதில்லை. இந்த சந்தர்ப்பத்தில் பிறரின் கோபத்திற்கு ஆளாக வேண்டியதேயில்லை.

இந்த கட்டுரையில் முன்னரே சொன்னதைப் போல, பிராமண சமூகத்தில் இன்னொரு பெரிய கேள்வி பல காலங்களாக தீர்க்கப்படாமலேயே உள்ளது. தீர்வே வேண்டாம் என்று ஒதுக்கப்பட வேண்டிய விஷயமும் இல்லை. இந்த பிரச்னையின் தீர்வினால், பிராமண சமூகத்தின் பாதுகாப்பிற்கு பிரச்னை வரலாம் என்றும் சொல்வதற்கு இல்லை. வெளி நாட்டிற்குச் சென்று, பெரிய கல்விகளைக் கற்று, மிகச்சிறந்த பதவிகளில் இருக்கும் அறிவாளிகளான பிராமணரின் கேள்வி இது. மிகவும் முக்கியமான இந்த கேள்விக்கு, இதுவரை தீர்வு எட்டப்படாமலேயே உள்ளது என்று சொல்வது நம்பும்படியாக இல்லை. இந்த விஷயத்தில், சமீபமாக நடந்த சில விஷயங்களை கவனமாக பார்க்கவேண்டும். முதலாவதாக, இத்தகையவர்களுடைய கூட்டினால், பரம்பரையிலிருந்து எந்தவொரு சமூகமும் தோன்றி, இன்றைய சமூகத்தினருடன் சம்பந்தம் இல்லாதிருப்பவர்களே இல்லை என்று சொன்னாலும் வியப்படைவதற்கு இல்லை. இந்த மாதிரியான சம்பந்தம் இருந்தாலும், கண்மூடித்தனமாக இல்லை என்று சொல்லிக் கொண்டிருப்பதும், சரியானதே. குறைகள் அற்ற கபடமில்லாத சமூகம் நல்லதா என்பது முதலாம் கேள்வி.

இரண்டாவதாக, வளர்ச்சியடைந்த விஞ்ஞான தொழில்நுட்ப வளர்ச்சியால், ஒரே நாளில் இங்கிலாந்து போய் வரக்கூடிய, நல்ல கல்வியைப் பெற்று, பல உயர்பதவியை வகிக்கக்கூடிய

இந்த நாட்களில், இவர்களை பகிஷ்காரம் செய்வதால், பிராமண சமாஜத்தில் மிஞ்சுவது என்ன? இது இல்லாமல், பழைய காலங்களில் கப்பலில் கடலைத் தாண்டுவது போலில்லாமல், தற்போது விமானங்களில் போய் வருவதால், கடலைத் தாண்டினால் வரும் என்று சொல்லக்கூடிய தோஷம் இவர்களுக்கு இருக்கிறதா - என்பது போன்ற கேள்விகள் வருகின்றன.

மதங்களை நிறுவக்கூடிய எந்தவொரு மடாதிபதிகளுக்கும் இத்தகைய ஒரு குழுவினரை (அணியினரை) இழப்பதை விரும்புவதில்லை. தர்மத்தை நிலைநாட்டுவதே மடாதிபதிகளின் முக்கிய கடமையாக இருப்பதால், எந்தவொரு ஆதாரமும் இல்லாமல் தர்ம சாஸ்திரங்களை ஒரு மூலையில் தள்ளி வைப்பது அவர்களுக்கு சுலபமாக வேலையில்லை. ஆனால் அதே சமயத்தில், ஆதாரங்கள் கிடைக்கவில்லையென்று சும்மா இருந்தால், அது சமூகத்துக்கு செய்யும் துரோகமாகும். பல்வேறு யுகங்களாக, பல்வேறு தேச காலங்களில், தர்ம பேதங்களை ஒப்புக்கொள்ளும் ஸ்ம்ருதிகாரர்கள், இந்த விஷயத்திலும் நம்மை கைவிடவில்லை. பற்பல தர்ம சூக்ஷ்மங்களை, புதுப்புது சூழ்நிலைகளுக்கேற்ப, அதற்குண்டான தர்மங்களை உருவாக்கி / மேம்படுத்திக் கொள்வது என்பது, சமூகத்தை வளர்ப்பதன் கோணத்தில் பார்த்தால், அதர்மம் ஆகிவிடாது. நமக்குத் தேவையான தீர்வு கிடைக்கும் என்பதே நம்பிக்கை. ஆனால் இவ்வளவு பெரிய வேலையை, தீர்வினை, ஓரிருவர் முடிவு செய்து, அதை மொத்த சமூகத்திற்கும் கொடுப்பது சரியல்ல. நலன் விரும்பிகள் அனைவரும் ஒன்று சேர்ந்து, சமூகத்தை துண்டாட நினைப்பவர்களிடமிருந்து, எச்சரிக்கையாக இருப்பது முக்கியம். தர்மத்தை நிலைநாட்டுபவர்கள் அனைவரும், இந்த கேள்வியை வெளிப்படையாகக் கேட்டு, உடனடியாக இதை தங்களது கடமையாக நினைத்து, இதில் கவனம் செலுத்தினால், விரைவிலேயே இதற்கு ஒரு தீர்வு நிச்சயம் கிடைக்கும்.

இதற்கு சம்பந்தப்பட்ட இன்னொரு விஷயத்தை இங்கே சொல்வது சரியாக இருக்கும். பிராமண சமூகத்தில் தர்மத்தை நிலைநாட்டும் நிறுவனங்கள், அதிலும் முக்கியமான மடங்கள்,

தர்மத்தை நிலைநாட்டுவதில் முக்கிய இடத்தை வகிக்க வேண்டும். வைதிக தத்வங்களும், பிராமண பண்பாடுகளும், அனைத்து சஜ்ஜனர்களை போய் சேர்ந்து, அவர்கள் மேம்பட வேண்டுமென்றே, ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதர், பற்பல சிஷ்யர்களுக்கு யதி ஆசிரமத்தை அருளி, பல சம்ஸ்தானங்களை நிறுவி, பற்பல இடங்களில் வைதிக மதமானது பரவுமாறு ஏற்பாடு செய்தார். இவை ஒன்றிரண்டு சம்ஸ்தானங்களால் மட்டுமே செய்து முடிக்கக்கூடிய வேலையில்லை என்பதால், மடங்கள் தோன்றின. இவர் அனைவரின் நோக்கமும் ஒன்றே. தத்வோபதேச, முத்ரைகளைப் பெற்று சஜ்ஜனர்கள் மேம்பட வேண்டும் என்பதே இவற்றின் குறிக்கோள். லட்சோபலட்சம் மக்களுக்கு ஒன்றிரண்டு மடங்கள் மட்டுமே தத்வோப தேசங்களை வழங்குவது சாத்தியம் இல்லை என்று பிராமணர்கள் வெவ்வேறு மடங்களுக்கு சிஷ்யர்கள் ஆனார்களே தவிர, அனைவரும் சர்வக்ஞாசார்யரின் மதத்தைப் பின்பற்று பவர்களே. தத்வங்களில் இவர்களுக்குள் கொஞ்சம்கூட வேறுபாடுகள் இல்லை. இந்த மடம் சிறந்தது, இந்த மடம் தாழ்ந்தது என்ற நினைப்புக்கு இடமேயில்லை.

இந்த மடங்களில் பல மகான்கள் பீடத்திற்கு வந்து, பிராமண மதத்தையே மேம்படுத்தி, பெரும் புகழைப்பெற்று, அதை அனைத்து மடங்களுக்கும் பரப்புகின்றனர். அந்தந்த பரம்பரையில் வந்த பீடாதிபதியின் புகழ், ஆளுமைகளால் அந்த மடத்தினர் பெருமை கொள்வது சகஜம். இதனால், மூல பீடங்களின் புகழில் / பெருமையில் எந்த வேறுபாடுகளும் கிடையாது. பல மடங்களால் சிஷ்யர்களின் மேம்பாடு ஆகவேண்டும் என்பதே மூலபுருஷர்களின் நோக்கமே தவிர, சிஷ்யர்கள் அந்த மடத்தின் சொத்து அல்ல.

சிஷ்யர்களின் மேம்பாடுகள் அந்த மடங்களின் கடமையாகும். இப்படி இருக்கையில், சில சந்தர்ப்பங்களில், ஒரு சிலர் கெட்ட நோக்கங்களுடன், முக்கிய மடங்களில் ஏற்றத்தாழ்வு இருக்கிறதென்று சொல்லி, இதனால் பிராமண சமூகத்திற்கே பல விதங்களில் அபாயம் ஏற்படுத்த முற்பட்டதை நாம் மறக்க முடியாது. இதனால் அத்தகைய சிறந்த மடங்களும்,

தங்களுடைய மிகச்சிறந்த குறிக்கோள்களை அடைய முடியாமல் போனது என்பதை அனைவரும் அறிவோம். இந்த நிலைமையில் அந்தந்த மடங்களின் சிஷ்யர்களுக்கு ஒரு விதமான உதாசீனமான மனநிலை வந்ததும் பெரிதல்ல. ஆனால் இத்தகைய நிலை பல காலங்களுக்கு தொடரக்கூடியதல்ல. முக்கிய மடாதிபதிகளும், அதன் சிஷ்யர்களும், மிகுந்த அன்புடன் ஒருவருக்கொருவர் சேர்ந்து பேசினால், மொத்த பிராமண சமூகமே மேம்படும் என்பதில் சந்தேகம் இல்லை. இறுதியாக பிராமண சமூகத்திற்கு ஒரு செய்தி:

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மரியாதையுடன் கௌரவத்துடன் ஆட்சி செய்து வந்த மஹாசம்ஸ்தானங்களை, ஒரு மக்களாட்சியின் நிறுவனத்தைப் போல பார்ப்பதை மக்கள் நிறுத்தவேண்டும். அத்தகைய மஹாசம்ஸ்தானங்கள், பிராமண சமூகத்தின் முதுகெலும்புகள் என்று நினைத்து, மூளை நன்றாக இருந்தால் உடலே வலிமையாக இருக்கும் என்று அறிய வேண்டும். இத்தகைய சம்ஸ்தானங்களின் மரியாதையை பயன் படுத்துவது பிராமண சமூகத்தின் கையில் உள்ளது. இத்தகைய பிராமண சமூகத்தின் வளர்ச்சியை / மேம்பாட்டினை சம்ஸ்தானாதிபதிகள் என்றைக்கும் மறக்கக்கூடாது. ஒரு சிறந்த குறிக்கோளுக்காக ஆசைப்படுவது, அதை நோக்கி பயணப்படுவது நம் அனைவரின் கடமையாகும்.

பலன்கள் ஸ்ரீஹரி கொடுப்பது.
|| ஓம் கோப்ராஹ்மணேப்ய: சுபம் பவது ||

## வர்ணாசிரம தர்மம்

தஸ்மாத் சாஸ்திரம் பிரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதெள |
ஞாத்வா சாஸ்திர விதானோக்தம் கர்ம கர்துமிஹார்ஹஸி ||

சமூகத்தில் சில இடங்களில் ஒழுங்கான வாழ்க்கை இருந்தாலும், வேறு சில இடங்களில் ஒழுங்கற்ற வாழ்க்கைகள் இருப்பதையும் காணலாம். எங்கு ஒழுங்கான வாழ்க்கை இருக்கிறதோ, அங்கு அமைதியும், எங்கு ஒழுங்கற்றதோ அங்கு அமைதியின்மையும் காண்கிறோம். அதே போல, ஒரே நாட்டில் சில சமயம் அமைதி, பல சமயங்களில் அமைதியின்மை நிலவுகிறது. பல்வேறு வேறுபாடுகளால் இந்த அமைதியும், அமைதியின்மையும் இருப்பதை நாம் ஆராய்ந்து பார்த்தால், ஒழுங்கான வாழ்க்கைமுறையே அமைதிக்கு காரணம் என்றும்; ஒழுங்கற்ற வாழ்கையே அமைதியின்மைக்கு காரணம் என்றும் மிகத் தெளிவாக விளங்குகிறது. இத்தகைய ஒழுங்கான வாழ்க்கைமுறையானது ஏன் சில இடங்களில் மட்டும் இருக்க வேண்டும்? இதற்கு என்ன காரணம் என்று கேள்வி கேட்டால், ஆட்சிமுறை எங்கு நன்றாக இருக்கிறதோ அங்கு அமைதி நிலவுகிறது என்றும் எங்கு ஆட்சிமுறையில் பிரச்னை இருக்கிறதோ அங்கு அமைதியின்மை இருக்கிறது என்றும் சொல்லலாம்.

ஆனால் அமைதி, அமைதியின்மைக்கு முழுக்காரணமும் இந்த ஆட்சிமுறைதானா என்று கேள்வி கேட்டால், இல்லை. வேறு ஒரு காரணமும் இருக்கவேண்டும். ஏனெனில், ஆட்சிமுறைகள் மக்களுக்கு பிடித்தவாறு இருந்து, மக்களின் மனதில், 'நாம் இந்த ஆட்சிமுறையால் நிம்மதியாக இருக்கிறோமே, இது நியாயமில்லை' என்று தோன்றும்வரைக்கும் மட்டுமே இது அமைதிக்கான காரணம். மக்களுக்கு அது பிடிக்காத பட்சத்தில் அந்த ஆட்சிமுறை எந்த அரசருடையதாக இருக்கட்டும், அமைதியை காப்பாற்ற முடியாது என்னும் விஷயம், தற்போதைய உலகில் பல்வேறு நாடுகளில் அதன் வரலாற்றுப் பக்கங்களிலிருந்து நாம் அறிகிறோம். அப்படியிருக்கையில்,

நாட்டு அமைதிக்கு முக்கிய காரணம் என்னவென்று பார்த்தால், அமைதியின்மைக்கான காரணமும் கூடவே தெரிகிறது. ஒழுங்கான வாழ்க்கைமுறைக்கு முக்கிய காரணம் மக்களின் ஆத்திகமே. அதாவது, அமைதியின்மைக்கு காரணம் நாத்திகம் என்று தெளிவாக தெரியும்.

ஸ்வர்க்கம் நரகம் போன்ற பரலோகங்கள் உள்ளன. அவற்றை அடைவதற்கான சாதனை வழிகளான புண்ணியம், பாவம், தர்ம, அதர்ம, ஈஸ்வர, அதிர்ஷ்டம் போன்ற விஷயங்கள் இருக்கின்றன என்று சொல்லும் அறிவே ஆத்திகம். பிரத்யட்சமாக தோன்றும் விஷயங்களைத் தவிர வேறெதும் உண்மையில்லை அதாவது மேற்சொன்ன புண்ணியம், பாவம் போன்ற எதுவும் இல்லை என்று சொல்லும் அறிவே நாத்திகம். தர்ம, அதர்மம் போன்றவற்றை ஒப்புக்கொள்ளும் ஆத்திகர்கள், அத்தகைய தர்மானுஷ்டானங்களால் ஈஸ்வரபிரசாதம் பெற்று உத்தம லோகத்தை அடையவேண்டும் என்னும் ஆசையில், புண்ணிய கர்மங்களை செய்தால் உத்தம கதியையும், பாவ கர்மங்களை செய்தால் அதோகதியையும் அடைவோம் என்று அறிந்து, அதற்கான சாதனை வழிகளைப் பின்பற்றி வாழ்க்கையை நடத்தி, பாவங்களை செய்யாமல், நியமிக்கப்பட்ட வாழ்க்கை யையே நடத்தி ஆத்திகராக இருப்பதால், அத்தகைய ஆத்திக சமூகம் ஒழுங்கான வழியில் நடந்து, அமைதி மற்றும் நிம்மதிக்கு காரணமாக இருக்கின்றது.

இதற்கு எதிர்ப்பதமான பரலோகத்தை நம்பாத, பாவங்களைப் பற்றி கவலைப்படாத நாத்திகர்களிடம் இத்தகைய ஒழுங்கிற்கு இடமில்லாமல், அவர்கள் நாட்டின் அமைதியின்மைக்கு காரணமாகின்றனர். எந்த நாட்டில் எந்த காலத்தில், நாத்திகத்தன்மை அதிகமாகின்றதோ, அந்த இடத்தில், போர், விபச்சாரம், குழப்பம், திருட்டு ஆகியவை தலைதூக்கி, நாட்டின் அமைதிக்கு குந்தகம் விளைவிக்கின்றன. தர்மம் இல்லையென்றால் என்னென்ன பலன்கள் கிடைக்கும் என்று சொல்லப்படுகிறதோ, அவை அனைத்தும் தற்காலிகமானவையே. நிரந்தரமானதல்ல.

இதனால் விபரீத பலன்களே கிடைக்கின்றன. பிறர் செல்வம், பிறரின் இடம், பிறன் மனை ஆகியவையே மக்களின் மனதில் நிலைத்தால், நாட்டில் அமைதியின்மை, இம்சை, ஒழுங்கின்மை ஆகியவையே கிடைக்கின்றது. இது அனைவருக்குமே கெட்டதை செய்யும். பிறர் செல்வங்களை களவாடுவோருக்கு அதன் பலன்களும் தற்காலிகமானவையே. இதையே பிரம்மசூத்ர பாஷ்யத்திலும் கூட:

ரேதோ தாதுர்வடகணிகா க்ருத தூமாதி வாசனம்
ஜாதிஸ்ம்ருதிரயஸ்காந்த: சூர்யகாந்தோம்பு பக்ஷணம் ।
ப்ரேத்ய பூதாப்யயஸ்சைவ தேவதாப்யுஷயாசனம்
ம்ருதே கர்மனிவ்ருத்திஸ்ச ப்ரமாணமிதினிஸ்சய: ।।

என்னும் உதாரணத்தினால், ஈஸ்வர மற்றும் அதிர்ஷ்டம் ஆகியவை கிடைக்கும் என்று விளக்கப்பட்டுள்ளது. இந்த கட்டுரை மிகவும் பெரியதாகிவிடும் என்கிற பயத்தால், மேற்கூறிய ஒரேயொரு உதாரணத்தை விளக்கினாலும் அமானுஷ்ய விஷயங்களை விளக்குவது சாத்தியமே. 'ப்ரேத்ய பூதாப்யயய:' என்னும் உதாரணத்தை, மிகச் சுலபமாக எந்தவொரு எதிர்ப்பும் இல்லாதவாறு நிரூபணம் செய்திருப்பதால் அதையே இங்கு விளக்குவது சரியாக இருக்கும். இந்த சரீரமானது உயிரோடு இருக்கும் வரைக்கும், பஞ்சபூதங்களில் சேர்வதில்லை. அதாவது ப்ருத்வி, அபு ஆகிய ரூபங்களை இது பெறுவதில்லை. அதே சரீரம், மரணமடைந்தபிறகு, சிறிது நேரத்திலேயே மண்ணில் போய்ச் சேரும் அதன் யாத்திரை தொடங்கிவிடுகிறது. இந்த உதாரணத்தினால் தெரிய வருவது என்னவென்றால், உயிரோடிருக்கும் சரீரம் ஏதோ ஒரு சக்திக்கு கட்டுப்பட்டு, அழியாமல் இருக்கிறது என்று புரிகிறது.

அந்த ஒரு அமானுஷ்ய சக்தி இல்லாதிருந்தால், சரீரத்திற்கு லயம் (அழிவு) வந்திருக்கும். இதுவே ஜீவன் என்று அறியலாம். அந்த ஜீவன் என்னும் அமானுஷ்ய பொருளானது இருக்கும் வரையிலேயே தேகத்திற்கு அழிவு வருவதில்லை, அதனை வழிநடத்தும் ஈஸ்வரனின் ஆதிபத்யத்தை ஒப்புக்கொண்டே ஆகவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகைய

அமானுஷ்ய பொருளைப் பற்றிய அறிவு வரவேண்டுமெனில், சாஸ்திரங்களே வழி. இத்தகைய சாஸ்திரங்களில் சொல்லபப்ட்டிருக்கும் வழிமுறைகளை பின்பற்றி நடப்பதே வர்ணாசிரம தர்மம் ஆகும்.

தர்மம் என்றால் என்ன?

வர்ணாசிரம தர்மங்களை புரிந்துகொள்வதற்கு முன்னர், தர்மம் என்னும் சொல்லுக்கு என்ன பொருள், எந்த சிறப்பு அர்த்தத்தில் இந்த சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்று அறிவது முக்கியம். 'த்ரீயதே லோக: அனேக அதவா தரதி லோகம் இதி தர்ம:' என்னும் வாக்கியத்திலிருந்து, உலகத்தைக் காப்பதற்கு சாதனமாக இருப்பதை தர்மம் என்று அழைக்கிறோம். இந்த வார்த்தையை, பல்வேறு அர்த்தங்களில் பயன்படுத்துகிறார்கள். ஜாதி மற்றும் சம்பிரதாயத்திற்கு ஏற்ற அனுஷ்டானங்கள், நியமங்கள், அரசாணை இவைகளைக்கூட தர்மம் என்று சொல்லலாம். நீதி, நற்குணம், கருணை, புண்ணிய காரியங்கள் ஆகியவற்றையும் தர்மம் என்று பொதுவாக சொல்கின்றனர். ஆனால், சாஸ்திரங்களில் தர்மம் என்னும் சொல்லுக்கு என்ன சிறப்புப் பொருள் சொல்லியிருக்கின்றனர் என்பதைப் பார்த்து, அதன் ஸ்வரூபம் என்ன? லட்சணம் மற்றும் வகைகள் என்ன? என்பதைப் பற்றிய அறிவைப் பெறவேண்டும். 'சோதனா லக்ஷணோர்த்தோ தர்ம:' இது ஜைமினி வசனம். பாகவதத்திலும் 'வேத ப்ரணிஹிதோ தர்மோஹ்ய தர்ம: தத்விபர்யய:' என்று சொல்லியிருப்பதால், 'அர்த்தவே ஸதி சோதனா கம்யத்வம் தர்மலக்ஷணம்' - என்றால், விருப்பத்தினால், ஆணையினால் கிடைத்த அர்த்தம் என்று பொருள் வருகிறது.

ஸ்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கும் அனுஷ்டானங்கள், அனுஷ்டானங்கள் இல்லாதவை ஆகியவற்றை மட்டுமே தர்மங்கள் என்று ஆகின்றன. சம்பிரதாயமாக வந்த அனுஷ்டான ங்கள் தர்மங்கள் இல்லையா? என்றால் அதுவும் தர்மங்களே. தர்மங்களின் லட்சணங்கள் அவற்றிற்கும் பொருந்துகின்றன. சம்பிரதாயம் என்றபிறகு, அவையும் ஸ்ருதி ஸ்ம்ருதிகளிலிருந்து எடுத்தவையாகவே இருக்கவேண்டும். 'அசாராச்ச ஸ்ருதிம்

ஞாத்வா ச்ருதேஸ்ச ஸ்ம்ருதி கல்பனம்' என்னும் வசனம் இதற்கு ஆதாரம்.

வித்வத்பி: ஸேவிதஸ்சத்பி: நித்யமத்வேஷராகிபி: |
ஹ்ருதயேனாப்யனுஞ்ஞாதோ யஸ்தம் தர்ம வ்யவஸ்திதி ||

என்று சொல்லப்படுகிறது.

கோபம், வெறுப்பு ஆகிய தோஷங்கள் அற்ற சஜ்ஜனர்களான ஞானிகளால் எந்த அர்த்தம் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதோ மற்றும் எந்த அர்த்தம் சிறப்பானதோ, நமது நலனுக்கு நல்லது என்று நமக்கு நம்பிக்கை தோன்றுகிறதோ, அதுவே தர்மம். இதே விஷயத்தில் 'யயார்யா: க்ரியமாணம் து ஷம்ஸந்த்யா கமவேதின: | ந தர்மோ யம் விகர்ஹந்தி தமதர்மம் ப்ரசக்ஷதே' என்று பிரமாணம் இருக்கிறது. வேதார்த்தங்களை அறிந்த ஞானிகள் எந்த செயல்களை புகழ்கின்றனரோ, அது தர்மம். எவற்றை ஒதுக்குகிறார்களோ, அது அதர்மம்.

வேதோக்த: பிரதமோ தர்ம: தர்மசாஸ்திரேண ஜாபர: |
சிஷ்டாசாரஸ்த்ருதீயஸ்து த்ரிவிதம் தர்மலட்சணம் ||

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் தர்மங்கள், தர்ம சாஸ்திரங்க ளில் நிரூபிக்கப்பட்ட தர்மங்கள் மற்றும் பழக்க வழக்கம் (சம்பிரதாயம்) என்று தர்மங்கள் மூன்று வகைப்படுகின்றன. தர்மங்கள் என்றால் என்ன என்பதை புராண இதிகாசங்களில் பலவிதங்களாக நிரூபணம் செய்திருக்கின்றனர்.

ஸத்யா வாணீ ப்ரபாதானம் ஜாகரம் ஹரிவாஸரே |
பாலனம் போஷ்யவர்கஸ்ய தர்மசார சதுஷ்டயம் ||

என்று ஸ்காந்த புராணத்திலும்,

தாத்ரீஸ்னானம் ஹிதம் வாக்யம் வேதாப்யாஸோ ஹரே: கதா |
பிக்ஷாஷனம் குரோ: பூஜா ஷட்விதம் தர்மலக்ஷணம் ||

என்று ஸ்ம்ருதியிலும்,

த்ருதி: க்ஷமா தமோऽதேயம் ஷௌசமிந்திரிய நிக்ரஹ: ।
ஹ்ரீர்வித்யா ஸத்யமக்ரோதோ தஷகம் தர்மலக்ஷணம் ॥

என்று யாக்ஞவல்க்ய வசனத்திலும்,

தயா க்ஷமாऽநசூயா ச ஷௌசானாய ஸமங்களம் ।
அகார்பண்யம் ஜாஸ்ப்ருஹத்வம் சர்வசாதாரணானி து ॥

என்று ப்ருஹஸ்பதி வசனத்திலும்,

உற்றார், உறவினர், நண்பர், எதிரிகள் என யாராக இருந்தாலும் கஷ்டத்தில் வந்து உதவி கேட்டால் அவர்களை காப்பது தயை. அவர்களால் முன்னர் துக்கமடைந்திருந்தாலும், தற்போது கோபம் கொள்ளாமல் இருப்பதே மன்னிப்பு. மற்றவர்களிடம் இருக்கும் சத்குணங்கள், அது கொஞ்சமே இருந்தாலும், அவரது பிற குறைகளை கண்டுகொள்ளாமல் இருப்பதே பெருந்தன்மை. சாப்பிடக்கூடாதவற்றை சாப்பிடாமல், சஜ்ஜனர்களிடம் நட்பில் இருந்து தன்னுடைய வர்ணாசிரம தர்மங்களை சரியாகப் பின்ப ற்றுவதே நேர்மை. எந்த செயல்கள் அவை நல்லதாகவே இருந்தாலும், நம் உடலை மிகவும் பாதிக்கிறதோ, அத்தகைய செயல்களை செய்யாமல் இருப்பதே நல்லது. (குறிப்பு: இது நித்ய கர்மானுஷ்டானங்களுக்கு பொருந்தாது). அனைவரும் ஒப்புக் கொள்ளும் செயல்களையே செய்வது மற்றும் ஒப்புக்கொள்ளாத செயல்களை விடுவது - மங்களம். தினந்தோறும் மகிழ்ச்சியுடன் சிறிதாவது மற்றவர்களுக்கு ஈவதே காருண்யம். கடவுள் அருளால் கிடைத்த சிறிது லாபத்தில் / செல்வத்தில், திருப்தியடைந்து, பிறரின் செல்வத்திற்கு ஆசைப்படாமல் இருப்பதே வைராக்கியம். இப்படியாக பலவிதமான தர்மங்களும், அவற்றின் லட்சணங்களும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. மகாபாரதத்தில்:

தர்மோ பஹுவிதோ லோகே ஶ்ருதிபேதமுபோத்பவ: ।
தேஷதர்மாஸ்ச த்ருஷ்யந்தே குலதர்மாஸ்ததைவ ச ॥
ஜாதிதர்ம வயோதர்மா: குணதர்மாஸ்ச ஷோபனே ।
ஷரீர காலதர்மாஸ்ச ஆபத்தர்மாஸ்ததைவ ச ॥
ஏதத்தர்மஸ்ய நானாத்வம் க்ரியதே லோகவாஸிபி: ॥

என்று சொல்லப்பட்டிக்கும்படி, தர்மத்தில் பல்வேறு உட்பிரிவுகள் உள்ளன. தேச தர்மம், குல தர்மம், ஜாதி தர்மம், வயோ தர்மம், குண தர்மம், சரீர தர்மம், கால தர்மம் என்று ஆபத்தர்ம என்பதே இதன் முக்கிய வகைகள். இந்த விஷயத்தைப் பற்றி சுமந்து வசனம் இப்படி சொல்கிறது:

வர்ணத்வமேகமாஸ்ரித்ய யோ தர்ம: சம்ப்ரவர்த்ததே |
வர்ணதர்மஸ்ய உக்தஸ்ய யதோபசயனாத் கில ||
யஸ்த்வாச்ரமத்வ மாஸ்ரித்ய அதிகார: ப்ரவர்த்ததே |
ஸ ஏவ ஆச்ரமதர்ம:ஸ்யாத் பிக்ஷாதிஸ்சோதிதோ யதா ||
வர்ணத்வ யாஸ்ரமத்வம் ச யோऽதிக்ருத்ய ப்ரவர்த்ததே |
சவர்ணாச்ரம தர்மஸ்து யதா மௌஞ்சி ச மேகலா ||
யோ குணேன ப்ரவர்த்தேத குணதர்மஸ்ஸ உச்யதே |
யதா மூர்த்தபிஷிக்தஸ்ய ப்ரஜானாம் பரிபாலனம் ||
நிமித்தமேகமாஸ்ரித்ய யோ தர்மஸ்சம்ப்ரவர்த்ததே |
நைமித்திகஸ்ய விக்ஞேய: ப்ராயஸ்சித்த விதிர்யதா ||

முன்னர் சொன்னதைப் போல, பிராமண, க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்ர முதலான வர்ணங்களையும், பிரம்மசர்ய, கிருஹஸ்த, வான பிரஸ்த, யதி முதலான ஆசிரமங்களையும், சேர்த்துக்கொண்டு சொல்லப்படும் தர்மங்களே வர்ணாசிரம தர்மங்கள் என்று சொல்வர். பின்பற்றக்கூடிய தர்மங்களுக்கு ஆதாரம் எது என்பதற்கு யாக்ஞவல்க்யர் இப்படி சொல்கிறார்.

ஸ்ருதி ஸ்ம்ருதீ சதாசார: ஸ்வஸ்ய ச ப்ரியமாத்மன: |
சம்யக் சங்கல்பஜ: காம: தர்மமூலமிதம் ஸ்ம்ருதம் ||

இதே விஷயத்தில் மனு வசனமானது இப்படி சொல்கிறது:

வேதோऽகிலோ தர்மமூலம் ஸ்ம்ருதிஷீலே ச தத்விதாம் |
ஆசாரஸ்சைவ சாதூனாம் ஆத்மனஸ்தஷ்டிரேவ ச ||

வேதமே அனைத்து தர்மங்களுக்கும் மூலம். அதன்பிறகு ஸ்ருதிகள். சம்பிரதாயம் மற்றும் ஆத்ம திருப்தியே அனைத்து தர்மங்களுக்கும் ஆதாரம். 'சிஷ்டா: கலு அக்ருத்யந்தோऽ

னசூயந்தோ ! நிரஹங்காரமத்ஸரா: கஜவ: ஷம சம்பன்னா: சிஷ்டாசாரா பவந்தி தே |' இந்த பிரமாணத்தின் முடிவில் 'தர்மே ணாதி கதோ யைஸ்து வேத: சபரிப்ரஹ்மண: | தே சிஷ்டா: பிராமணா ஞேயா: ஸ்ருதிப்ரத்யக்ஷஹேதவ: |' சாதவ: க்ஷீண தோஷா: ஸ்யு: சச்ஷப்த: ஸாதுவாசக: | தேஷாம் ஆசரணம் யத்து ஸதாசார ஸ்ஸ உச்யதே |' அனைத்து வேதங்களையும் சரியாக அத்யயனம் செய்து ஷம தம குணங்களைப் பெற்று தோஷங்கள் அற்ற சாதுகளின் வழிமுறைகளே பிரமாணம் ஆகும்.

ஆத்மதிருப்தியே பிரமாணம் என்று சொல்பவர்களின் அபிப்பிராயம் என்னவென்றால் - பின்பற்ற வேண்டிய தர்மங்கள் சரியாக சொல்லப்படவில்லை எனில், அதாவது எப்படி வேண்டு மானாலும் செய்யலாம் எனில், எப்படி செய்தால் தனக்கு திருப்தி உண்டாகுமோ அதையே செய்ய வேண்டும் என்கிறார்கள். சிஷ்டாசாரமே பிரமாணம் என்று சொல்பவர்கள், தேவாதிகளின் வழிமுறை என்று சொல்லி பின்பற்றக்கூடாது. அப்படி செய்வதால், தோஷங்களே வந்து சேரும்.

தர்மஸ்யதிகரோ த்ருஷ்ட: மஹதாம் ஸாஹஸம் ததா |
ததன்வீக்ஷ்ய ப்ரயுஞான: ஸ சீதத்யவரோऽபல: ||
தேஜோபலானி பூர்வஎஷாம் ஷரீராணீந்த்ரியாணி ச |
தோஷ்டைஸ்து நோபலிஸ்யந்தே பத்மபத்ரமிவாம்பஸா ||
அனுஷ்டிதம் ச யத்தேவ்யை: முனிபிர்யதனுஷ்டிதம் |
நானுஷ்டேயம் மானுஷைஸ்து உக்தம் கர்ம ஸமாசரேத் ||

பரம ஞானிகளான தேவதைகளிலும், முனிஸ்ரேஷ்டர்களிலும் பற்பல சந்தர்ப்பங்களில் நம் பார்வையில் தர்ம மீறல்களை பார்க்கிறோம். அதைப் பார்த்து நாமும் அவர்களைப் போலவே பின்பற்றலாம் என்றால், நாம் நாசத்திற்கு காரணமாவோம். அவர்களின் வலிமை, தேஜஸ், சரீரம், இந்திரியங்கள் மற்றும் செயல்கள் பிரபலமானவைகளாக இருப்பதால், தாமரை இலைகளில் நீர் எப்படி படாமல் இருக்கிறதோ, அதைப் போலவே அவர்களுக்கும் பாவங்கள் படுவதில்லை (சேர்வதில்லை). வலிமையில்லாத, குறைந்த சக்தியுள்ள அல்பராகிய மக்கள்,

தர்மங்களை சரியாக பின்பற்றவில்லையெனில், அது பாவம். ஆகையால், மனிதர்கள் முன் சொன்ன பிரமாணங்களுக்கேற்ப தங்களுக்கு விதிக்கப்பட்ட தர்மங்களை சரியாக பின்பற்ற வேண்டும். செய்யக்கூடாத தர்மங்களை விடவேண்டும்.

ய: சாஸ்த்ரவிதிமுத்யுஜ்ய வர்ததே காமகாரத: |
ந ஸ சித்திமவாப்னோதி ந சுகம் ந பராம் கதிம் ||
தஸ்மாச்சாஸ்திரம் ப்ரமானம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ |
ஞாத்வா சாஸ்திரவிதானோக்தம் கர்ம கர்து விஹார்ஹஸி ||

என்னும் கீதை வசனம், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவாறு, புருஷர்கள் தர்மங்களை பின்பற்றவேண்டும் என்று சொல்கிறது. விஸ்வாமித்ரர் மேனகையிடம் மோகம் கொண்டது. பராசரர் படகோட்டியின் மகளிடம் சங்கமானது. குந்திதேவி யயாதி தேவதைகளிடம் மக்களைப் பெற்றது. பாண்டவர்கள் ஐவர் திரௌபதி ஒருவரையே திருமணம் செய்து கொண்டது ஆகிய பல்வேறு செயல்கள், மனிதர்கள் பின்பற்றக்கூடியதல்ல.

யத்யதாசரதிஸ்ரேஷ்ட: தத்ததேவேதரோ ஜன: |
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்ததனுவர்த்ததே ||

என்னும் கீதா வசனம், தேவாதிகளின் தர்மத்தை பின்பற்றாமல் இருந்த செயல்களை நாம் பின்பற்றத் தேவையில்லை. தேவதைகளின் மற்றும் பராசர, விஸ்வாமித்ராதி முனி ஸ்ரேஷ்டர்களின் செயல்களில் இருக்கும் ஆத்யாத்மிக தத்வங்கள் மிக ஆழமானவை. மற்றும் நாம் பின்பற்றத் தேவையான விஷயங்கள் அல்ல. வேத ஸ்ம்ருதிகள், சதாசார இவற்றில்கூட சொல்லப்படாத புதியபுதிய விஷயங்களை நாம் காண்பது சகஜமே. இத்தகைய கஷ்டமான சந்தர்ப்பங்களில், நாம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதையும் சாஸ்திரங்களே சொல்கின்றன.

'யத்ர புன: ஸ்ருத்யாதயோ ந ஸந்தி தத்ர பரிஷத்வசனம் ப்ரமாண மித்யாஹ மனு:'

அனாம்னாதேஷு தர்மேஷு கதம் ஸ்யாதிதி சேத் பவேத் |

யம் சிஷ்டா: ப்ராஹ்மணம் ப்ரூய: ஸ தர்மாஸ்ய தஷங்கித: ||

அதாவது, தர்மத்திற்கான ஆதாரங்களில் என்று பொருள். எந்தவொரு விஷயத்திற்கு ஸ்ருதி முதலான ஆதாரங்கள் இல்லையோ, அந்த விஷயங்களில் பரிஷத் வசனமே ஆதாரமாகும். பரிஷத் என்றால் என்ன? என்பதைக்கூட :

ருக்வேத வித்யஜுர்வேதவிஸ்ச சாமவேதவிதேவ ச |
த்ரவரா பரிஷத்ஞேயா தர்மஸம்ஷய நிர்ணயே ||

ரிக்வேதம் படித்தவரோ, யஜுர்வேதம் படித்தவரோ அல்லது சாமவேதம் படித்தவரோ அல்லது இவை மூன்றையும்விட குறையில்லாத சங்கத்திற்கு 'பரிஷத்' என்று பெயர். அத்தகைய பரிஷத்தின் வசனங்களும் ஒரு ஆதாரமே. அல்லது 'அத்யாத்மக வித்யாஸ்ரேஷ்டோ தர்மக்ஞஸ்ச ஸ ஏகோ வா யமர்த்தம் தர்மவத்தயா ப்ரூதே ஸோபி தர்ம: ஸ்யாத் !' பிரம்மவித்யா மற்றும் தர்மவித்யாஞானியானவன் ஒருவனே இருந்தாலும், அவனே பரிஷத் என்று நினைத்து, அவன் சொல்வதையே ஆதாரம் என்று நினைக்கவேண்டும். ஆனால், முன்பு சொன்னதைப் போல பரிஷத் வாக்கியமானது, வேதாதி வாக்கியங்களுக்கு எதிராக இல்லாது இருந்தால் மட்டுமே அதை ஆதாரம் என்று கொள்ளவேண்டும். இந்த விஷயத்தில் மனு வசனம் இப்படியாக இருக்கிறது.

யோனாஸ்ய பிதரோ யாதா: யேன யாதா: பிதாமஹா: |
தேன யாயாத் ஸதாம் மார்கே தேன கச்சன்ன துஷ்யதி ||

தன்னுடைய மூதாதையர்கள் எந்த வழியில் சென்றார்களோ, அதே வழியை தானும் பின்பற்றினால், அதில் எந்தவொரு குற்றமும் இல்லை. "ஸ்வகுல மாத்ரகதாசார: சம்ப்ரதாய:"

தன் குலத்தில் மட்டும் வந்திருக்கும் பழக்கமே, சம்பிரதாயம் என்று பெயர் பெறுகிறது.

யத்ர சாஸ்திரகதிர்பின்னா ஸர்வகர்மஸு பாரத |
உதிதேऽனுதிதே சைவ ஹோமபேதோ யதா பவேத் ||

யஸ்மின்குலே க்ரமாயாதம் ஆசாரம் த்வாசரேத்புத: |
ஸ கரீயான் மஹாபாகோ சர்வசாஸ்த்ரோதிதாதபி ||

என்னும் சுமந்து வசனம் குலாசாரமும் ஆதாரமே என்று தெளிவாக கூறுகிறது.

தர்மங்களில் ஆதாரம் என்று சொல்லப்படும் ஸ்ருதி, ஸ்ம்ருதிகளுக்கு ஆதாரம் எப்படி கிடைக்கும் என்பதை அறிய வேண்டியதாகிறது. வேதங்கள் அனாதி காலத்திலிருந்து இருப்பவை ஆகையால் அவை ஆதாரம் எனப்படுகிறது. புருஷனால் உருவாக்கப்படாததால், அவனால் செய்யப்படும் தோஷங்கள் அவற்றில் இல்லாததால், வேதங்கள் ஆதாரம் ஆகின்றன. உண்மைகளையே சொல்கின்றன. ஸ்ருதிகளும் வேதங்களிலிருந்து வந்தவைகளாகையால் அவையும் பிரமாணங்களே. வேத வாக்கியங்கள் புரிந்து கொள்வதற்கு கஷ்டமாக இருப்பதாலும், வேதங்களில் சொல்லப்பட்டுள்ள ஆதாரங்கள் முரண்களாக இருக்கக்கூடிய சாத்தியம் இருப்பதாலும், மகாஞானிகளைத் தவிர மற்றவர்களுக்கு வேதங்களில் சொல்லப்பட்ட தர்மங்கள் அனைவருக்கும் புரியவேண்டுமென்று, ஸ்ருதிகாரர்கள் மிகவும் கருணையுடன் ஸ்ருதி புராணங்களை கொடுக்கவும், அவை வேதங்களிலிருந்தே வந்திருப்பதால், ஆதாரம் என்றும் கருதப்பட்டன. இந்த விஷயத்தில் மரீசி வசனம் இப்படி சொல்கிறது :

துர்போதா வைதிகாஷ்யப்தா: ப்ரகீர்ணத்வாஸ்ச யோsகிலா: |
தஜ்ஜைஸ்த ஏவஸ்பஷ்டார்த்தா: ஸ்ம்ருதிதந்த்ரே ப்ரதிஷ்டிதா: ||

சதாசாரம், பரிஷத் வாக்கியம், குலாசாரங்கள் ஆகியவை ஸ்ருதி ஸ்ம்ருதியிலிருந்து வந்தவையே ஆகையால் அவற்றையும் ஆதாரங்களாகக் கொள்ளலாம்.

மேலே சொன்ன ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் உள்ள தர்மங்கள், அனைவருக்கும் பொருந்தி வந்தாலும், தேசகால வேறுபாடு களால் சிலரால் பின்பற்றப்பட்டும், சிலரால் ஒதுக்கப்பட்டும் வருகின்றன. அதாவது, க்ருத த்ரேதாதி யுகங்களில் செய்யத்தக்க சில தர்மங்கள், த்வாபர கலியுகங்களில் செய்யத்தக்கவை அல்ல.

அந்தந்த யுகங்களில் மக்களின் அறிவு, பலம், வீரம், வலிமை ஆகிய அனைத்தும் வேறுபட்டிருப்பதால், அவர்கள் பின்பற்றும் தர்மங்களும் வேறுபட்டிருப்பது சகஜமே. அது போலவே, வெவ்வேறு இடங்களில் வசிக்கும் மக்களுக்கு, தர்மத்தை பின்பற்றத் தேவையான சாதனங்கள் வேறுபடுவதால், அதைப் பின்பற்றுவதிலும் வேறுபாடுகள் இருக்கின்றன. 'ஸ்ருதி ஸ்ம்ருதீ ஹரேராக்ஞே' என்பது போல, வேதங்களில் சொல்லப்பட்டுள்ள தர்மங்கள் அனைத்தும் பகவந்தனின் ஆணையே ஆகியிருப்பதால் எப்படிப்பட்டதாக இருக்கவேண்டும் என்று அறியவேண்டும்.

பரமமங்கள மூர்த்தியும், கருணைக்கடலுமான பரபிரம்மனின் ஆணையும் மங்களகரமாகவே இருக்கவேண்டும். சஜ்ஜனர்கள் மேம்பட வேண்டும் என்பதே அவனது விருப்பமாக இருப்பதால், அவனின் ஆணைகளான தர்மங்கள், எல்லா காலங்களிலும், எல்லா இடங்களிலும் மக்கள் பின்பற்றத் தக்கவையாகவே இருக்கவேண்டுமே தவிர புறக்கணிக்கத்தவை அல்ல. ஆகையால், கால-தேச வேறுபாடுகளால் செய்யப்படும் தர்மங்கள், அந்தந்த ஸ்ருதி, ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருப்பதிலிருந்து வேறுபட்டு இருக்காதவரை, அவனுக்கு அது சம்மதமே. வேதங்களை அறிந்த, தத்வஞானிகளும் ஆம, ஆதாரங்களைக் கொடுக்கவல்ல மற்றும் மக்களை விரும்புவர்களுமான ஸ்ருதி-கர்த்தர்கள், அந்தந்த காலங்களில், பல்வேறு இடங்களில் வரும் புதிய புதிய மாற்றங்களை கண்டுகொண்டு, தர்மங்கள் நஷ்டமாகக் கூடாதென்று சொல்லி, அந்தந்த தேச-காலங்களில் மக்களின் தகுதி, அவர்கள் சாதனைகளை செய்வதற்கு தகுந்த வழிகள் என்ன இருக்கிறது என்பதை அறிந்து, எப்படி ஒரு நல்ல வைத்தியன் எந்த மருந்தினைக் கொடுத்தால், நோயாளியின் நோய் சரியாக, விரைவாக குணமடையுமோ அதைக் கொடுத்து அந்த நோயை குணப்படுத்துகிறாரோ, அதைப் போலவே, அந்தந்த தேச- காலங்களுக்கேற்ப தர்மங்களை இவர்கள் நிர்ணயித்திருக் கிறார்கள். ஆகையாலேயே, ஸ்ம்ருதியை எழுதியவர்கள் பலர். மற்றும் ஸ்ம்ருதிகளும் பல உள்ளன.

இந்த விஷயத்தில் சில உதாரணங்களைக் கொடுக்க வேண்டியது கட்டாயமாகிறது.

யத்க்ருதே தஷபிர்வர்ஷை: த்ரேதாயாம் ஹாயனேன து |
த்வாபரே தஸ்ச மாஸேன ஹ்யஹோராத்ரௌ து தத்கலௌ ||

க்ருதயுகத்தில் ஒரு தர்மத்தை பத்து ஆண்டுகள் அனுஷ்டானம் செய்வதால் எவ்வளவு பலன் வருமோ, அதே பலன் த்ரேதாயுகத்தில் ஒரு ஆண்டு, த்வாபரயுகத்தில் ஒரு மாதம், கலியுகத்தில் ஒரு நாள் பின்பற்றினாலே கிடைக்கின்றது.

த்யாயன் க்ருதே யஜன் யக்ஞை:
த்ரேதாயாம் த்வாபரேऽர்சயான் |
யதாப்னோதி ததாப்னோதி
கலௌ சங்கீர்த்ய கேஷவம் ||

க்ருதயுகத்தில் தியானம் முதலானவைகளால் கிடைக்கக்கூடிய பலன்கள், த்ரேதாயுகத்தில் யக்ஞ யாகாதிகளினாலும், த்வாபர யுகத்தில் பகவத் பூஜாதிகளாலும், கலியுகத்தில், மிகச் சுலபமான ஹரிகீர்த்தனைகளினாலும் கிடைக்கின்றது.

தர்மோத்கர்ஷமதீவாத்ர ப்ராப்னோதி புருஷ: கலௌ |
ஸ்வல்பாயாஸேன தர்மக்ஞ: தேன துஷ்டோऽஸ்ம்யஹம் கலௌ ||

கலியுகத்தில் தர்மத்திற்கு சிறப்பான அந்தஸ்து இருக்கிறது. புருஷனின் மிகச்சொற்பமான தர்மத்தினாலேயே நான் மகிழ்ச்சியடைகிறேன் என்று பகவந்தன் சொல்கிறார்.

ந வித்வத்தான ஷுத்தோऽர்த்தோ ந ஷுத்திர்மனஸ: கலௌ |
யதோऽத: ஸத்யமேவைகம் நராணாமுபகாரகம் ||

கலியுகத்தில் மனிதர்களுக்கு ஞானம் குறைவு, மனத்தூய்மை குறைவு, சாதனைக்குத் தேவையான உபகரணங்கள் குறைவு ஆகையால், 'சத்ய' (உண்மை) என்னும் ஒரே ஒரு தர்மமே

முக்கிய நோக்கமாக இருக்கவேண்டும். ஆகையால், யஸ்து கார்தயுகோ தர்ம: ந கர்தவ்ய: கலௌ யுகே ||

க்ருதயுகத்து தர்மங்களை நாம் கலியுகத்தில் அனுஷ்டானம் செய்யக்கூடாது.

க்ருதே சம்பாஷணாதேவ த்ரேதாயாம் ஸ்பர்ஷனேன ச |
த்வாபரே த்வன்னமாதாய கலௌ பததி கர்மணா ||

என்னும் வசனத்திற்கேற்ப கலியுகத்தில் பாவங்களை சம்பாதிப்பது மற்ற யுகங்களைவிட குறைவே. க்ருதயுகத்தில் வெறும் பேச்சுக்களாலேயே பாவங்கள் வந்து சேர்ந்தன. த்ரேதா யுகத்தில் கெட்ட பொருட்களின் ஸ்பரிசத்தினால் பாவம் வந்தது. த்வாபர யுகத்தில் கெட்ட உணவினை உண்டால் பாவம் வந்து சேர்ந்தன. கலியுகத்திலோ மனிதன் கெட்ட செயல்கள் செய்வதனால் மட்டுமே பாவியாகிறான். அதாவது, பரம கருணாசாலியான ஹரி, கலியுகத்தில் சஜ்ஜனர்களுக்கு இருக்கும் கொஞ்சம் அறிவையும், தர்மானுஷ்டானங்களுக்கு இருக்கும் எதிர்வினைகள் / பிரச்னைகளையும் அறிந்து, கலியுகத்தில் சஜ்ஜனர்கள் செய்யும் சிறிதளவு தர்மத்தினாலேயே திருப்தி யடைகிறான் மற்றும் அவர்களின் பொதுவான குறைகளை கண்டுகொள்ளாமல், அவர்களை மன்னிக்கிறான்.

காலதர்மங்களில் எப்படி பேதங்கள் இருக்கின்றனவோ, அதுபோலவே தேச தர்மங்களிலும் பேதங்கள் இருப்பது சகஜமே.

தேஷஜாதி குலானாம் ச யே தர்மா யத்ப்ரவர்த்திதா: |
ததைவ தே பாலனீயா: ப்ரஜா ப்ரக்ஷுப்ய தேன்யதா ||

அந்தந்த இடங்களில் எந்தெந்தெ தர்மங்கள் வெகு காலங்களாக இருக்கின்றனவோ, அதனை அப்படியே பின்பற்ற வேண்டும். அப்படி செய்யவில்லை எனில், மக்களுக்கே கஷ்டம் வரும்.

தேஷாசாரா: தாவதாதௌ விசிந்த்யோ
தேஷே தேஷே யா ஸ்திதி: ஸ்யைவ கார்யா |
யோகத்விஷ்டம் பண்டிதா வர்ஜயந்தி

தைவக்ஞோऽதோ லோகமார்கேண யாயாத் ||

ஒவ்வொருவரும் முதலில் உலக நியதி என்ன? நாட்டின் நிலை என்ன? ஆகியவற்றை அறிந்து, அதற்கேற்பவே தர்மானுஷ்டான ங்களை செய்ய வேண்டும். நாட்டின் நிலையை கவனிக்காமல், தன் வழி தனி வழி என்று நடந்தால், அத்தகைய வழி சாஸ்திரத்திற்கு ஏற்றவாறு இருந்தாலும், மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது ஆகையால், அத்தகையவர்களை பண்டிதர்கள் ஒதுக்கிவிடுவார்கள். மக்கள் வழியிலேயே நடப்பது அறிவாளிகளின் இயல்பு.

"ஷாஸ்த்ரதுஷ்டம் யதா த்யாஜ்யம் ததா லோகவிரோத்யபி"

என்பது இந்த விஷயத்திற்கான ஆதாரம். தென்னிந்தியாவில், உபநயனம் ஆகாத மகனுடன் ஒரே இலையில் உண்பது, மனைவியுடன் ஒரே இலையில் உண்பது, அத்தையின் மகளை / மாமன் மகனை திருமணம் செய்து கொள்வது இவையெல்லாம் தர்மம். இந்த முறையானது, நாட்டின் பல பாகங்களில் பின்பற்றாவிட்டாலும், இதை கேலி செய்யமுடியாது. வேறு தேசங்களில் விதவைத் திருமணம் நடக்கிறது. இன்னும் வேறு இடங்களில், சொந்த குலப்பெண்களையே திருமணம் செய்துகொள்வதும் நமக்குத் தெரிகிறது. இப்படியாக, சம்பிரதாயங்கள் வெவ்வேறு இடங்களில் வேறுபட்டாலும், இவை அந்தந்த இடத்தில் ஞானிகளால் அங்கீகாரம் பெறப்பட்டு, அதை கேலி செய்வது தவறு என்பதற்கு 'தத்ர தான்னாவமன்யேத தர்மஸ்தத்ரைவ தாத்ருஷ:' என்னும் ஆதார வாக்கியம் இருக்கிறது.

மேலே பார்த்தவாறு, ஸ்ருதி ஸ்ம்ருதிகள் பல்வேறு விதமாக தர்மங்களை சொல்வதால், அவற்றை பின்பற்றுவதில் சஜ்ஜனர்களுக்கு சிறிது சந்தேகம் வரலாம். எந்த ஸ்ம்ருதிகளை நாம் பின்பற்றுவது சரியாகும் என்கிற சந்தேகம் வருகிறது. மேலும், தர்மங்களுக்கான ஆதாரம், இப்படி வெவ்வேறாக இருந்தால், அந்த ஆதாரத்தின் மேலும் சந்தேகம் வலுக்கலாம். ஸ்ம்ருதிகளுக்கு, ஸ்ருதியே மூலம் என்றானபிறகு, வேதங்களின்

அடிப்படையில் வருபவற்றில் பேதங்கள் இருக்கின்றவா என்கிற கேள்வியும் வருகிறது. இத்தகைய கேள்விகளுக்கு ஸ்ம்ருதிகளிலேயே பதிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

வேதம் அனந்தம். 'வேதா வை அனந்தா:' என்று வேதங்களிலேயே இருக்கிறது. வேதங்களை முழுமையாக அறிந்தவர் யாரும் இல்லை. வேதங்களின் சில பாகங்களைப் படித்தறிந்த ஞானிகள், அந்தந்த பாகத்திற்கேற்ப தர்மங்களை காட்டியிருக்கிறார்கள். அப்படியெனில், வேதத்தின் ஒரு பாகத்தில் சொல்லப்பட்ட தர்மங்களுக்கு, வேறொரு பாகத்தில் சொல்லப்பட்ட தர்மங்கள் எதிர்மறையாக இருக்குமா? என்னும் சந்தேகத்திற்கு 'ஓம் கதிஸாமான்யாத் ஓம்' என்னும் பிரம்ம சூத்ரத்தில் பதில் இருக்கிறது. 'சர்வே வேதா யுக்தய: சுப்ரமாணா ப்ராஹ்மம் ஞானம் பரமம் த்வேகமேவ | ப்ரகாஷயந்தே ந விரோதே குதஸ்சித் வேதேஷு சர்வேஷு ததேதிஹாஸே | இதி பைங்கிஸ்ருதே: கதே: ஞானஸ்ய சாம்யமேவ' என்பது பாஷ்யத்தில் இருக்கும் வசனம்.

அனைத்து வேதங்களும், ஆகமங்களுக்கு சம்மதமான அனைத்து வழிமுறைகளும்கூட, ஒரே மாதிரியான பிரம்மஞானத்தையே கொடுக்கின்றன என்றும் வேத வசனங்களில் எந்தவொரு வேறுபாடுகளையும், சந்தேகங்களையும் காணக்கூடாதென்றும் சொல்லப்படுகிறது. அப்படியெனில், ஸ்ருதிகளில் சொல்லப்பட்ட தர்மங்களில் வேறுபாடுகள் எப்படி வருகின்றன என்று கேட்டால், ஞானிகளும், தத்வங்களை விளக்கக்கூடியவர்களுமான ஸ்ம்ருதிகாரர்கள், தேச கால வேறுபாடுகளால், பின்பற்றுவதற்கும் வெவ்வேறு வழிகளை கூறியிருப்பதால், ஆதாரங்களில் வேறுபாடுகள் இல்லை. எந்தெந்த காலங்களில் எந்த ஸ்ருதி வசனங்களுக்கேற்ப செயல்களை செய்யவேண்டும் என்பதை ஸ்ம்ருதிகளே சொல்லிக் கொடுக்கின்றன.

க்ருதே து மானவா தர்மா: த்ரேதாயாம் கௌதமா: ஸ்ம்ருதா: |
த்வாபரே ஷங்கலிகிதா: கலௌ பாராஷரா: ஸ்ம்ருதா: ||

தேசகால வேறுபாடுகள் இருப்பதைப் போலவே, வயோதர்ம, குணதர்ம, ஷரீர தர்ம, ஜாதி தர்ம என்றும்கூட வேறுபாடுகள் உள்ளன. வயதைக் காரணம் காட்டி செய்யப்படும் மீறல்களுக்கு தோஷம் இல்லை. சிறுவர்களால், வயதானவர்களால் செய்யமுடியாத தர்மங்களுக்கு தோஷங்கள் இல்லை. குண தர்மம் என்றால்:

யோ குணேன ப்ரவர்த்தேன குணதர்மஸ்ய உச்யதே |
யதா மூர்தாபிஷிக்தஸ்ய ப்ரஜானாம் பரிபாலனம் ||

என்னும் ஆதாரத்திற்கேற்ப, மனிதன் தனக்குள் இருக்கும் ஒரு குணத்தால் செய்யவேண்டிய தர்மங்கள், குணதர்மம் எனப் படுகிறது. இத்தகைய தர்மத்தில், குறை ஏற்பட்டால் அது மிகப் பெரிய தோஷம் ஆகும். ஒருவன், அரசனாகி, பட்டாபிஷேகம் ஆனால், ராஜத்வ என்னும் சிறப்பு குணம் அவனில் வருகிறது ஆகையால், மக்களை பாதுகாப்பது என்பது அவனுடைய முக்கியமான கடமை / தர்மம் ஆகின்றது. அரசனானபிறகு மக்களின் வளர்ச்சி / மேம்பாட்டினை கவனிக்காமல் இருந்தால், அது மிகப்பெரிய தோஷம் ஆகும். அதிகாரம் கையில் கிடைத்தால், அந்த அரசாட்சி முறையை மீறாமல், தன் அதிகாரத்தை பயன்படுத்தி கடமையை செய்வதே தர்மம்.

உதாரணத்திற்கு: ஒருவன் அரசாங்கத்தால் நீதிபதியாக நியமிக்கப்பட்டால், அவனுடைய தர்மத்தை அவன் பின்பற்றியே ஆகவேண்டும். குற்றவாளிகளை தண்டித்தே ஆகவேண்டும். மரணதண்டனைகளை கொடுத்தே ஆகவேண்டும். அப்படி தண்டனை கொடுப்பதால், அவன் கொலை செய்தவன் ஆவதில்லை. இதைப் போலவே சரீர தர்மம், சந்தர்ப்ப சூழல் ஆகியவைகூட சிறப்பு தர்மங்களே. இவற்றைப் பற்றி பின்னர் பேசுவோம்.

இவை அனைத்தையும்விட சிறந்ததான வர்ணாசிரம தர்மம் என்றால், பிராமண, க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்ர மற்றும் பிரம்மசாரி, கிருஹஸ்த, வானபிரஸ்த மற்றும் யதிகள் ஆகியோர் பின்பற்ற வேண்டிய தர்மங்கள். வர்ணாசிரம தர்மங்களே நம்

சமூகத்திற்கும், நம் பண்பாட்டிற்கும் அடிப்படை. சமூகத்தில் இத்தகைய வர்ண பேதங்கள் இருப்பதற்கு என்ன காரணம்? இதனால் சமூகத்திற்கு நல்லது ஆகியிருக்கிறதா அல்லது இத்தகைய வர்ணாசிரம பகுப்புகள் நம் சமூகத்திற்கு கேடு விளைவித்திருக்கின்றனவா என்கிற தலைப்பில் தற்காலத்த வர்கள் செய்யும் வாதங்களில் ஏதேனும் நியாயம் இருக்கிறதா? இந்த வர்ணங்கள் ஏதோ ஒரு பகுதியினரின் கற்பனையில் உதித்ததா? குழப்பங்களுக்கு / சமூகத்தில் வெறுப்பிற்கு இதுவே காரணமா? இத்தகைய முக்கிய கேள்விகள் இன்றைய சமூகத்தில் நாம் கண்டிப்பாக விவாதிக்க வேண்டியதாகும்.

சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகஷ: |
தஸ்ய கர்தாரமபி மாம் வித்யகர்தாரமவ்யயம் ||

என்னும் கீதை வசனத்திலும், 'பிராஹ்மணோஸ்ய முகமாஸீத் | பாஹூ ராஜன்ய: க்ருத: ஊரு ததஸ்ய யத் வைஷ்ய: | பத்ப்யாம் ஷூத்ரோ அஜாயத' என்னும் வேத வசனத்திலும் கூட சொல்லப்பட்டிருக்கிறது. தற்கால மனிதர்களின் கற்பனை அல்ல இது என்பது தெளிவாகிறது.

ப்ராஹ்மணக்ஷத்ரியவிஷாம் ஷூத்ராணாம் ச பரந்தப |
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவப்ரபவைர்குணை: ||

என்னும் கீதை வசனத்திலும், பிராமணாதி ஜாதிகளில், அந்தந்த ஜாதிகளுக்கு சம்பந்தப்பட்ட சத்வ, ரஜஸ், தமோ குணங்களின் கலவை மற்றும் வேறுபாடுகளை அனுசரித்து, அந்தந்த ஜாதியினர் அனுஷ்டானம் செய்யவேண்டிய கர்மங்களை தனித்தனியாக ஸ்ரீகிருஷ்ணன் தெரிவிக்கிறான்.

ஷமோ தமஸ்தபஷ்யௌசம் ஷாந்திரார்ஜவமேவ ச |
ஞானம் விக்ஞானமாஸ்திக்யம் ப்ராஹ்மம் கர்ம ஸ்வபவஜம் ||

மேற்கண்ட கீதை வசனத்தில் ஷம (அறிவை ஒருமுகப்படுத்துவது), தம (இந்திரியங்களை கட்டுப்படுத்துவது) ஆகிய குணங்கள் பிராமணனின் பொதுவான தர்மங்கள் என்று சொல்லப்பட்டுள்ளது.

ஷௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யத்தே பாஷ்யபலாயனம்|
தானமீஸ்வரபாவஸ்ச க்ஷத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ||

வீரம், தேஜஸ், தைரியம், வலிமை, தான, ஆளுமை, போரில் பின்வாங்காமல் இருப்பது, குடிமக்களை பாதுகாப்பது ஆகியவையே க்ஷத்ரியர்களின் தர்மங்கள் ஆகும்.

க்ருஷிகோரக்ஷவாணிஜ்யம் வைஷ்யம் கர்ம ஸ்வபாவஜம் |
பரிஜர்யாத்மகம் கர்ம ஷூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ||

விவசாயம், மாடுகளை பராமரிப்பது, வணிகம் ஆகிய வேலைகள் அனைத்தும் வைசியர்களின் பொதுவான தர்மமாகும். சேவை செய்வது நான்காம் வர்ணத்தவரின் தர்மமாகும்.

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்தம் பவதே நர: |
ஸ்வகர்ம நிரத: ஸித்திம் யதா விந்ததி தஸ்ச்ருணு ||

ஒவ்வொருவரும் தமது வர்ணாசிரமத்திற்கு நியமிக்கப்பட்ட செயல்களிலேயே பகவத் ஆராதனையை செய்யலாம். எந்த வர்ணத்தவரானாலும், அவர் ஞானத்தினாலேயே மோட்சத்தை அடைகிறார் என்பது தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

ஸஹஜம் கர்ம கௌந்தேய சதோஷமபி ந த்யஜேத் |
சர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னிரிவாவ்ருதா: ||
ஸ்ரேயான் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வனுஷ்டிதாத் |
ஸ்வதர்மே நிதனம் ஸ்ரேய: பரதர்மோ பயாவஹ: ||

ஒவ்வொருவருக்கும் தத்தம் தர்மானுஷ்டானத்தை பின் பற்றுவதே சிறந்த செயலாகும். அந்த அனுஷ்டானங்களில் எவ்வளவு குறைகள் இருந்தாலும், வேறு எந்த தர்மங்களில் சிறந்த அனுஷ்டானங்கள் இருந்தாலும், இது அதைவிட சிறந்தது என்று சொல்லப்படுவதால் ஒவ்வொருவருக்கும் அவரவருக்கு விதிக்கப்பட்ட அனுஷ்டானங்களிலிருந்தே பெருமை கிடைக்கும். பிற தர்மங்களை விரும்பி அவற்றை பின்பற்றினால் அவனுக்கு துரதிர்ஷ்டமே வாய்க்கும்.

ஸ்வகர்ம விப்ரஸ்ய ஜபோபதேஷௌ
விஷ்ணோர்முகாத்விப்ரஜாதி: ப்ரவ்ருத்தா |
முகோத்தம் கர்ம தேனாஸ்ய ஸோऽதாத்
பாஹ்வோர்ஜாத: க்ஷத்ரியஸ்தேன பாஹ்வோ: ||
கர்மாஸ்யப்ராப ப்ரதிவாரணம் ஹி
ப்ரவர்த்தனம் ஸாது தர்மஸ்ஸதெய்வ |
வைஷ்யோ யஸ்மாதூருஜ: தேன தஸ்ய
வார்த்தாத்மகம் கர்ம தர்மம் சகார |
விஷ்ணுஸ்தஸ்மைவாங்க்ரிஜ: ஷூத்ர உக்தோ
கதிப்ரதானம் கர்ம ஷுஷ்ரூஷணாக்யம் ||

பிராமணர்கள் விஷ்ணுவின் முகத்தினால் பிறந்தவர்கள் ஆகையால், முகத்தின் வேலைகளான ஜபம், உபதேசம் அதாவது உபன்யாசம் முதலான ஞான சாதனைகளே பிராமணர்களுக்கு பரம தர்மம். விஷ்ணுவின் கைகளிலிருந்து க்ஷத்த்ரிய ஜாதி தோன்றியிருப்பதால், கைகளினால் செய்யப்படும் போர், நாட்டைப் பாதுகாப்பது, தர்மங்களை பாதுகாப்பது போன்றவைகளே க்ஷத்ரியனின் கடமைகள் ஆகும். விஷ்ணுவின் தொடைகளிலிருந்து பிறந்தவர்களான வைசியர்களுக்கு தொழில், வியாபாரங்களே சிறந்த கடமைகளாகும். பயணங்களுக்கு முக்கியத் தேவையான கால்களிலிருந்து பிறந்தவர்களான நான்காம் வர்ணத்தவர்க்கு சேவை செய்தலே பரம தர்மம் என்று ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத்பாதர் தமது மகாபாரத தாத்பர்ய நிர்ணயத்தில் நிரூபித்திருக்கிறார்.

ப்ரதான்யதோ தர்மவிசேஷ ஏஷ:
ஸாமான்யத: ஸர்வ ஏவாகிலானாம் ||

மேலே சொல்லப்பட்ட பிராமணாதி தர்மங்கள், அந்தந்த வர்ணத் தவர்களுக்கு ஏற்றதாகவே இருக்கின்றன. ஆனால் அதே சமயத்தில், அவர்களுக்கு பிற வர்ணங்களின் தர்மங்கள் பொருந்தவே பொருந்தாது என்பது அல்ல. அனைவருக்கும் அனைத்து தர்மங்களும் பொருந்தும். ஆனால், அவரவர் வர்ணங்களுக்கு சொல்லப்பட்டிருக்கும் விசேஷ தர்மங்கள்

பொதுவாக அந்த வர்ணத்தவர்களுக்கு பொருந்துமாக இருக்கிறது.

ஸ்ரீகிருஷ்ணன், பீஷ்மாசார்யர் மூலமாக தர்மராஜருக்கு தர்மோ பதேசம் செய்த சந்தர்ப்பத்தில், நான்கு வர்ணத்தவர்களால் செய்யப்பட வேண்டிய தர்மங்கள் மிகத் தெளிவாக, விவரமாக சொல்லப்பட்டிருக்கின்றன. இதை ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத் பாதரின் மகாபாரத தாத்பர்ய நிர்ணய கிரந்தம் 29ம் அத்தியாயத்தில் படித்து அறியலாம். அது தற்போதைய நவீன சமூகத்திற்கும் பொருந்துமாறே இருக்கிறது.

தத்வவிக்ஞாபனம் தர்மோ விப்ரஸ்ய து விசேஷத: |
ஷரீரதண்டஸந்த்யாக: புத்ரபார்யாதிகான் ருதே ||
யதாலப்தேன வர்தேத பிக்ஷயா வா த்விஜோத்தம: |
சிஷ்யயாஜ்யோபலப்த்யைர்வா க்ஷத்ரதர்மேண வாssபதி ||

தத்வோபதேசம் மற்றும் ஞானபிரசாரமே பிராமணனின் முக்கிய தர்மமாகும். பிராமணன் பின்பற்ற வேண்டிய இன்னொரு தர்மம் - அகிம்சை. ஆனால், தனது மனைவி, மக்கள் தமது வழியிலிருந்து (தர்மங்களிலிருந்து) தவறி நடந்தால், பிராமணன் அவர்களை தண்டிக்கலாம். இருப்பதை வைத்து திருப்தி அடைவது, பிக்ஷை பெற்று வாழ்க்கை நடத்துவது, சிஷ்யர்களை தொடர்ந்து வளர்த்தெடுப்பது, யாசித்து அதிலிருந்து வாழ்வது - ஆகியவை மூலமாகவே பிராமணர்கள் வாழ்க்கை நடத்தவேண்டும்.

சில விதிவிலக்கான காலங்களில் அதாவது முன்பு சொன்னமாதிரி நடக்கமுடியாமல் போகும் சந்தர்ப்பங்களில், பிராமணன், க்ஷத்ரிய தர்மத்தைப் பின்பற்றி நடக்கலாம். அதைவிட மேலும் கஷ்ட காலங்கள் வருகையில், பிராமணன் வைசியர்களின் தர்மத்தைப் பின்பற்றி நடக்கலாம். அதாவது, விவசாயம், வணிகம் ஆகியவற்றை செய்து வாழ்க்கை நடத்தலாம்.

...க்ஷத்ரிய: சுரவிப்ரயோ: |
அன்யத்ர சர்வவித்தேன வர்தேதைதாம்ஸ்ச பாலயன்

அபலாயே ஸதா யத்தே... |

க்ஷத்ரியனானவர், இறைவன் மற்றும் பிராமணர்களின் செல்வங்களைத் தவிர, மற்றவர்களின் செல்வங்களில் வாழ்க்கையை நடத்தலாம். அனைத்து வர்ணத்தவரின் தர்மத்தை ரட்சிப்பது, க்ஷத்ரியனின் கடமையாகும். தர்மத்தைக் காப்பதற்காக போர் புரிவது க்ஷத்ரியனின் முக்கிய கடமையாகும். போரிலிருந்து தப்பிப்பதால் / போரை தவிர்ப்பதால் க்ஷத்ரியனுக்கு பாவம் வந்து சேரும்.

க்ருஷிவாணிஜ்யகோரக்ஷா குசீதம் வைஷ்யஜீவனம் |
பரிஜர்யைவ ஷூத்ரஸ்ய... !

வைசியர்களுக்கு விவசாயம் ஆகியவை தர்மமாகும். நான்காம் வர்ணத்தவர்க்கு சேவை செய்தலே வாழ்க்கையாகும்.

ஹரிபக்தாவனுஸ்சஸ்து வர்ணோசோ நாபி பூஜ்யதே |
வ்னாஅ ப்ரணாமம் பூஜ்யஸ்து வர்ணஹீனோ ஹரிப்ரிய: ||
ஆதரஸ்தப்ர கர்தவ்யோ யத்ர பக்திர்ஹரேர்வரா |

உத்தம வர்ணத்தவனான ஒருவன் ஹரிபக்தியில் குறைவாக இருந்தால், அதம வர்ணத்தவனான, ஹரிபக்தியில் சிறந்தவனாக இருக்கும் ஒருவனால் வணங்கப்படுபவனல்ல. அதம வர்ணத் தவனாக இருந்தாலும், அவன் ஹரிபக்தியில் சிறந்தவனாக இருந்தால், அவன் அனைவராலும் பூஜிக்கப்படத் தக்கவன். ஆகையால், ஒரு மனிதனின் ஆளுமைக்கு, மதிப்பிற்கு, அவனின் வர்ணத்தைவிட அவனுடைய ஹரிபக்தியே காரணியாக கருதப்படுகிறது.

இப்படியாக நியமிக்கப்பட்ட வர்ணாசிரம தர்மங்களில் எந்தவொரு பாரபட்சமும் இல்லை. எந்தவொரு வெறுப்பிற்கும் இங்கு இடமில்லை. யோக ஜீவர்கள் அவர்கள் எந்தவொரு வர்ணத்தவராக இருந்தாலும் அவரவருக்குத் தக்கவாறு, அவருக்கு சாத்தியமான வகையில், ஞானத்தைப் பெற்று, அதன் மூலம் பகவத் பிரசாதத்தை அடைந்து, பரம புருஷார்த்தங்களைப்

பெறவேண்டும் என்று சொல்லும் நல்ல உள்ளமே, வர்ணாசிரம தர்மங்களின் அடிப்படை ஆகும்.

இத்தகைய பவித்ரமான, பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக சமூகத்தை சிறப்பாக நடத்தி, மேம்படுத்தி வந்த வர்ணாசிரம தர்மங்கள், இந்த தற்கால நவீன உலகத்தில், சில இடங்களில் கேலி பேசப்படுவது, யோசிக்கப்பட வேண்டிய விஷயம். பிராமணர்கள் தங்களின் முன்னேற்றத்திற்காக, இந்த பத்ததியை கற்பனை செய்து பிற வர்ணத்தவர்களை கீழ் மட்டத்திற்கு தள்ளி விட்டு, தாம் மட்டும் மேலே மேலே ஏறிப் போகின்றனர் என்றும், பிராமணர் அல்லாதவர்களின் அறியாமையே இதற்கு முக்கிய காரணம் என்றும், இனிமேலும் இந்த காலத்தில் இதை நாம் பொறுத்துக் கொள்ள முடியாது என்றும் வாதம் செய்பவர்கள் இருக்கின்றனர். இந்த வாதம் எப்படிப்பட்டது என்பதை சற்று விளக்கமாகப் பார்க்க வேண்டிய அவசியம் இருக்கிறது.

சமூகத்தில் இருக்கும் அனைத்து வேலைகளையும், அரசு வேலைகளையும், விவசாயம், வணிகம் முதலான லாபம் தரும் தொழில்கள் அனைத்தையும் பிற வர்ணத்தவர்களுக்குக் கொடுத்துவிட்டு, வெறும் பிக்ஷை பெற்று வாழ்ந்து, ஞானம் ஒன்று மட்டுமே போதும் என்று திருப்தியடையும் பிராமணரின் வாழ்க்கை அல்லது தியாகம் எப்படிப்பட்டதாக இருக்கிறது என்பதை யாரும் சிந்தித்துப் பார்க்கலாம். இந்த வேறுபாடுகள், சமூகத்திற்கு ஏற்புடையதாக இல்லையெனில், பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக அரசு அதிகாரம், சமூக அந்தஸ்து மற்றும் பிற அனைத்து சக்திகளையும் கொண்டிருக்கும் பிற வர்ணத்தவர்கள், நிர்கதியான, சக்தியில்லா தவனான வெறும் ஞானம் ஒன்று மட்டுமே தனக்குப் போதுமான செல்வம் என்று திருப்தியுடன் இருப்பவனான, ஏழை பிராமணனை ஒதுக்கி வைப்பதற்கு பல ஆண்டுகள் தேவையா?

ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, நாட்டினை ஆண்டு உலகப்புகழ் பெற்ற சக்ரவர்த்திகள், ராஜாதி ராஜர்கள், வணிகத்தில் உலகம் முழுவதும் சுற்றி வெற்றிக்கொடியை நாட்டிய, அதிகாரத்திலும் அனுபவங்களை ஈட்டிய அறிவாளிகளான வைசியர்களுக்கு,

உடல் ஆரோக்கியத்தில் சிறந்து விளங்கிய, மற்றும் எண்ணிக்கையில் அதிகமாக இருந்த நான்காம் வர்ணத்தவர்களும் மேற்சொன்னபடி சிந்திப்பது முட்டாள்தனமே அன்றி வேறில்லை. இந்த சமூகத்தில் இருக்கும் வர்ணாசிரம தர்மங்களை என்று வரை நம்பிக்கை வைத்து பின்பற்றி வந்தனரோ, அன்றுவரை சமூகத்தில் மட்டுமல்ல, நாட்டிலும் அமைதி நிலவி, அதுவே நாட்டின் பொற்காலமாக இருந்தது என்றும் அறியலாம்.

நான்கு வர்ணங்களையும் உருவாக்கியதில் ஏதேனும் பாரபட்சம் இருக்கிறதா என்னும் விஷயத்தை சற்று யோசித்தால், மோட்சத்திற்கு அனைவரும் அருகதை உள்ளவர்களே. சாதனைக்கான வழிகளில் பிராமணர்களுக்கே மிகக்கடினமான வழிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. மிகக் கடுமையான சாதனையினால் பிராமணர்கள் பெறக்கூடிய உத்தம புருஷார்த்தங்களை, பிற வர்ணத்தவர் மிகச்சுலபமாக பெற்றுவிட முடியும் என்றபிறகு இதில் வேற்றுமை / முரண்பாடு எங்கிருந்து வந்தது?

அந்த்யஜா அபி யே பக்தா நாமக்ஞானாதிகாரண: |
ஸ்த்ரீஷூத்ர பிரம்மபந்தூனாம் தந்த்ரஞானேऽதிகாரிதா ||

என்ற வசனத்திற்கேற்ப, பரதத்வ ஞானமானது யாருக்கும் தனிப்பட்ட விஷயமாக நியமிக்கப்பட்டதல்ல. மேலே சொல்லப்பட்ட உதாரணங்களுக்கேற்ப பக்தியுள்ள எந்தவொரு வர்ணத்தவரும், பக்தியில்லாத எந்த வர்ணத்தவரைவிட உத்தமர் / பூஜிக்கப்படத் தக்கவர் என்று சாஸ்திரங்கள் சொல்லியிருக்கும் போது, சாஸ்திரங்களுக்கு பிராமணர்கள் மேல் தனிப்பட்ட பாரபட்சம் இருக்கிறது என்று எப்படி சொல்லமுடியும்?

'நம்முடையது ஹிந்து தர்மம், ஹிந்துஸ்தானம் நமது. ஹிந்து பண்பாடு மேம்படவேண்டும்' என்று கூவுபவர்கள், ஹிந்து தர்மம் என்றால் என்ன என்று சொல்வார்களா? வேதங்களில் சொல்லப்பட்ட தர்மங்களைத் தவிர, இந்துக்களுக்கு ஸ்வதர்மங்கள் என்று வேறு ஏதாவது இருக்கிறதா? வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் தர்மங்கள் அனைத்தும், வர்ணாசிரம தர்மம் என்னும் அடித்தளத்தில் நின்றிருக்கும்போது, அந்த அடித்தளத்தையே

ஆட்டினால், பிறகு இந்துக்களுக்கு தர்மம் என்று ஏதாவது இருக்குமா? ஜாதி மத பேதங்கள் இருக்கக்கூடாது என்று சொல்பவர்களின் கருத்து, வெறும் அரசாங்க விஷயங்களுக்கு மட்டுமே பொருந்தும் என்றிருந்தால், அதற்கு யாரும் மறுப்பு தெரிவிக்கப் போவதில்லை. ஆனால், சமபந்தி போஜனம், கலப்புத் திருமணம் மற்றும் தர்மத்திற்கு எதிரான இன்னும் பல விஷயங்கள், சமூகத்தின் அடிப்படைத் தன்மையையே மாற்ற முயலும்போது, அதற்கு தினம்தினம் மேலும் பலர் ஆதரவு கொடுப்பதும், விவாதிக்கப்பட வேண்டிய விஷயங்களே.

இப்படியாக, வர்ணாசிரம தர்மங்களின்மேல் நம்பிக்கை போவதற்கு என்ன காரணம்? இதற்கு குற்றவாளிகள் யார்? என்று கேட்டால் விடை அளிப்பது சுலபமல்ல. இவர்தான் முழு காரணம் என்று சொல்லவும் முடியாது. இதற்கு அனைவரும் குற்றவாளிகளே. ஆனால், வரலாற்றை சரியாக ஆராய்ந்தால், நம்மை பல்லாண்டு காலங்கள் ஆண்ட, நமது சுதந்திரத்தைப் பறித்துக்கொண்ட, வெளிநாட்டினரின் கைவண்ணமே இது என்று தெளிவாகத் தெரிகிறது.

ஆயிரக்கணக்கான மைல்கள் தூரம் இருக்கும் ஒரு சின்னஞ்சிறிய நாடு, பாரதத்தைப் போன்ற ஒரு மிகப்பெரிய நாட்டினை தனது அடிமையாக வைத்திருக்க வேண்டுமென்றால், நம் நாட்டு அறிவாளிகளை தங்களிடம் வைத்துக்கொள்ளாமல் சாத்தியமில்லை. செல்வம், பதவி மற்றும் ராவ் பகதூர், ராவ் சாகேப், சர் போன்ற பட்டங்களால், ஞானார்ச்சனையே தவமாகக் கருதிய பிராமணர்களை ஆசை காட்டி தங்கள் பக்கம் இழுத்தனர். அரசாட்சியில் பல பதவிகளில் பிராமணர்களே நிறைந்தனர். நல்ல கல்வி கற்க வாய்ப்பு இருந்த பிராமணர்களுக்கு இத்தகைய பதவிகள் கிடைப்பதற்கு மிகவும் சுலபமாக இருந்தது. இக்கல்வி கிடைக்காத மற்றவர்களுக்கு இந்த பதவிகள் கிடைக்கவில்லை. ஆனால், சமூகத்தில் எவ்வித மாற்றங்களையும் கொண்டு வருவதற்கு பிராமணனுக்கு அதிகாரம் இருக்கவில்லை. அரசு வேலைகளில் பிராமணர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதில் அவர்களின் குற்றம் எதுவுமில்லை.

பல நூற்றாண்டுகளாக, அமைதியான வாழ்க்கையை நடத்தி, ஞானத்தை சம்பாதிப்பதிலேயே இருந்து, அனைத்து வர்ணத் தவர்களின் மரியாதையையும் பெற்று, வேதாந்த சாம்ராஜ்யாதி பதிகளாக இருந்த பிராமணன், அதிகாரத்தின் பிடியில் விழுந்தது பிராமணனின் கெட்ட காலமே. அரசாட்சியில் நிறைந்த பிராமணனைப் பார்த்து, பிறர் பொறாமைப் படத்துவங்கி, காலப் போக்கில் அது வெறுப்பில் முடிந்தது. பிறகு, பிராமண ஜாதியே இத்தகைய வெறுப்புக்கு / எதிர்ப்புக்கு ஆளாகி, பிறகு வர்ணாசிரம தர்மத்திற்கே கேடு விளைந்ததை நாம் பார்க்கிறோம். இதனால், பிராமணனின் பொருளாதார நிலை குறைந்ததே தவிர அதிகமாகவில்லை. நல்ல அக்ரகாரத்து சூழ்நிலையில், பரம்பரை சொத்துக்களை வைத்துக்கொண்டு, தர்மானுஷ்டாங்களை பின்பற்றிக் கொண்டு, எந்தவொரு கஷ்டங்களும் இல்லாமல், ஸ்வதந்த்ரனாக வாழ்ந்து கொண்டிருந்த பிராமணன், மேற்குலக படிப்பிற்காக, பட்டத்திற்காக, தனது அக்ரகாரத்தை விட்டு, சொத்துக்களை விற்று, சொற்ப சம்பளத்திற்கு வேலைக்குப் போய், நல்ல ஆடை வாங்கி உடுத்தக்கூடிய நிலையிலேயே இன்றைக்கு நூற்றுக்கு தொண்ணூற்றி ஒன்பது பேர் இருக்கிறார்கள். எங்கோ ஓரிருவர் நல்ல அதிகாரத்தில் இருந்து, செல்வந்தர்களாகவும் இருக்கக்கூடும். இதிலிருந்து, அனைத்து பிராமணர்களும் பிற வர்ணத்தவர்களை மீறி, முன்னுக்கு வந்துவிட்டார்கள் என்று சொல்வது கற்பனையே.

குதிரைப்பந்தயத்தில் பணம் கட்டி விளையாடும், ஆயிரக் கணக்கானவர்களில் ஓரிருவர் பணத்தை வெல்கிறார்கள். ஆனால் அவர்களின் சதவிகிதம் மிகக்குறைவே. அதுபோலவே, பல்லாயிரம் பிராமணர்கள் பிற வேலைகளுக்குச் சென்றாலும், வெகுக்குறைவானவர்களே, அதில் நல்ல நிலையை அடைந்து, செல்வந்தர்களாக இருக்கின்றனர் என்று சொல்லலாம். பிராமணர்கள் எந்த விஷயங்களில் முன்னேறினர் என்று பார்த்தால், பிற வர்ணத்தவர்கள் அதில் பிராமணர்களின் நிலையைக் கண்டு வெறுப்படைய / கோபம் கொள்ளவே தேவையில்லை. நல்ல கல்வி, பொருளாதார மேம்பாடு, மக்கள் தொகை ஆகியவற்றில் மக்கள் முன்னேறுவதற்கு வாய்ப்பு உள்ளது.

கல்வி என்று எடுத்துக்கொண்டால், பழைய கல்விமுறை மற்றும் தற்போதைய மேற்குலக பள்ளி, கல்லூரிகளில் வேலைக்குச் சென்று சம்பாதிக்கும் முறைகளைக் கற்றுத்தரும் கல்வி என்று இரு விதங்கள் உள்ளன. இதில் பழைய கல்விமுறையில், பிராமணன் முன்னேற வேண்டாம் என்று யாரும் நினைக்க வில்லை. புதிய கல்விமுறையைக் கற்க, எந்த வர்ணத்தவர்க்கும் எப்போதும் எவ்வித தடைகளும் இல்லாதிருந்தபோது, பிராமணர்கள் அதில் கற்று முன்னேறியதற்கு என்ன பலன் கிடைத்தது? இருந்த கொஞ்சம் சொத்துகளும் நாசமானது. இதில் மற்றவர்களின் பொருளாதார நிலையை சற்று பார்ப்போம்.

விவசாய நிலங்கள் பிற வர்ணத்தவர்களின் கையில் சேர்ந்து, பிராமணர்களுக்கான நிலங்கள் கொஞ்சமாகவே இருந்தன. வணிகம், தொழில்துறை ஆகியனவும் பிறர்களின் ஆதிக்கத்திலேயே இருந்தன. இப்படி பொருளாதாரத்தில் பிராமணர்கள் பின்தங்கிய நிலையில் இருந்தபோது, அவர்கள் நன்கு முன்னேறியவர்கள் என்று சொல்லி, அவர்களின் தினப்படி வாழ்க்கைக்கு பிரச்னை உண்டாக்குபவர்களைப் பற்றி சிந்திக்க வேண்டும். மேற்சொன்ன காரணங்களுக்காக, பிராமணர்களிடம் மட்டும் தர்மம் கெட்டுப்போய்விட்டது என்று சொல்வதற் கில்லை. அனைத்து வர்ணத்தவர்களுமே, தங்களின் தர்மங்களை விட்டு வந்தனர். ஆனால், அதுவரை தர்மத்தை சரியாகப் பின்பற்றிவந்த பிராமணர்களின் நிலை மட்டும் தெளிவாக அனைவருக்கும் தெரிந்தது. இந்த சூழ்நிலையிலேயே ரஷ்யாவில் தோன்றியதான ‘கம்யூனிசம்’ என்னும் தத்துவம், தீஜ்வாலையைப் போன்று அனைத்து இடங்களுக்கும் பரவி, இந்த உலகத்தையே எரிக்கக்கூடியதாக மாறிக்கொண்டிருக்கிறது.

மக்களிடையே இருக்கும் ஏற்றத்தாழ்வுகளை போக்குவதே முக்கிய கடமையாகும். பரலோகம், புண்ணிய பாவங்கள் என்னும் சிந்தனைகள் மக்களிடையே இருக்கக்கூடாது. சமூகத்தில் சமத்துவத்தைப் பெறுவதற்கு எத்தகைய கெட்ட செயல்களையும் செய்யலாம் ஆகிய, சமூகத்தின் அடிப்படைத் தன்மையையே ஆட்டுவிக்கும் குறிக்கோள் கொண்டவர்கள் இவர்கள். வேலையில்லாத, கோபம் கொண்டிக்கும்

வாலிபர்களுக்கு இத்தகைய வாதங்கள் ஒரு புதிய ஒளியைப் பாய்ச்சியதால், இது உலகத்தில் அதிவேகமாக பரவத் தொடங்கியது.

நிலச்சுவன்தார்களான, நவநாகரிகர்களான ஆங்கிலேயர்கள், அமெரிக்கர்கள் இத்தகைய வாதங்களைக் கண்டு பயந்து, இதை தடை செய்யும் விதங்களை கையாண்டனர். ஏழைகளையே அதிகமாகக் கொண்ட இந்தியாவில் இந்த வாதங்கள் பரவுவதற்கு நிறைய இடம் கிடைத்தது. இதன் காரணமாக, நாட்டின் பல்வேறு இடங்களில், பல அராஜகங்கள் அரங்கேறி, சுதந்திரத்தை விரும்புபவர்கள் மற்றும் தொலை நோக்குப் பார்வை கொண்டவர்கள் ஆகியோர் இத்தகைய வாதங்களினால் நாட்டிற்கு உண்டாகும் பேராபத்தினை உணர்ந்து, அனைத்து விதங்களிலும் இதை தடை செய்ய முற்பட்டாலும், மக்களில் பெரும்பான்மையினர் இந்த வாதத்தைக் கண்டு அதனை நோக்கிப் போய்க்கொண்டிருந்தபோது, நம் பழைய பண்பாட்டின் குறிக்கோளான வர்ணாசிரம தர்மத்திற்கு இந்த வாதம் எவ்வளவு அபாயமானது என்பதை ஊகிப்பது மிகவும் சுலபம். நம் சமூகமானது இத்தகைய ஆபத்தினை எதிர்கொண்டால், அதன் முடிவு எப்படியிருக்கும் என்பதை நாம் மிகவும் கவனத்துடன் ஆராய வேண்டும். ஒழுங்கான வாழ்க்கைமுறைக்கு ஜாதி, மத வேறுபாடுகள், அதிலிருக்கும் ஏற்றத்தாழ்வுகளே முக்கிய காரணங்கள். இவற்றால் தத்தம் தர்மானுஷ்டானங்களையே செய்யாமல் விட்டுவிடுகிறார்கள் என்றபிறகு சாதாரணமாக வாழ்க்கையை நடத்துவதைத் தவிர வேறு எதுவுமே நோக்கம் இல்லை என்று ஆகிறது. நாம் சுகமாக இருக்கவேண்டும் வேறு எதைப் பற்றியும் கவலை இல்லை என்றபிறகு, நாட்டின் சேவையே ஈசனின் சேவை என்று சொல்வது வீண்.

தேசத்தை விரும்புபவர்கள் தங்கள் நாட்டுக்காக எதையும் தியாகம் செய்வது என்பது பெரும்பாலும் இல்லை. பிறருக்காகவே தங்கள் வாழ்க்கையை செலவழித்த சிறந்த ஆளுமைகளுக்கும், சமூகத்தில் எந்தவொரு வேலையும் இல்லை என்றபிறகு, அத்தகைய கற்பனையான சமூகமானது எவ்வளவு நாட்கள்தான் மக்களுக்கு பொருத்தமானதாக இருக்கும்? தத்தம்

தர்மங்களை பின்பற்றாமல் விட்டுவிட்டு, விலங்குகளைப் போல வாழ்க்கையை நடத்தி வரும் வேளையில், ஏதாவது ஒரு மதப்பிரசாரகர் தம்முடைய கருத்துகளை சமூகத்தின் மீது திணிக்க முற்படும்போது, மக்கள் அதை முழுவதுமாக ஏற்றுக் கொள்வதென்பது சாத்தியமே. அத்தகைய மதப்பிரசாரகர் மொஹம்மதியரோ அல்லது கிருத்துவராகவோ இருப்பார்கள் என்பது நிச்சயம். அப்படி ஆனபிறகு, நமது இந்து தர்மத்திற்கு அதுவே இறுதிக்காலம் என்பதை அறியவேண்டும்.

சந்தர்ப்பங்கள் இவ்வளவு கடினமாக இருக்கையில், வர்ணாசிரம தர்மங்களை மறுபடி நிலைநிறுத்துவது என்பது சாத்தியமா என்னும் கேள்வி எழுகிறது. ஆனால், முழுமையாக நிராசை யடைய வேண்டாம் என்பதே இதற்கான பதில். கும்மிருட்டில் மின்னல் ஒளியைப் போன்ற, நமக்கு ஆசையூட்டும் சின்னங்கள் அங்கங்கே தோன்றுகின்றன. வேறொரு நாட்டின் கீழ் அடிமையாக இருந்த நம் நாடு, இன்று சுதந்திரம் பெற்றிருப்பது ஒரு மிகப்பெரிய நல்ல விஷயம். சுதந்திரத்தைக் கட்டிக்காப்பது மிகவும் கடினமான செயல். சுதந்திரத்தால் நாம் செய்ய வேண்டிய கடமைகள், அதில் வரும் கஷ்ட நஷ்டங்கள், இவை சாத்தியமா இல்லையா என்னும் விமர்சனங்கள் ஆகியவற்றை சந்திக்க நேரிடும். மக்களின் ஏழ்மையைப் போக்குவதே அமைதிக்கான வழி ஆகி, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக சமூகத்தின் அமைதியை காப்பாற்றிய வர்ணாசிரம தர்மங்கள், மறுபடி கண்டிப்பாக தழைக்கும் நிலையே இருக்கிறது. நம்மை அடிமைப்படுத்தி பல ஆண்டுகள் ஆண்டவர்களிடமிருந்து சுதந்திரம் பெறுவதற்காக நம்மிடையே ‘ஜாதி மத பேதங்கள் ஒழியவேண்டும்’ என்னும் ஒரு வாதத்தை உருவாக்கினர். இது வெறும் தற்காலிக நோக்கத்திற்காகவே தவிர, சுதந்திரத்தைப் பெற்றபிறகு இந்த வாதம் பயனற்றுப் போனது. மற்றும் சமூகத்தின் வெவ்வேறு பகுதிகள், நன்றாக மேம்படுவதற்கு இந்த வாதம் ஒரு தடையாகவே இருக்கும் என்பதை சமூக ஆர்வலர்களும், ஆட்சியாளர்களும் அறியாமல் இருக்க மாட்டார்கள்.

சுதந்திர போராட்டத்தில் ஆலைகளில் வேலை செய்யும் தொழிலாளிகளையும், பள்ளி கல்லூரிகளில் படிக்கும் மாணவர் களையும், தபால் / ரெயில்வே போன்ற துறைகளில் வேலை செய்பவர்களையும் தூண்டி, வேலை நிறுத்தங்களை செய்து அதன் மூலம் சுதந்திரத்தைப் பெற்றவர்கள், அந்த சுதந்திரத்தைப் பெற்றபிறகும், தொழிற்சாலைகளில், அரசு வேலைகளில், பள்ளி கல்லூரிகளில் வேலை நிறுத்தங்களை தூண்டுவது சரியல்ல. மத்திய அரசு இதனை பொறுப்பதில்லை என்னும் வாதம், வர்ணாசிரம தர்மம் என்னும் விஷயத்தில் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறோம். சுதந்திரத்தில், பாரதத்தை பிரித்தது பாரதியர்களுக்கு பிடிக்கவில்லை என்றாலும், அந்த போராட்டத்தில் தோன்றிய இந்து முஸ்லிம் வேற்றுமைகள், சண்டைகளை தோற்றுவித்தாலும், முகம்மதியர்கள் இந்து மக்களின் மேல் செய்த பிரச்னைகள், இந்து ரத்தங்களை சிந்த வைத்த கொடூரங்கள், இந்து மக்களின் மனதில் மறைந்திருந்த இந்து என்னும் உணர்வினை தட்டி எழுப்பியது என்பது ஒரு நல்ல சூழ்நிலையே ஆகும்.

இத்தகைய நிலையில், இந்து வர்ணாசிரம தர்மங்களை விரும்புபவர்களான, சமூகத்தை திருத்துபவர்கள், அந்த தர்மங்களை அனைத்து இடங்களிலும், நாட்டின் ஒவ்வொரு மூலை முடுக்குகளிலும் பரப்ப வேண்டியது மிக முக்கிய கடமையாகிறது. ஒருவருக்கொருவர் நட்பு, இந்துக்களில் உள்ள அனைத்து வர்ணத்தவரும், இதற்கு ஆதரவு அளித்து, சுய முன்னேற்றம், ஆத்ம கௌரவம், அமைதி ஆகியவையே வர்ணாசிரம தர்மத்தின் முக்கிய குறிக்கோள் என்பதை அனைவரும் உணருமாறு செய்வது மிகவும் முக்கியமான வேலையாகும். தற்போதைய சூழ்நிலையில், சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்குமாறு, வர்ணாசிரம தர்மங்களை பின்பற்றுவது சாத்தியமா என்னும் கேள்விக்கு ஸ்ரீமதானந்த தீர்த்தர், தகுந்த ஆதாரத்துடன் நல்ல வழியைக் காட்டியிருக்கிறார். காலாந் தரத்தில், தர்மானுஷ்டானங்களை பின்பற்றுவதில் ஏதேனும் பிரச்னை வந்தால், அந்த அனுஷ்டானத்தை விட்டுவிடுவது சரியல்ல. வாழ்க்கை சக்கரம் சுழல வேண்டும். ‘ஜீவன் பத்ராணி பஷ்யந்தி’ என்னும் வசனத்திற்கேற்ப, பிராமணாதி

வர்ணத்தவர்கள், தத்தம் தர்மங்களுக்கேற்ப வாழ்க்கையை ஓட்டுவது கஷ்டமானால், அந்த சமயத்தில் பிற வர்ணத்தவரின் தர்மங்களை பின்பற்றலாம் என்று சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. ஆனால், எந்தவொரு பிரச்னையாகவும் இருக்கட்டும், சுருக்கமான நித்யகர்மானுஷ்டானங்களை செய்ய வேண்டியது அவர்களின் கடமையாகும். அந்த குறைந்தபட்சம் செய்யவேண்டிய நித்யகர்மானுஷ்டானங்களை செய்வதற்கும் நேரம் இல்லை, வசதி இல்லை என்னும் வாதம் யாராலும் ஒப்பக்கூடியதில்லை. தர்மானுஷ்டானங்களில் நம்பிக்கை இருந்தால், அதற்கான நேரம் கிடைத்தே தீரும். கடவுளின் உதவியும் அதற்கு கிடைக்கும்.

யதாயதா ஹி தர்மஸ்ய ஞானிர்பவதி பாரத |
அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம் ||
பரித்ராணாய ஸாதூனாம் வினாஷாய ச துஷ்க்ருதாம் |
தர்மஸம்ஸ்தாபனார்த்தாய சம்பவாமி யுகேயுகே ||

ஆகையால் இஹ, பரலோகத்து பலன்களை அனைத்தையும் தரக் கூடியவனான ஈஸ்வரனின் பிரசாதத்தை சம்பாதித்து, பரம புருஷார்த்தங்களை பெறுவதற்கு அவனின் நற்குணங்களைப் பற்றிய ஞானம் மிகவும் அவசியமாகும். அத்தகைய நற் குணங்களைப் பற்றிய ஞானம், இதிகாச புராண ஆகமங்களிலிருந்து கிடைக்கின்றன. சாஸ்திரங்களில் சொல்லப் பட்ட அவனது ரூபங்களை அறிந்து, தத்தம் வர்ணாசிரமங்களுக்கு நியமிக்கப்பட்ட தர்மானுஷ்டானங்களை மன சுத்தியுடன் பின்பற்றி, ஞான பக்தி வைராக்கியத்தைப் பெற்று, பரம புருஷார்த்தங்களை அடைந்து, சாதனை வழியில் சென்று, நாட்டில் அமைதியை நிலைநாட்டி, ஈஸ்வரனின் கருணைக்கு பாத்திரரானால், அதுவே ராமராஜ்யத்தை நிறுவுதல் ஆகும். இது நம்மால் செய்யக்கூடியதே ஆகும்.

ஓம் ஷாந்தி: ஷாந்தி: ஷாந்தி:

***

## பாட்டியின் மகாமக யாத்திரை

**பாத்திரங்கள்**

சுப்பாணி = மேல்நிலைப்பள்ளியில் ஆசிரியர்
ஸாது = சுப்பாணியின் மனைவி
அங்கச்சம்மா = சுப்பாணியின் தாய். 76 வயது
பிந்து = பேரன். 12 வயது
சந்து = பேத்தி. 8 வயது
சுந்த்ரு = கைக்குழந்தை
அச்சண்ணாசார்யர் = புரோகிதர்

***

**காட்சி-1**

(ஸாது வீட்டு வாசலில் பெருக்கிக் கொண்டிருக்கிறார். சுப்பாணி வருகை. தலைப்பாகையை மேஜை மேல் எடுத்து வைத்து, சட்டையை ஆணியில் மாட்டுகிறார்).

சுப்பாணி: சீக்கிரம் சாப்பாடு போடும்மா. பள்ளிக்கு நேரமாயிடுச்சு. இன்னிக்கு இன்ஸ்பெக்டர் வர்றாரு. ஐந்து நிமிடங்களுக்கு முன்னாடியே அங்கு இருக்கணும். உடனடியாக கை கால் கழுவ நீர் எடுத்துக் கொடு.

ஸாது: கை கழுவ / இலை போட இப்போ என்ன அவசரம்? இப்பதான் உலையில் பாத்திரம் வைத்திருக்கிறேன். இன்னும் ஒரு மணி நேரம் ஆகும் சாப்பிட.

சுப்பாணி: இதென்ன ஆயிடுச்சு இன்னிக்கு? ஒரு நாளும் இப்படி சமையல் தாமதம் ஆனதேயில்லையே? ஏன் அம்மா இப்படி செய்துவிட்டாள் (இன்று)?. அம்மாவுக்கு உடம்பு கிடம்பு சரியில்லையா என்ன?

ஸாது: உடம்புக்கு என்ன? (எல்லாம் சரியாதான் இருக்கு). அந்த பக்கத்து வீட்டு ரங்கம்மாவுடன் சுமார் ஒரு மணி நேரம் பேசிவிட்டு, இப்பதான் வந்து அடுப்பு பத்தவெச்சிருக்காங்க.

சுப்பாணி: அதென்ன, ரங்கம்மாவுடன் அவ்வளவு நேரம் பேச்சு?

ஸாது: எனக்கென்ன தெரியும்? நான் அதெல்லாம் நின்று கேட்பதில்லை.

சுப்பாணி: அது சரி. நீயாவது எழுந்து சமையல் செய்திருக்கக் கூடாதா?

ஸாது: ஐயோ! ஐயோ!! என்னை சமையலறையில் (அம்மா) விடுவாரா?

(அங்கச்சம்மா வருகை)
அங்கச்சம்மா: என்னம்மா, கணவனிடம் என்ன கோள் மூட்டு கிறாய்? உன்னிடம் சமையல் செய்து கொள்வதில்லை என்று சொல்கிறாயா? உன்னை நான் சமையல் செய்யச் சொல்ல முடியுமா? நீ இன்னும் மடியே பிடிக்கவில்லை. குரு உபதேசமும் செய்து கொள்ளவில்லை. ஏகாதசி உபவாசம் செய்வதில்லை. காலையில் எழுந்தவுடனேயே காபி குடிக்கிறாய். விஷ்ணு பஞ்சகம் செய்த நான் நீ செய்த சாப்பாடு சாப்பிடலாமா?

ஸாது: யார் உங்களை செய்யவேண்டாம்னு சொன்னது? நான் ஒன்றும் கோள் சொல்லவில்லை. நேரமாயிடுச்சே, நீ ஏன் சமையல் செய்யவில்லைன்னு கேட்டார். நான் செய்தால் நீங்கள் சாப்பிடுவதில்லை என்று மட்டும்தான் சொன்னேன். இதில் என்ன பிரச்னை? சரியாப் போச்சு.

சுப்பாணி: கொஞ்ச நேரம் சும்மா இரும்மா. எனக்கு கஞ்சியாவது கரைத்துக் கொடு. நான் மதியம் 2மணிக்கு வந்து சாப்பிடறேன்.

அங்கச்சம்மா: என் மேல் எதுவும் தப்பு இல்லையப்பா. இன்னிக்கு ஒரு நாள் கொஞ்சம் தாமதமாயிடுச்சு. அந்த பக்கத்து வீட்டு ரங்கம்மாவுடன் பேசிட்டே நின்னுட்டேன். நேரம் போனதே தெரியல. ஐயோ, உன்னை பட்டினியா அனுப்ப வேண்டியதாயி டுச்சே, சுப்பாணி.

சுப்பாணி: ஒன்றும் பிரச்னை இல்லையம்மா. ரங்கம்மாவுடன் அப்படி என்ன பேச்சு? என்ன விஷயம்?

அங்கச்சம்மா: நானே சொல்லணும்னு இருந்தேன். நீயே கேட்டுட்டே. ரொம்ப சந்தோஷம். இந்த வருடன் மகாமகமாம். . ரங்கம்மா, குப்பண்ணனின் மனைவி நாஜாரி, தாமூரு கிட்டம்மா, நாமத வெங்கம்மா, இவர்கள் எல்லோரும் மகாமகத்துக்குப் போக ணும்னு ஏற்பாடு செய்திருக்காங்களாம். புரோகிதர் அச்சண்ணா சார்யரே, இந்தப் பயணத்துக்கு ஆண் துணையாம். என்னையும் வர்றீங்களான்னு கேட்டுப் போகவே ரங்கம்மா வந்திருந்தாளாம். அதைப் பற்றி பேசிக் கொண்டே இருந்ததால், சமையலுக்கு நேரமாயிடுச்சு.

சுப்பாணி: உனக்கு 76 வயசாயிடுச்சு? மகாமகம் நடக்கும் கும்ப கோணம் என்ன பக்கத்திலா இருக்கு? எவ்வளவு கும்பல் வரும்? ஒருவரையொருவர் இடித்துக் கொண்டு போவார்கள். ஒரு வேளை நீ அங்கே போயிட்டாலும், உனக்கு கஷ்டம்தான்.

அங்கசம்மா: அதென்னப்பா இப்படி சொல்லிட்டே? அவங்கல்லாம் போகலையா? இவ்வளவு பேர் கூட இருக்கும்போது என்ன பயம்? கூட அச்சண்ணாசார்யரும் வர்றாரே.

சுப்பாணி: இவர்களெல்லாம் உன்னைப் போல வயசானவங்களா என்ன? இன்னும் திடமாகவே இருக்காங்க. எந்த பிரச்னை வந்தாலும் சமாளிப்பாங்க. ஏதாவது ஒரு பிரச்னை செய்து டறாங்க இந்த பெண்கள். நமக்குதான் முடியல. உன்னால் இதெ ல்லாம் (இந்தப் பயணம்) முடியும்னு யார் சொன்னாங்க?

அங்கச்சம்மா: அப்படி சொல்லாதே சுப்பாணி. நானும் போயே ஆகணும்னு நினைச்சிருக்கேன். வைஷ்ணவ பிறவி எடுத்ததற்கு, விஷ்ணு பஞ்சகம், கிருஷ்ண தரிசனம், கிருஷ்ணா நதி ஸ்னானம் இதெல்லாம் செய்யாமல் என்ன பயன்? விஷ்ணு பஞ்சகம் என்னமோ ஸ்ரீஹரியே நடத்திக் கொண்டான். கோபால கிருஷ்ணனின் தரிசனமும் தினமும் ஆயிட்டிருக்கு. கிருஷ்ணா நதி ஸ்னானம், அந்த ஸ்ரீஹரியின் கருணை இருந்தால் எப்போது வேணும்னாலும் ஆகலாம். மகாமக ஸ்னானம் மகாபுண்ணியம்

னு எல்லாரும் சொல்றாங்க. கிடைப்பதே அபூர்வம். 12 வருசத்துக்கு ஒருமுறைதான் வருது.

சுப்பாணி: கொஞ்சம் பொறும்மா. நானே உன்னை அழைச்சிட்டுப் போய் கிருஷ்ணா நதி ஸ்னானம் செய்து வைக்கிறேன். கொஞ்சம் காசு சேரட்டும். இப்போதைக்கு கஷ்டத்தில் இருக்கிறேன்.

அங்கச்சம்மா: அதெல்லாம் எப்போ நடக்குறது சுப்பாணி. சம்சாரியான உனக்கு கஷ்டம் முடிவது எப்போ? நீ என்னை அழைத்துப் போவது எப்போ? நான் போவது எப்போ? அதெல்லாம் நடக்கற காரியமா?. கடல் அலை ஓயட்டும், குளிக்கிறேன்னு சொல்றது போல இருக்கு. இப்போ ஏதோ ஒரு வழித்துணை கிடைச்சிருக்கு. கிழவி ஆசைப்படறேன். சந்தோஷமா அனுப்பி வெச்சா போயிட்டு வர்றேன். இல்லைன்னா, செக்கு மாடு மாதிரி அப்படியே இருந்துடறேன். என் தலையில் என்ன எழுதி யிருக்கோ, அப்படிதானே நடக்கும்? எனக்கென்ன இன்னொரு மகன் இருக்கானா? நீ இல்லைன்னா, அவனாவது என் பேச்சைக் கேட்க? நீ அனுப்பினால் உண்டு. இல்லைன்னா இல்லை.

சுப்பாணி: அப்படிதான் சமாதானம் செய்துக்கணும். வயசு ரொம்ப ஆகிப்போச்சு. கும்பலில் சிக்கி, உயிரே போயிட்டா என்ன செய்யறது?

அங்கச்சம்மா: ஐயோ! எனக்கு இன்னும் ஆக வேண்டியது என்ன பாக்கி இருக்குது? நல்ல க்ஷேத்திரத்தில் உயிர் போனா, நல்லதுதானே?

சுப்பாணி: உனக்கு நல்லதுதான். ஆனா, என் கதி? எங்கேயிருந்தோ எங்கோ வந்து உயிர் போனால் எவ்வளவு பிரச்னை? கொஞ்சம் யோசனை செய்.

அங்கச்சம்மா: இதெல்லாம் ஒரு காரணமா? எனக்குன்னு காசு செலவழிக்கணும்னா உனக்கு கஷ்டம். அவ்வளவுதான்.

சுப்பாணி: எனக்கு இஷ்டம் இல்லைன்னு சொன்னா எப்படிம்மா? என் கையில் காசு இருப்பதை நீ பார்த்தாயா? ஒரு ரூபாயா, இரண்டு ரூபாயா, குறைந்த பட்சம் ஐம்பது ரூபாயாவது வேண்டும். சொசைட்டியில் வாங்கிய கடனே, இன்னும் வளர்ந்த வாறு இருக்கு. வரும் சம்பளம், ஐந்து தேதியிலேயே முடிஞ்சிடுது. இப்படி பல பிரச்னைகளில் நான் இருக்கும்போது, திடீர்னு ஐம்பது ரூபாய் வேணும்னா, நான் என்ன செய்யட்டும்? இந்தக் காலத்தில் யார் கடன் கொடுக்கிறார்கள்?

அங்கச்சம்மா: நான் உன்னிடம் ஐம்பது ரூபாய் கொடுன்னு கேட்டேனா?

சுப்பாணி: குறைந்த பட்சம் ஐம்பது ரூபாய் தேவைப்படுமே அம்மா?

அங்கச்சம்மா: எல்லாத்தையும் நான் விசாரிச்சிட்டேன். அவ்வளவு தேவைப்படாது. சொல்றேன் கணக்கு போட்டுக்கோ. இங்கிருந்து கும்பகோணத்திற்கு ஒரு வழிப் பயணத்துக்கு 9.75 ரூபாய் செலவு. அப்படின்னா, போகவர எவ்வளவு ஆச்சுன்னு சொல்லு.

சுப்பாணி: மேலே சொல்லும்மா.

அங்கச்சம்மா: மொத்தம் எவ்வளவு ஆச்சுன்னு சொல்லு.

சுப்பாணி: 19.50 ரூபாய்.

அங்கச்சம்மா: அப்படின்னா, 20 ரூபாய்க்கும் குறைவுதானே?

சுப்பாணி: 50 பைசா (எட்டணா) கம்மி.

அங்கச்சம்மா: நம்ம அச்சண்ணாசார்யரே சங்கல்பம் செய்தால், அவருக்கு இரண்டு அணாவாவது கொடுக்கணும். இல்லே, அங்கே இருப்பவர்கள் யாரேனும் செய்தால், இன்னும் அதிகமா கொடுக்க வேண்டியிருக்கும்.

சுப்பாணி: புரோகிதருக்கு இரண்டு அணா கொடுத்துட்டா, எல்லாம் முடிஞ்சு போச்சா?

அங்கச்சம்மா: இரு சொல்றேன். சாரங்கபாணி பெருமாளுக்கு, அம்மனுக்கு ஒவ்வொரு தேங்காயாவது உடைக்க வேணாமா? இரண்டு காய்க்கு எட்டணா ஆச்சா. ஒரு அணாக்கு பூ, ஒரு அணாக்கு கற்பூரம். இப்போ எவ்வளவு ஆச்சு?

சுப்பாணி: 20 ரூபாய்க்கு மேல் நாலணா ஆச்சு.

அங்கச்சம்மா: ஒரு ரூபாயாவது கொடுத்து, பெருமாளுக்கு துளசி அர்ச்சனை செய்யணுமே. அம்மனின் குங்கும அர்ச்சனைக்கு எட்டணாவாவது வேணும். இதையும் சேர்த்துச் சொல்லு.

சுப்பாணி: இன்னும் வேற ஏதாவது இருந்தா சொல்லு. மொத்தமா சொல்றேன்.

அங்கச்சம்மா: சொல்றேன். இப்போதைக்கு சொல்லு.

சுப்பாணி: 21.75 ரூபாய் ஆச்சு.

அங்கச்சம்மா: 21.75 ரூபாயா? நல்லா ஞாபகம் வெச்சிக்கோ சுப்பாணி. ஒரு காகிதத்தில் எழுதிக்கோ, கணக்கு தப்பாயிடப் போகுது.

சுப்பாணி: அதெல்லாம் தப்பாகாது. சொல்லும்மா. எனக்கு ஞாபகம் இருக்கும்.

அங்கச்சம்மா: ஆச்சா. அப்புறம். எல்லாம் ஞாபகத்தில் வெச்சி ரு ப்பேன். ஆனா, சமயத்தில் மறந்து போயிடுது. வேறென்ன.. ஆ! கும்பேஸ்வரனின் தரிசனம் செய்யணுமே? அங்கு மறுபடி இரு காய்கள், கற்பூரம் என ஒன்பது அணா ஆயிடும். இப்போ எவ்வளவு ஆச்சு?

சுப்பாணி: 22 ரூபாய் ஐந்து அணா ஆச்சு.

அங்கச்சம்மா: வரும்போது குழந்தைகளுக்கு ஏதேனும் விளையாட்டுப் பொருட்கள் வாங்கி வரணுமே? குழந்தை சுந்த்ருக்கு ஒன்றரை அணாவுக்கு ஒரு கிலுகிலுப்பை, ஐந்தணா கொடுத்து ஒரு கிருஷ்ண பொம்மை. பிந்துக்கு ஒரு தொப்பி. இது பத்தணாக்கு கம்மி கிடைக்குமா? இப்போ எவ்வளவு ஆச்சு?

சுப்பாணி: 23 ரூபாய் ஒம்பது அணா ஆச்சு.

அங்கச்சம்மா: 25 ரூபாய்க்கு எவ்வளவு கம்மி?

சுப்பாணி: 1 ரூபாய் 7 அணா கம்மி.

அங்கச்சம்மா: ஆக, 25 ரூபாய் எடுத்துக்கிட்டு போனா, கொஞ்சம் கையிலும் மிச்சமாகும். அந்தப் பணத்தில், சமையலுக்கு ஒரு கும்பகோண சொம்பு வாங்கிடலாம்.

சுப்பாணி: போய் வருவதற்கு ஒன்பது நாள் ஆகும். அந்த ஒன்பது நாளும் உபவாசம் இருக்கப்போறியா?

அங்கச்சம்மா: போய் வருவதற்கு ரெயிலிலேயே ஆறு நாள் ஆயிடும். இங்கிருந்தே கொஞ்சம் அவல், சத்து மாவு இதெல்லாம் கட்டிக்கிட்டுப் போறேன். நடுவில் ரெயில் நிற்கும் இடத்தில், ஸ்னானம் செய்து, கொண்டு போயிருப்பதை சாப்பிட்டா ஆச்சு. கும்பகோணத்தில் சாப்பாட்டு என்ன குறை? மஹிஷி மதுசூதனாச்சார், அங்கு சாப்பாடு ஏற்பாடு செய்திருக் காராம். தினமும் மடிமடியாக சாப்பாடு கிடைக்குதாம். நம்மைப் போன்றவருக்கு சாப்பாட்டுக்கு பிரச்னையேயில்லை.

சுப்பாணி: சரி. அப்படியும் 25 ரூபாய் வேணுமே. 25 ரூபாய்னா கம்மியா? மாத இறுதியில் எங்கே கிடைக்குது பணம்? நீயே சொல்லு அம்மா.

அங்கச்சம்மா: சுப்பாணி. உனக்கு நான் தொந்தரவு கொடுக்க மாட்டேன். குப்பண்ணா மகளின் திருமணத்தில், என் தம்பி, புடவைக்காக பத்து ரூபாய் கொடுத்தான். அதை உன்னிடம் நான் சொல்லவில்லை. அதை அப்படியே வைத்திருக்கிறேன்.

அதனுடன், நீ 15 ரூபாய் கொடுத்தால், இந்த வயசான கிழவிக்கு ஒரு யாத்திரை செய்வித்ததைப் போல ஆச்சு.

ஸாது: இவ்வளவு ஆசைப்படுகிறார். ஏதாவது ஏற்பாடு செய்யுங் களேன்.

சுப்பாணி: உனக்கென்னம்மா, நல்லா பேச முடியும். 15 ரூபாய் எப்படி கிடைக்கும்? யார் கொடுப்பார்கள்? உன் சூடாமணியை கொடுப்பாயா? அடகு வைத்து பணம் எடுத்து வர்றேன்.

ஸாது: கண்டிப்பாகக் கொடுக்கிறேன் (கொண்டு வந்து கொடுக்கிறாள்).

சுப்பாணி: என்னிக்கு புறப்படணும்?

அங்கச்சம்மா: நாளை காலை 10மணி ரெயிலுக்குப் புறப்படணும். அப்படின்னா, ரங்கம்மாவிடம் சொல்லிட்டு வந்துடட்டுமா?

சுப்பாணி: அப்படியே செய்யம்மா.

அங்கச்சம்மா: (மருமகளிடம்) ரொம்ப நல்ல மருமகளம்மா நீ. மகாராணியாக நன்றாக இரு. 16 ஆண் பசங்க, 16 பெண் பசங்க உனக்கு பிறக்கட்டும்.

ஸாது: ஐயோ! உங்க ஆசிர்வாதத்தினால், இருக்கும் மூன்று குழந்தைகளும் நன்றாக இருந்தால் அது போதும்.

காட்சி-2
(அச்சண்ணாசார்யரின் வீடு)

புரோகிதர்: என்ன அங்கச்சம்மா, நீங்களும் மாமாங்கத்துக்கு வர்ற யோசனை இருக்கா? ரங்கம்மா சொன்னாங்க. என்ன முடிவு செய்தீங்க?

அங்கச்சம்மா: இதில் முடிவு செய்ய என்ன இருக்கு? மகனிடம் கேட்டுச் சொல்றேன்னு சொல்லியிருந்தேன். என் மகனும், போய் வாம்மான்னு சொல்லிட்டான். இதையே உங்களிடம் சொல்லி

ட்டுப் போகலாம்னு வந்தேன். ஏதோ நீங்க இருக்கும் தைரிய த்தில் வர்றேன்.

புரோகிதர்: எதுவும் கவலைப்படாதீங்க. நான் இருக்கிறேன். தைரியமா புறப்பட்டு வாங்க.

அங்கச்சம்மா: எனக்கு தைரியம்தான். என் மகன்தான் ரொம்ப பயப்படுகிறான். ரொம்ப கும்பலா இருக்கும். அப்படி இப்படின்னு பயமுறுத்தறான். எனக்கு ஒண்ணும் பயமில்லை. முன்னே பின்னே ஏதேனும் பிரச்னை வந்தால், கைவிட்டுடாதீங்கன்னு கேட்டுக்கறேன். அப்படி ஏதும் பிரச்னை ஆகிவிட்டால், உடனடியாக என் மகனுக்கு டெலிகிராம் கொடுத்தால், அவன் கையாலேயே எல்லாம் ஆகவேண்டும்.

புரோகிதர்: க்ஷேத்திரத்தில் செத்தால் புண்ணியம்தான் வரும். கவலைப்படாதீங்க. நீங்க வரும்போது, மடியில் கொஞ்சம் அதிகமாகவே, அவல், பருப்பு உருண்டை ஆகியவற்றை கொண்டு வாங்க. எனக்கு நீங்க எல்லாம் சேர்ந்துதான் காலை சிற்றுண்டிக்கு ஏதாவது தரணும். நான் ஹோட்டலுக்கு எல்லாம் போவதில்லை. வழியில் சமையல் செய்வதற்கும் சாத்தியம் இல்லை.

அங்கச்சம்மா: அப்படியே ஆகட்டும். அவல், சத்து மாவு இதெல்லாம் நான் கொண்டு வர்றேன். பருப்பு உருண்டையும் செய்து கொண்டு வரமுடியுமான்னு பார்க்கிறேன்.

காட்சி-3 - (சுப்பாணியின் வீடு)

அடுத்த நாள். சுப்பாணி வீட்டு வாசலில் அமர்ந்திருக்கிறார். குழந்தை தொட்டிலில் படுத்திருக்கிறது. அங்கச்சம்மா, பயணத்துக்கு அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருக்கிறார். ஒருமுறை சமையலறைக்குச் சென்று அவல், மறுமுறை சென்று சத்து மாவு என பலமுறை போய் வந்துகொண்டிருக்கிறார். ஸாதுவும் அத்தைக்கு உதவி செய்துகொண்டிருக்கிறார். சந்துவும் பாட்டியின் பின்னேயே ஓடிப்போய், ஏதோ விளையாடுகிறாள். கூடவே அழுகிறாள்.

அங்கச்சம்மா: ஸாது, மூன்று காகிதம் கொடுக்கிறாயா? (ஸாதுவும் கொண்டு வந்து கொடுக்கிறார். அதில் அங்கச்சம்மா, மூன்று பருப்பு உருண்டைகளை கட்டுகிறார்). ஸாது, என் கிருஷ்ணாஞ்சினம், சமையலறை அலமாரியில் வைத்திருக்கேன். கொண்டு வந்து கொடும்மா. (அவரும் கொடுக்கிறார். அனைத்து பொட்டலங்களையும் கிருஷ்ணாஞ்சினத்தில் கட்டுகிறார்). ஸாது, இதைக் கட்டுவதற்கு ஒரு நல்ல கயிறு இருந்தா பாரும்மா. (அவரும் கொடுக்க, கிருஷ்ணாஞ்சினத்தை இறுகக் கட்டுகிறார். அங்கச்சம்மாவும் உள்ளே போய், தன் புடவை ஒன்றை மடியாகக் கொண்டு வந்து, கிருஷ்ணாஞ்சினத்தின் மேல் வைக்கிறார். மறுபடி உள்ளே போய் ஒரு சொம்பு கொண்டு வந்து அருகில் வைத்துக் கொள்கிறார். மறுபடி சிறிது சிந்தித்தவாறு, உள்ளே போய், ஸ்ரீமுத்திரை, கோபிசந்தனம் ஆகியவற்றைக் கொண்டு வந்து, கிருஷ்ணாஞ்சினத்தை மறுபடி அவிழ்த்து, இவற்றை உள்ளே வைத்து மறுபடி கட்டுகிறார். சந்துவும் பாட்டியின் பின்னே, அழுதவாறு ஓடிக்கொண்டிருக்கிறாள்). ஸாது, என் பழைய புடவை ஒன்றைக் கொடும்மா.

ஸாது: அது ரொம்ப கிழிஞ்சி போயிருக்கு. அது எதுக்கு இப்போ?

அங்கச்சம்மா: பரவாயில்லை கொண்டு வா. குளிருக்கு போர்த்திக்கொள்ள ஆகும். (ஸாதுவும் கொண்டு வந்து தருகிறார். பாட்டியும் அதை மடித்து வைக்கிறார். மறுபடி சமையலறைக்குச் சென்று, தன்னிடமிருந்த 10 ரூபாய்களைக் கொண்டு வருகிறார்). சுப்பாணி, காசு கொடுக்கிறாயா?

சுப்பாணி: இதோ தயாரா இருக்கு. பத்திரமா வைத்துக்கொள். (ரூபாய்களைக் கொடுக்கிறார். பாட்டியும் அந்த காசினை புடவைத் தலைப்பில் கட்டிக் கொள்கிறார். கிருஷ்ணாஞ்சினப் பெட்டி, புடவைகளை இடது கையிலும், வலது கையில் சொம்பினையும் பிடித்தவாறு நின்று).

அங்கச்சம்மா: சுப்பாணி, நான் போய் வரட்டுமாப்பா?

சுப்பாணி: சரிம்மா. மூட்டையைக் கொடு. நான் கொண்டு வர்றேன்.

அங்கச்சம்மா: வேண்டாம்பா. இது ஒண்ணும் அவ்வளவு எடையில்லை. நானே தூக்கிக்கறேன். உனக்கு ஸ்கூலுக்கு நேரமாயிடுச்சே. ஸாது, நான் வரட்டுமாம்மா?

(சுப்பாணி மற்றும் ஸாது, அம்மாவை நமஸ்கரிக்க, அவரும் ஆசிர்வதிக்கிறார்). மகராஜனாக நல்லாயிருப்பா. மகராணியாக நல்லாயிரும்மா. உன்னால் எனக்கு இந்த யாத்திரை கை கூடியது. எவ்வளவு சீக்கிரம் முடியுதோ அவ்வளவு சீக்கிரம் வந்துடறேன். (சந்துவைப் பார்த்ததும், மறுபடி கைகளில் இருந்ததை கீழே வைக்கிறார்) சந்து, அழக்கூடாதம்மா. நான் சீக்கிரம் வந்துவிடுகிறேன்.

சந்து: (அழுதவாறு) என்னையும் அழைச்சிக்கிட்டுப் போ.

அங்கச்சம்மா: இன்னொருமுறை நீ, அப்பா, அம்மா, நான் எல்லோரும் வண்டி கட்டிக்கிட்டு போவோம். இப்போ வயசானவங்க மட்டும் போறோம். அழாதேம்மா.

சந்து: (அழுதவாறு) என்னை இப்போதே அழைத்துப் போ. பிறகு வேண்டாம்.

அங்கச்சம்மா: அப்படி சொல்லக்கூடாதும்மா. உனக்கு விளையாட கிருஷ்ண பொம்மை வாங்கி வர்றேன். விளையா ட்டுப் பொருட்கள் வாங்கித் தர்றேன். அழாமல் சும்மா இரும்மா.

சந்து: எனக்கு எதுவும் வேண்டாம். என்னை இப்போதே அழைச்சிட்டுப் போ.

ஸாது: (சந்துவை கையில் பிடித்துக்கொண்டு) ஹே சந்து. நல்லாயிருக்கு. நீ போகணும்னா எப்படி? அங்கே கும்பல் கும்பலா சாமியார்களெல்லாம் வந்திருப்பாங்க. சின்ன குழந்தை கள் யாராவது வந்தா, அவஙகளை தூக்கிக்கிட்டுப் போயிடுவாங்க. அழாமல் இருந்தால், சாயங்காலம் சினிமாக்குப் போகலாம். இந்த மாமாங்கத்தில் ஒரே கும்பல், அழுக்கு, தூசு. அங்கேயா போகணும்னு சொல்றே?

சந்து: நான் போகணும். பாட்டி, என்னையும் அழைச்சிக்கிட்டு போ. (சத்தமாக அழுகிறாள்).

சுப்பாணி: முதுகில் ரெண்டு போடு. வாய் மூடு. இப்போ வாய் மூடறியா இல்லையா? (என்றவாறு வந்து ஒரு அடி கொடுக்க, சந்துவும் விக்கி விக்கி அழுதவாறு, அமைதியாகிறாள்).

அங்கச்சம்மா: (மறுபடி மூட்டைகளை கீழே வைத்தவாறு, சுப்பாணி & ஸாதுவை திட்டியவாறு, சந்துவை தூக்கிக் கொஞ்சுகிறார்). சின்னா, ஏன் அழுகிறாய்? உனக்கு என்ன வேணும் சொல்லு. கிலுகிலுப்பை வேணுமா? ஸாது பாரும்மா, கிலுகிலு ப்பை வேணும்னு சொல்றா. கண்டிப்பா வாங்கி வர்றேன். நான் இப்போ போய் வரட்டுமா? (ஸாதுவிடம்) குழந்தைகளை பத்திரமா பாத்துக்கோம்மா. (குழந்தையை கீழே விட்டு, மூட்டைகளை தூக்கிக் கொள்கிறார்) ஸாது, சுப்பாணி, போய் வரட்டுமா? (என்றவாறு கிளம்புகிறார்).

சுப்பாணி: இப்படியே நேரமாயிடுச்சே. இன்னும் இவங்க எப்போ போய் சேருவது?

ஸாது: இன்னும் நேரம் இருக்குங்க. வாங்க, நீங்க சாப்பிடுங்க.

சுப்பாணி: இவ்வளவு சீக்கிரம் சாப்பிட்டு என்ன செய்வது? இன்னும் கொஞ்ச நேரம் போகட்டும்.

அங்கச்சம்மா: ஸாது, கதவைத் திறம்மா.

ஸாது: (கதவைத் திறந்தவாறு), அத்தை, ஏன் மறுபடி வந்துட்டீங்க?

அங்கச்சம்மா: ஸாது, சொல்லவே மறந்துட்டேன். சாயங்கால வேளையில், பின்கதவை சரியா இழுத்து சாத்தி, தாழ்ப்பாள் போட மறக்காதே. எல்லா இடங்களிலும் திருடங்கள் தொல்லை. ஞாபகம் வெச்சிப்பியா? மறந்துடாதேம்மா. (மறுபடி கிளம்புகிறார்).

ஸாது: பாத்தீங்களா, உங்கம்மாவை. இவ்வளவு வயசாகியும் எவ்வளவு எச்சரிக்கையா இருக்காங்க.

சுப்பாணி: அது சரி. ஆனா சில சமயங்களில் தொந்தரவாகவும் இருப்பாங்க. அங்கே பாரு. சந்து இன்னும் அழுதுட்டிருக்கா.

ஸாது: அவளை அப்படியே விடுங்க. சாப்பிடாமல் அழுதுகிட்டே இருக்கட்டும்.

அங்கச்சம்மா: ஸாது, கதவைத் திறம்மா.

ஸாது: இதென்ன மறுபடி வந்துட்டாங்க (கதவைத் திறக்கிறார்).

அங்கசம்மா: சொல்லவே மறந்துட்டேன். அந்த பெரிய அடுக்கில், அருளு-சண்டிகை, அந்த பாத்திரத்தில் அவல்- சண்டிகை, அந்தப் பக்கம் ஊறுகாய் இருக்கு. அதெல்லாம் மடியில் வெச்சிருக்கேன். ஞாபகமில்லாமல் வேறெங்காவது வைத்துவிட வேண்டாம். கைகூப்பி கேட்டுக்கறேன். நான் வரும்வரைக்கும், உங்களுக்கு சாப்பிட தனியா எடுத்து வெச்சிருக்கேன். அதையே போட்டுக்கோங்க. இதை சொல்றதுக்கு மறந்துட்டேனேன்னு திரும்ப வந்தேன். சுப்பாணி, ஸாது, நான் வரட்டுமா? (திரும்பிப் போகிறார்).

சுப்பாணி: நான் சொன்னேனே. சில சமயம் கடுப்பேத்துவாங்கன்னு. யாரையும் நம்பமாட்டாங்க.

ஸாது: பெண்களின் சுபாவமே அப்படிதான்.

சுப்பாணி: ஒப்புக் கொள்கிறாயா? நீயும் அப்படி ஆகிட்டா என்ன பண்றது?

ஸாது: மகராஜராக நல்லா இருங்க. நான் அப்படி ஆகவேண்டாம்.

அங்கச்சம்மா: ஸாது, கதவைத் திறம்மா.

ஸாது: சரியாப் போச்சு. இதென்ன, அத்தைதானா, இல்லை பூத பிசாசா? (எழுந்து போய் கதவைத் திறக்கிறார்).

சுப்பாணி: என்னம்மா இப்படி திரும்பத் திரும்ப வந்துட்டிருக்கே? உனக்கு ரெயிலுக்கு நேரமாகலையா?

அங்கச்சம்மா: இன்னும் நிறைய நேரம் இருக்கு. முக்கியமான விஷயமே சொல்ல மறந்துட்டேன். ஸாது, பாரும்மா. பக்கத்து தெருவில் நிறைய எலி செத்துக் கிடக்காம். அந்தப் பக்கம் நீயும் போகாதே. குழந்தைகளையும் போகவிடாதே. சுப்பாணி, இதுக்கு ஏதோ தடுப்பூசி போடறாங்களாமே? நீயும் போட்டுக்கோ. எல்லா ருக்கும் இன்னிக்கே போட்டுவிடு. வரும் வழியில் ஒரு பிணம் போவதைப் பார்த்தேன். ப்ளேக் நோயினால் இருக்கலாம்னு பேசிக்கறாங்க. அதுக்காக பயந்து இதை சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன். நான் வரட்டுமா (கிளம்புகிறார்).

ஸாது: அத்தையின் பாதி ஆயுள், இப்படி ஓடிஓடி வருவதற்கே சரியாயிடும் போலிருக்கு. இன்னும் கும்பகோணம் போய், மகாமகத்தில் பங்கேற்க உயிர் இருக்கணுமே.

சுப்பாணி: அதை விடு. இப்பவே சாப்பாடு போடறியா? பிந்து ஸ்கூலிலிருந்து வந்தபிறகு எல்லாரும் சேர்ந்து உட்காரலாமா?

ஸாது: உங்க இஷ்டம். நீங்க சாப்பிடுங்க. அவ வருவதற்கு இன்னும் நேரமாகும். (சுப்பாணி எழுந்து கை கால் அலம்பிக் கொண்டு, சட்டையைக் கழட்டுகிறார்).

அங்கச்சம்மா: ஸாது, கொஞ்சம் கதவைத் திறம்மா.

சாது: எனக்கென்னமோ பயமாயிருக்கு. இதென்னமோ விசித்திர மாயிருக்கு. நீங்களே போய் கதவைத் திறங்க.

சுப்பாணி: (கதவைத் திறக்கிறார்). இதென்னம்மா ஆச்சு இன்னிக்கு. இப்படி நடந்துக்கிட்டிருந்தா உன் கால் என்ன ஆகிறது? இன்னும் எப்போதான் ஸ்டேஷனுக்குப் போறது?

அங்கச்சம்மா: இன்னும் முக்கால் மணி நேரம் இருக்கு. ஊருக்குப் போகும்போது எல்லாம் சரியாக சொல்லிட்டுப் போகணுமே? அப்படியேவா போயிடுவாங்க. சரியாப் போச்சு.

ஸாது, ஒரு பெரிய விஷயத்தையே மறந்துட்டேன். எண்ணெய் விற்பவள் வந்தால், இந்தக் கதவுக்குப் பின்னாடி ஒரு எண்ணெய் பாத்திரம் இருக்கு. எண்ணெயை அதில் அளவு பார்த்து வாங்கு. என்னைப் போன்றவளையே அவள் நல்லா ஏமாத்திடுவா. நா வரட்டுமா ஸாது.

சுப்பாணி: ஒவ்வொரு முறையும் நான் வரட்டுமா, வரட்டு மான்னே கேட்கிறாய். திரும்பி வந்துவிடுகிறாய். இப்போதாவது, போகட்டுமான்னு கேளு. ரெயிலாவது கிடைக்கட்டும்.

அங்கச்சம்மா: ரெயில் கிடைக்காமல் என்னப்பா? இன்னும் 10 நிமிடத்தில் ஸ்டேஷனுக்கு புறப்பட்டுப் போறேன். ஸாது, வெளிக் கதவு மூடியே இருக்கட்டும். இந்த பிச்சைக்காரர்களின் தொல்லை அதிகம். அதில் பலர் திருடர்கள். என்னைப் பார்த்தாலே பயப்படுவார்கள். பத்திரம். வரட்டுமா (கிளம்பிப் போகிறார்).

சுப்பாணி: இவள் சும்மா போய் வருவதற்கு, இந்த கதவு திறந்தே இருக்கட்டும். கண்டிப்பா ரெயில் ஏறிட்டான்னு தெரிந்தபிறகு, ஒரேயடியா கதவை சாத்திக்கலாம். நிமிடத்துக்கு ஒரு முறை யார் இவளுக்கு கதவைத் திறந்து விடுவது?

ஸாது: இனி வரமாட்டாங்க. ஏதோ கவலை, பாவம். அவர் சொல்வது எல்லாம் சரியாகவே இருக்கு பாருங்க. அவர் இவ்வளவு சொல்லவில்லையெனில், எனக்கு தெரிந்திருக்கவே வாய்ப்பில்லை. என்ன சொன்னாலும், அவரைப் போன்ற அனுபவ சாலி வேறு யாரும் இல்லை. இனி வரப்போவதும் இல்லை.

சுப்பாணி: கொஞ்ச நேரம் சும்மாயிரு. எனக்கென்னவோ நம்பிக்கையே இல்லை.

ஸாது: இனி அவங்க கண்டிப்பா திரும்பி வரமாட்டாங்க. வேணும்னா பாருங்க. வண்டி ஏறிடுவாங்க.

அங்கச்சம்மா: ஸாது, கதவைத் திறம்மா.

ஸாது: சரியாப் போச்சு. உங்கம்மாவைப் பற்றி உங்களுக்குதான் தெரியும். எனக்கு எப்படி தெரியும்? இப்போ எதுக்கு வந்திருக் காங்கன்னு தெரியலியே? (கதவைத் திறக்கிறார். பாட்டி உள்ளே வந்து, மூட்டையை, சொம்பினைக் கீழே வைத்து, கோபத்துடன் சொல்கிறார்).

அங்கச்சம்மா: ஏ சுப்பாணி. எனக்குதான் வயசாயிடுச்சு. புத்தி பேதலிச்சிடுச்சுன்னா உங்க இரண்டு பேருக்கும் என்ன ஆச்சு? இந்த சின்ன வயதில் உங்களுக்கும் அறிவு கெட்டதுன்னா எப்படிதான் சம்சாரம் செய்வீங்களோ? நாளன்னிக்கு, நம்ம சுந்த்ருவுக்கு பிறந்த நாள் இல்லையா? பாயசம், போளியுடன் சமையல் செய்ய வேண்டாமா? குழந்தையை தொட்டிலில் போட வேண்டாமா? லட்டு- பாகின (வருபவர்களுக்கு தாம்பூலம்) கொடுக்க வேண்டாமா? யார் அவல் இடிப்பார்கள்? யார் லட்டு செய்வார்கள்? சமையல் யார் செய்வார்கள்? உங்களுக்கு இதெல்லாம் தெரிய வேண்டாமா? நம் குழந்தையின் பிறந்த நாளைவிட, எனக்கு மகாமகம்தான் முக்கியமா? மகாமகம் வந்துட்டேதான் இருக்கும். நம் குழந்தையின் முதல் பிறந்த நாள் மறுபடி வருமா? நான் ஊருக்குப் போகவில்லை. சுப்பாணி, இந்த 25 ரூபாய்களை நீயே வெச்சிக்கோ. அடகு வைத்த சூடாமணியை முதலில் மீட்டு வா.

***

# ஜாமண்ணனின் சிரோடி
# அல்லது நாக்கு ருசி

பாத்திரங்கள்:
ஜாமண்ண : ஒரு ஏழை பிராமணன்
சந்து : ஜாமண்ணனின் மனைவி
கணப : ஜாமண்ணனின் மைத்துனன்
திம்மப்ப ஷெட்டர் : வியாபாரி
ரங்கண்ண : அடகுக் கடைக்காரர்
விஷகண்டய்யா : அடகு கடைக்காரர்

***

காட்சி - 1 - (ஜாமண்ணனின் வீடு)

ஜாமண்ண : ஸ்ருஷ்டியின் ரகசியமே புரியல. என்ன பரமாத் மனின் லீலை? நான் சாஸ்திரங்களைப் படித்ததில்லை. தத்வ உபதேசமும் பெற்றவனில்லை. எனக்கே இப்படி இருக்கும்போது, அந்த சாஸ்திரங்களைப் படித்தவர்களுக்கு, பகவந்தனின் லீலை எவ்வளவு தெரிந்திருக்கும்? பகவந்தனுக்கு இதெல்லாம் ஒரு விளையாட்டு போல.

சந்து : இதென்ன ஆச்சு உங்களுக்கு, இப்படி பேசிட்டிருக்கீங்க? என்னிக்கும் இல்லாத வேதாந்தப் பேச்சு இன்னிக்கு எதுக்கு?

ஜாமண்ண : வேதாந்தமா, என்ன ஒரே வார்த்தையில் இப்படி சொல்லிட்டே?. இந்த வேதாந்தத்திற்கு நான் எவ்வளவு கஷ்டப்ப ட்டிருக்கேன் தெரியுமா? வெறும் உபதேசம் பிரயோஜனமில்லை. எதுவும் நம் அனுபவத்திற்கு வரவேண்டும்.

சந்து : அப்படி என்ன வேதாந்தத்தை அனுபவம் செய்தீங்க? அப்படி எதுவும் எனக்கு தெரியலையே?

ஜாமண்ண : எனக்கு எப்படி தெரிந்தது? நீயோ பிறவிக் குருடி.

சந்து : எப்போதும் கண் திறந்திருக்கும் உங்களுக்கு என்ன தெரிந்ததோ நான் அறியேன்.

ஜாமண்ண : இங்கே பார், உலகத்தில் எவ்வளவோ விசித்திர / அதிசய விஷயங்களை பார்க்கலாம். சிங்கம் மற்றும் நரி இரண்டும் ஒரே தட்டில் சாப்பிடுவதை சர்க்கஸில் பார்க்கலாம். இரண்டு பேர் ஒன்றாக சுற்றி வந்தவர்கள், அதில் ஒருத்தனுக்கு வெற்றி கிடைத்தால், இன்னொருத்தனுக்கு வயிற்றெரிச்சல், பொறாமை அதிகமாக இருந்தாலும், அவன் முன்னால் நின்று ‘மிக்க மகிழ்ச்சி. வாழ்த்துக்கள்’னு சொல்றதையும் பார்க்கலாம்.

இன்ஷ்யூரன்ஸ் எடுத்துக்கோங்கன்னு ஒருவரை அந்த ஏஜெண்ட் துன்புறுத்த, கோபம் கொள்ளும் அவர், ‘இனி இந்தப்பக்கம் வராதீங்க. கடவுள் ஆணையா நான் இன்ஷ்யூரன்ஸ் எடுக்க மாட்டேன். மறுபடி இங்கே வந்தா, கழுத்தைப் பிடித்து தள்ளி டுவேன்’னு கோபத்தில் சொன்னாலும், அந்த ஏஜெண்ட் சிரித்த வாறே ‘நன்றி’ என்று சொல்லிப் போவார். மறுபடி ஒரு வாரம் கழித்து அவரிடமே வந்து பேசுவார். இதையும் நான் இந்த உலகத்தில் பார்க்கலாம்.

ஆனால், நல்ல ஆரோக்கியம் மற்றும் செல்வம் இது இரண்டும் ஒரே இடத்தில் இருக்கும் காட்சியை நீ எங்கேயாவது பார்த்தி ரு க்கிறாயா?

சந்து: இதில் என்ன தவறு கண்டீர்கள்? கடவுள் பரம தயாளு. ஒருவருக்கு செல்வத்தை அள்ளிக் கொடுக்கிறான். இன்னொரு வருக்கு ஆரோக்கியத்தைக் கொடுக்கிறான். அதனால் என்ன?

ஜாமண்ண: அதுதான் பிரச்னை. இப்போ பார். கடவுள் எனக்கு ஒரு குழந்தையைக் கொடுக்கவில்லை. ஆனால் வயிற்றில் இருக்கும் நெருப்பு (பசி / ஜடராக்னி), பெரிய தீவட்டி போல பகபகவென்று எரிகிறது. இந்த நெருப்பை எப்படி அணைப்பேன்?. அதே, நம் ஊரில் இருக்கும் வியாபாரிக்கு, போர்த்திக் கொண்டு படுக்குமளவிற்கு பணம் இருக்கிறது. என்ன பிரயோஜனம்? கொஞ்சமாக ரசம் சாதம் தின்றால் போதும். வயிறு நிரம்பிவிடு கிறதாம். அடுத்த மூன்று நாளுக்கு பசி எடுப்பதில்லையாம்.

சந்து: அது அவரவர் கர்மபலன். நமக்கு ஆரோக்கியம் நல்லா இருக்கிறதேன்னு மகிழ்ச்சி அடையலாம். கடவுள் கொடுத்ததை தின்றுகொண்டு திருப்தியாக இருந்தால் போதும்.

ஜாமண்ண: அப்படி இருக்கதான் நினைக்கிறேன். ஆனால் இந்த சபலம் இருக்கிறதே? நான் என்ன செய்ய?

சந்து: இப்ப என்ன ஆச்சு, சபலம் வர்றதுக்கு?

ஜாமண்ண: நேற்றிரவு ஒரு கனவு வந்தது. அதை இப்போ நினைத்தாலும், மெய் சிலிர்க்கிறது. யார் வீட்டிலோ என்னை சாப்பாட்டுக்கு கூப்பிட்டதைப் போலவும், நான் போனது போலவும், அங்கு அற்புதமான சிரோடிகளை செய்திருந்ததைப் போலவும் கனவு. நல்ல வாழையிலை போட்டு, அனைவரையும் சாப்பிட அமர்த்தி பரிமாறினார்கள். சட்னி, விதவிதமான கோசம் பரிகள், காய்கறிகள், அப்பளம், சண்டிகை, சித்ரான்னம், பாயசம், உப்பேரி, வெண்ணையிலிருந்து காய்ச்சிய நெய் இதெல்லாம் பரிமாறியதைப் போலவும் கண்டேன். இலை முழுக்க இவ்வளவு இருந்தும், என் மனது முழுக்க அந்த சிரோடியிலேயே இருந்தது. பாக்கியெல்லாம் தினமும் கிடைப்பதே. ஆனால், அந்த சிரோடி அபூர்வம் அல்லவா! இப்படியாக, நான் சாப்பிட்டதைப் போன்ற கனவு. ஆஹா. அதைப் பற்றி நினைத்தாலே மெய் சிலிர்க்கிறது.

ஒவ்வொரு இலைக்கும், அவர்கள் வேண்டாம் வேண்டாம் என்றாலும் விடுவதில்லை. சிரோடிகளை பரிமாறிக் கொண்டே இருக்கிறார்கள். என் பக்கத்து இலையிலும் சிரோடி விழுந்தது. நெய், பால், சர்க்கரை ஆகியவற்றால் அபிஷேகம் ஆனது. சிரோடி பரிமாறுபவர்களின் பார்வை என் மேல் விழுந்தது. கை நிறைய சிரோடிகளை எடுத்து என் இலையில் போடப் போகும் சமயம்.. சரியாக என் கனவு கலைந்துவிட்டது. கனவிலும் சனி பகவானின் தொல்லை. கனவில் சாப்பிடுவதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அதற்குள் எழுந்துவிட்டேன். என் தலையெழுத்து, கனவிலும்கூட சிரோடிக்கு வழியில்லையா?

சந்து: அவ்வளவுதானே. சிரோடி என்ன பெரிய விஷயம்? அதுக்காக எதுக்கு இவ்வளவு புலம்பல் / கஷ்டம்?

ஜாமண்ண: சரியாகக் கேட்டாய். சிரோடின்னா என்ன சும்மாவா? சரி, நமக்கு திருமணம் ஆகி முப்பது வருடம் ஆயிடுச்சா? ஒரு நாளாவது எனக்கு சிரோடி செய்திருக்கிறாயா? நம் திருமணத் திலாவது சிரோடி செய்து போட்டாங்களா? ஒரு ஆணுக்கு, திருமணம் என்பது அவன் வாழ்க்கையில் ஒரு மிக முக்கியமான நாள். அன்னிக்கே அவனுக்கு சிரோடி கிடைக்க லேன்னா, எனக்கு வேற என்னிக்கி அது மறுபடி கிடைக்கும்?

சந்து: கிடைக்காத பொருளுக்கு ஏன் இவ்வளவு கஷ்டப்படணும்? அதை மறந்துவிடுங்கள்.

ஜாமண்ண: அது எப்படி மறக்க முடியும்? சந்திர மண்டலத்தைப் போன்ற சிரோடியை மறப்பது எப்படி? எப்போதெல்லாம் நினைக் கிறோமோ, அப்போதெல்லாம் சிரோடி சாப்பிட்டே ஆகவேண்டும். இல்லையெனில், இதே கவலையில் எனக்கு முடிவு வந்துவிடும். என்ன சொல்கிறாய்?

சந்து: நான் என சொல்றது? சிரோடி செய்வதற்கு எனக்கு தெரியும். கடவுள் கொடுத்த கைகளும் இருக்கு.

ஜாமண்ண: கடவுள் நமக்கு கை கொடுத்தது என்னமோ நிஜம். என் தலையையாவது அடகு வைத்து, சாமான்களை வரவழைக் கிறேன். நாம் இருவரும் திருப்தியா சாப்பிடும் அளவுக்கு சிரோடி செய்கிறாயா? மறுபடி சிரோடின்னு சொன்னா, வாந்தி வரணும்ற அளவுக்கு திங்கணும். என்ன சொல்றே?

சந்து: சிரோடி செய்வது என்ன விளையாட்டு விஷயமா? எவ்வளவு ரவை, நெய், சர்க்கரை, பால் ஆகியவை வேண்டி யிருக்கும். செய்வதற்கு நான் பின்வாங்கறேன்னு நினைக்க வேண்டாம். சாமான்கள் இவ்வளவு வாங்கணுமே, அதை சொன்னேன்.

ஜாமண்ண: அதைப் பற்றி நீ கவலைப்படாதே.

காட்சி-2 திம்மப்ப ஷெட்டரின் கடை

திம்மப்ப ஷெட்டர் கல்லாவில் அமர்ந்திருக்கிறார். ஜாமண்ண னின் வருகை.

ஷெட்டர்: ஜாமண்ணருக்கு வணக்கம். இதென்ன அபூர்வமாக வந்திருக்கிறீர்? என் கடைக்கு எப்போதும் வந்ததேயில்லையே?

ஜாமண்ண: ஷெட்டரே, வருவதும் போவதும் என் கையிலா இருக்கு?

கபிலாம் தர்பணம் பானும் பாக்யவந்தம் ச பூபதிம்
ஆசார்யம் அன்னதாதாரம் ப்ராத: ப்ரஷ்யேத்
என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஷெட்டரே, நீங்கள் பாக்கியசாலி. உங்களை பார்ப்பதே புண்ணிய காரியம்தானே?

ஷெட்டர்: ஐயோ. நான் என்ன பெரிய பாக்கியசாலி? தராசு வெச்சி வியாபாரம் செய்யும் எனக்கு என்ன பாக்கியம்?

ஜாமண்ண: ஷெட்டரே, அப்படி சொல்லாதீங்க. ஷெட்டர் அனைவரும் பாக்கியசாலிகளே. ஆனால் நீங்க மட்டும், பாக்கியசாலி, புண்ணியவந்தர், அதிர்ஷ்டசாலி. சாட்சாத் திருப்பதி ஸ்ரீனிவாசன் மேல் ஆணையிட்டு சொல்கிறேன். எப்போதும் உங்க கடைக்கு வராத நான், ஸ்ரீனிவாசனின் ஆணை இல்லாமல் இன்று வருவது சாத்தியமா? யோசித்துப் பாருங்கள்.

ஷெட்டர்: ஜாமண்ணரே. ரொம்ப சந்தோஷம் உங்கள் சேவை செய்வதற்கே இங்கே இருக்கிறேன். உங்களுக்கு என்னென்ன சாமான்கள் வேணும்னு சொல்லுங்க, நியாயமான விலையில் கொடுக்கிறேன். எனக்கு லாபம் சம்பாதிப்பதில் விருப்பம் இல்லை.

ஜாமண்ண: நான் சாமான் வாங்க வரவில்லை. ஸ்ரீனிவாசன் உங்களுக்குக் கொடுத்திருக்கும் ஆசி, புண்ணிய பலன்களை உங்களுக்கு கொடுக்கணும்னு வந்திருக்கிறேன்.

ஷெட்டர்: ரொம்ப சந்தோஷம். ஸ்ரீனிவாசர் உங்களுக்கு பிரத்யட்சமாக தரிசனம் கொடுத்தாற்போல தெரிகிறது. எனக்கு என்ன செய்தி சொன்னார்? சொல்லுங்க.

ஜாமண்ண: ஷெட்டரே, என்ன சொல்றது உங்க பாக்கியத்தை?. நேற்றிரவு ஸ்ரீனிவாசனே என் கனவில் ஒரு வயதான பிராமண ரூபத்தில் வந்து, 'ஏ, பிராமணனே, ஏன் கஷ்டப்படுகிறாய்? என் பிரம்மோத்ஸவத்திற்காக திருப்பதிக்கு வா. உன் கஷ்டங்கள் அனைத்தும் தீர்ந்துவிடும்' என்றார். நான் 'ஸ்வாமி, நான் செல்வந்தனல்ல. கையில் பணமே இருப்பதில்லை. நான் திருப்பதிக்கு எப்படி வருவது?' என்றேன். அதற்கு ஸ்வாமி, 'ஐயோ பைத்தியக்காரா! உலகத்தில் என் பக்தர்கள், புண்யவந்தர்கள் இல்லவே இல்லையா? உங்க ஊரிலேயே ஸ்ரீனிவாச ஷெட்டர் இருப்பது உனக்கு தெரியாதா?' என்று பகவந்தன் கேட்டார். அதற்கு நான், 'ஸ்வாமி, பிராமணர்கள், க்ஷத்ரியர்களெல்லாம் இருக்கும்போது, ஷெட்டரை எப்படி கேட்பது?' என்று எனது அஞ்ஞானத்தில் நான் கேட்க, கடவுளுக்கு கோபம் வந்துவிட்டது. 'ஏ அஞ்ஞானியே. முட்டாள். நான் படைத்தவர்களில் ஷெட்டர் களைவிட ப்ரியமானவர்கள் எனக்கு வேறு யாரும் உண்டா? திம்மப்ப என்று நானே பெயர் வைத்துக் கொள்ளவில்லையா? உடனடியாக, என் ஆணையை ஷெட்டரிடம் சொல்லி, அவரிடம் உதவி பெற்று பிரம்மோத்ஸவத்திற்கு வா. இதற்காக அந்த ஷெட்டருக்கு விசேஷமான செல்வத்தை நான் கொடுக்கிறேன்' என்று சொல்லி, ஸ்ரீனிவாசப் பெருமாள் மறைந்துவிட்டார்.

ஷெட்டர்: ஜாமண்ணவரே, நீங்க எவ்வளவு புண்ணியசாலி! ஸ்ரீனிவாசனின் தரிசனத்தையே பெற்ற பாக்கியசாலி! ஸ்ரீனிவாசன், நம்மப்பன், என் மேல் எவ்வளவு அனுக்கிரம் / கருணையோ ஸ்வாமி? என் சேவையையே நீ விரும்பினால், அதுவே என் பிறவிப்பயனாக கருதுகிறேன். ஜாமண்ணவரே, நான் மிகவும் தன்யனானேன். நீங்கள் கண்டிப்பாக பிரம்மோத்ஸவத்திற்குப் போகவேண்டும்.

ஜாமண்ண: ஷெட்டரே, ஸ்ரீனிவாசனின் ஆணையை மீறுவது சாத்தியமா?

ஷெட்டர்: கண்டிப்பாக சாத்தியம் இல்லை. யாருக்கும் சாத்திய மில்லை. ஸ்ரீனிவாசனின் ஆணையை நான் தலைவணங்கி ஏற்றுக் கொள்கிறேன். நான் உதவி செய்கிறேன். ஆனால், நீங்கள் திருப்பதிக்கு சென்று ஸ்ரீனிவாசனின் தரிசனத்தைப் பெறும்போது, மறக்காமல் என்னை நினைக்க வேண்டும்.

ஜாமண்ண: (மனதில்) நான் சொன்னது பலன் தரும் போலிருக்கு. எதற்கும் அறிவு வேண்டும். (உரக்க) உங்களை எப்படி மறக்க முடியும் ஷெட்டரே? இந்த என் பாக்கியத்திற்கு முழுக் காரணமான உங்களை மறந்தால் ஸ்ரீனிவாசன், என்னை மறந்துவிட மாட்டானா?

ஷெட்டர்: ஜாமண்ணரே, உங்களுக்கு சொல்லணுமா? என் கோத்திரம் - காஸ்யப கோத்திரம். என் தந்தை பெயர் முத்யால் ஷெட்டர். இதையெல்லாம் நினைவில் கொண்டு ஸ்ரீனிவாசனுக்கு சமர்ப்பணம் செய்துவிடுங்கள்.

ஜாமண்ண: ஆஹா. கண்டிப்பாக.

ஷெட்டர்: ஸ்ரீனிவாசனைக் காண செல்பவருக்கு தானம் செய் வதைவிட சிறந்த செயல் வேறு உண்டா? ஸ்ரீனிவாசனுக்கு காணிக்கை செய்வதனால், நான் சம்பாதித்தது அனைத்தும் பயம் பெற்றது அல்லவா? ஆஹா! நான் எத்தகைய தன்யன். ஜாமண் ணவரே, எனக்கு மிகப்பெரிய உதவியை செய்தீர்கள். என் பிறவி யையே பயனுள்ளதாக ஆக்கினீர்கள். இதோ, என் காணிக்கையை ஏற்றுக் கொள்ளுங்கள். ஸ்ரீனிவாசனின் ஆணையைப் போல, பிரம்மோத்ஸவ தரிசனத்தைப் பெற்று, அந்தப் பலனை நீங்களும் பெற்று, எனக்கும் கொடுங்கள். (என்று, தன் உடையின் பல இடங்களிலிருந்து பல கைப்பைகளின் முடிச்சுகளை அவிழ்த்து, காசுகளை எண்ணி, அதிலிருந்து ஒரே ஒரு காசினை எடுத்து ஜாமண்ணருக்குக் கொடுத்தார்).

ஜாமண்ண: (மனதில்) சரியாப் போச்சு. சிரோடி தின்றால் போலதான். இந்த ஷெட்டரை ஏமாற்ற, இந்த உலகத்தில் யாரேனும் இருக்கிறார்களா என்ன?

காட்சி-3 = (ரங்கண்ணனின் வீடு. ஜாமண்ணர் வருகை)

ஜாமண்ண: ரங்கண்ணக்கு நமஸ்காரம். என்ன செய்தி ஐயா?

ரங்கண்ண: ஜாமண்ண, வாப்பா. எங்கே இந்தப் பக்கம்?

ஜாமண்ண: விடியலில் எழுந்து கொஞ்சம் நடைப்பயிற்சிக்குப் போயிருந்தேன். அப்படியே இங்கே வந்தேன். உங்களைப் பார்த்து ரொம்ப நாள் ஆச்சே? இதென்ன புடலங்காய் நல்லா இருக்கே? உங்களுக்கு எங்கே கிடைச்சது?

ரங்கண்ண: நம்ம தோட்டத்தில் விளைஞ்சதுதான். புடலங்காய் சாம்பார் வெச்சி சாப்பிடுங்கன்னு தோட்டக்காரன் வந்து கொடுத்தான். ஜாமண்ண, எனக்கு சாப்பாட்டு விஷயத்தில் சமரசமே கிடையாது. எல்லாமே நல்லா இருக்கணும். இருக்கும் வரை சுகமாக இருந்து, சாப்பிட்டு, போயிடணும். காய்கறிகள் இல்லாமல் எங்க வீட்டில் சமையலே கிடையாது.

ஜாமண்ண: சரியா சொன்னீங்க தலைவரே. நான் சும்மா புகழ்ச்சிக்காக சொல்றேன்னு நினைக்காதீங்க. எவ்வளவோ பேரை பார்த்திருக்கேன். உங்களைப் போல வேறு யாரையும் பார்த்ததில்லை. சும்மா பணத்தை சம்பாதிக்கிறாங்க. எல்லாத்திலேயும் அவசரம்தான். வயிற்றுக்கு சாப்பாடு போட நேரமில்லை. நல்ல ஆடை உடுத்துவதற்கு நேரமில்லை. இப்படி இருந்தால் என்ன பிரயோஜனம்? பாருங்க, ரங்கண்ணவரே, நான் சும்மா வெட்டிப் பேச்சுக்காக சொல்பவனில்லை. உங்களைப் போல சுகமாக, அமர்ந்துகொண்டு, வந்து போவோர்களுக்கு நல்ல மரியாதை கொடுத்து பேசி, தான தர்மம் செய்துகொண்டு இருப்பவர் வேறு யாரையும் நான் இது வரை கண்டதில்லை. இனியும் காண்பேனோ, இல்லை.

ரங்கண்ண: ஜாமண்ண, நீ நல்ல அனுபவசாலி. பல இடங்களுக்கு சுற்றுபவன். உனக்கு சொல்லணுமா? கடவுள் புண்ணியத்தில், நான் நிறைய சம்பாதித்திருக்கிறேன். இன்னும் சம்பாத்திக் கிறேன். காசு, வட்டி, இதெல்லாம் இன்னும் வந்துட்டே இருக்கு. நல்லா சாப்பிட்டு, சுகமா இருக்கணும் இதுதான் என் ஆசை.

யாராவது வந்து, தானம் கேட்டால், நான் இல்லை என்பதில்லை. நிறைய பேருக்கு இதுவரை உதவி செய்திருக்கிறேன். உனக்கு தெரியாதா?

ஜாமண்ண: அதென்ன, எனக்கு நல்லாவே தெரியும் ஸ்வாமி, நீங்க நல்லா இருக்கணும்.

ரங்கண்ண: ஜாமண்ண, நீ இன்னிக்கு எங்க வீட்டிலேயே சாப்பிடு.

ஜாமண்ண: உங்க வீட்டில் சாப்பிட எனக்கு என்ன பிரச்னை? ஆனால், ஒரு சிறிய வேலை இருக்கு. எனக்கு ஒருவர் மைசூரி லிருந்து, கோதானம் கொடுக்கிறேன் என்று கடிதம் போட்டி ருக்கார். அடுத்த வாரம் பணம் வரப்போகிறது. ஒரு பசுவை தேடணும். அதுக்கு இன்னிக்கே 20ருபாய் அட்வான்ஸ் கொடுக்கணும். அதனால், ஒரு வாரத்துக்கு நீங்க 20ரூபாய் கொடுத்தால், அந்தப் பணம் வந்தவுடன் திருப்பிக் கொடுத்துடறேன். பரம தயாளு, நீங்க மனசு வெச்சா இது நடக்கும்.

ரங்கண்ண: ஜாமண்ண, உனக்கு பணம் கொடுக்க என்ன பிரச்னை? நேத்திக்குதான் சில இடங்களிலிருந்து வட்டி வந்தது. அப்படி வந்தது எப்படிதான் தெரிஞ்சதோ, காளே கௌடா வந்து, கடன் பத்திரத்தில் கையெழுத்து போட்டு, 500 ரூபாய் வாங்கிக்கிட்டு போனான். அதனால் இப்போ கையில் ஒரு காசும் இல்லை. அதென்னவோ ஜாமண்ண, எவ்வளவு காசு இருந்தாலும், சில சமயம் கையில் ஒரு நயா பைசாவும் இல்லாமல் போயிடுது. அதனால், பாவம் நீ இப்போ வந்து கேட்கும்போது கொடுக்க என்னிடம் பைசா இல்லை பாரு.

காட்சி - 4

ஜாமண்ண: (மனதில்) நான் ஒரு பாவி. ஷெட்டர், ரங்கண்ண இவர்கள் இருவரிடமும் என் அறிவைப் பயன்படுத்தியாயிற்று. ஆனா மூன்று காசு வரவில்லை. சிரோடி சாப்பிட்டும் ஆசையோ ஏறிட்டே இருக்கு. ஆனா, கடன் கிடைப்பதும் கஷ்டமா இருக்கு. 25 ரூபாய் கடன் கேட்டால், என்ன நகையை அடமானம்

வெக்கிறேன்னு கேட்குறாங்க. என்னிடமோ, என் பூணூலை விட்டா வேறு எதுவும் இல்லை. எந்தவொரு அடகுக்காரரும் இதை அடமானமாகவோ, விற்பதற்கோ வாங்க மாட்டாங்க. அதனால், யாரையாவது ஏமாற்றியே ஆகணும். அதிலிருந்து கிடைக்கும் பணத்தில் சிரோடி செய்து சாப்பிடணும்.

காட்சி - 5 - (விஷகண்டய்யாவின் வீடு)

விஷகண்டய்யா கணக்கு வழக்குகளை பார்த்தவாறு அமர்ந்திருக்க, ஜாமண்ண வருகை.

ஜாமண்ண: நமஸ்காரம் ஸ்வாமி.

விஷகண்டய்யா: நமஸ்காரம், வாங்க. நீங்க யாரு? எந்த ஊரு?

ஜாமண்ண: நான் இதே ஊர்தான். நான் யாருன்னு உங்களுக்கு தெரியலேன்னாலும், நீங்க யாருன்னு எனக்குத் தெரியும். நீங்க ஒரு பெரிய பேங்கர்னு (வட்டிக்கு கடன் கொடுப்பவர்) கேள்விப் பட்டிருக்கேன். எனக்கு ஒரு மாசத்துக்கு மட்டும் 25ரூபாய் கடன் வேணும். எவ்வளவு வட்டி கேக்குறீங்களோ, அதை கொடுத்துடறேன். இந்த உதவியை நீங்க எனக்கு செய்யணும்.

விஷகண்டய்யா: நீங்க என்ன வேலையில் இருக்கீங்க?

ஜாமண்ண: நான் எந்த வேலையும் செய்யவில்லை. சும்மாதான் இருக்கேன்.

விஷகண்டய்யா: சரியாப் போச்சு போங்க. இந்த காலத்தில் சும்மா இருந்தால், மரியாதையே இல்லை ஸ்வாமி. மன்னிக் கணும். தற்போது என்னிடம் எந்த பணமும் இன்னும் வசூல் ஆகவில்லை. ஏதாவது வசூல் ஆனால், கொடுக்கறேன்.

ஜாமண்ண: ஸ்வாமி, எனக்கு இந்த நிமிடமே பணம் வேணும். எப்படியாவது பார்த்து கொடுங்க.

விஷகண்டய்யா: சிவசிவ, உங்களை நான் ஏமாற்றுவேனா? நான் இங்கே லேவாதேவிக்கு உட்கார்ந்திருப்பது, பணம் வைத்துக் கொண்டு இல்லைன்னு சொல்வதற்கு இல்லை. மன்னிக்கணும்.

ஜாமண்ண: ஐயா, பணம் கிடைப்பது ஒன்றும் பிரச்னையில்லை. அந்த ஸ்ரீனிவாச ஷெட்டர் எனக்கு பணம் கொடுக்கிறேன்னார். ரங்கண்ணரோ, 'ஐயா ஜாமண்ணா, கடன் கிடன் வேணும்னா, கண்ட இடத்துக்குப் போகாமல் என்கிட்டே வா' அப்படின்னார். இவ்வளவு விலையுயர்ந்த நகையை, இவ்வளவு சின்ன பணத்திற்கு அடகு வைக்கணுமேன்னு, வேறு யாரிடமும் போக மனசில்லாமல் உங்களைப் போல பெரிய கடைக்காரரிடம் வந்தேன். சரி பரவாயில்லை. தொந்தரவு கொடுத்ததற்கு மன்னிக்கணும். நான் கிளம்பறேன். (என்றவாறு நகையை அதன் டப்பாவில் போட்டு பையில் போட்டவாறு கிளம்புகிறார்).

விஷகண்டய்யா: ஸ்வாமி ஒரு நிமிடம். உங்க பேர் என்னவோ?

ஜாமண்ண: என் பெயர் ஜாமண்ண.

விஷகண்டய்யா: ஜாமண்ணவரே, நீங்க என்னிக்கும் என்கிட்டே பணம் கேட்டதேயில்லை. ஆனா உங்க நேரம் பாருங்க. என்கிட்டே இப்போ பணமில்லை. ஆனால், என் சின்ன அத்தை, அவங்க பணத்தை கொஞ்ச நாள் வெச்சிக்கோன்னு என்கிட்டே கொடுத்து வெச்சிருக்காங்க. இதுவும் கலி காலமே. யாரையும் நம்புவதற்கில்லை. இவ்வளவு பெரிய நகையை வாங்கி, வெறும் 25 ரூபாய் கொடுப்பதில் எனக்கு எந்த பிரச்னையும் இல்லை. ஒருவேளை அவர் பணத்தை திருப்பிக் கேட்டால், அதற்குள் என் வேறு பணம் ஏதாவது வந்திருந்தால், அதிலிருந்து அவருக்கு கொடுத்து விடுகிறேன். வட்டி ரூபாய்க்கு ஒரு அணா கொடுக்கணும். உங்களுக்கு சரிப்படுமா? சொல்லுங்க.

ஜாமண்ண: வட்டி எவ்வளவு வேணும்னாலும் இருக்கட்டும். என்னுடையது ஒரு பெரிய கண்டிஷன் இருக்கு. என்னுடைய கஷ்ட காலம் நான் இந்த நகையை அடகு வைக்கிறேன். நீங்க இதை இந்த டப்பாவில் அப்படியே போட்டு வெச்சிருக்கணும். அதை எடுத்து பயன்படுத்துவதோ, வேறு யாருக்கும்

கொடுப்பதோ கூடவே கூடாது. அப்படி கொடுப்பதாக இருந்தால், எனக்கு இந்தப் பணமே வேண்டாம்.

விஷகண்டய்யா: ஆஹா ஜாமண்ணவரே! அப்படி செய்வேனா? அந்த சந்தேகமே உங்களுக்கு வேண்டாம். நீங்க பார்க்கும்போதே இதை இந்த டப்பாவில் போட்டு வைக்கிறேன். அதை மறுபடி எடுப்பதேயில்லை.

ஜாமண்ண: அப்படின்னா சந்தோஷம். நான் வரட்டா? நமஸ்காரம்.

காட்சி-6 - ஜாமண்ண, ரவை மூட்டைகளை தூக்கிக் கொண்டு.

ஜாமண்ண: (தன் வீட்டுக் கதவை தட்டியவாறு): ஏய், கதவைத் திற. சீக்கிரம் கதவைத் திற. எங்கே போய் தொலைஞ்சியோ?

சந்து: (உள்ளேயிருந்து). வர்றேன். இதோ வர்றேன். என்ன ஆச்சுன்னு இப்படி கத்தறீங்க?

ஜாமண்ண: கத்தறேன்னா என்ன? தலையில், கைகளில், தோள்களில் பல மூட்டைகளுடன் நிற்கிறேன். வர்றேன் வர்றேன்னு இப்படி மெதுவா வந்தா என்ன அர்த்தம்?

சந்து: (மனதில்) ஓஹோ. என்னென்னவோ சாமான்கள் வாங்கி வந்திருக்கார் போல. அதுக்கே இவ்வளவு சத்தம். இன்னிக்கு சிரோடி சாப்பிடணும்னு ஜாதகத்தில் எழுதியிருக்கோ என்னவோ? (கதவைத் திறக்கிறார்).

ஜாமண்ண: முதலில் இந்த பால் சொம்பினை வாங்கி வை. என்னால் குனிய முடியவில்லை. (சந்து, பால் சொம்பினை வாங்கி கீழே வைக்கிறார்). பார், இந்த நெய்யை பத்திரமாக உள்ளே வை. நல்ல வெண்ணெயில் காய்ச்சிய நெய். எப்படி இருக்கு பார் வாசனை? அருமையா இருக்கு. (சந்து, நெய் பாத்திரத்தை வாங்கி வைக்கிறார்). இந்தா, இந்த வாழையிலைக் கட்டு, இதையும் இறக்கி வை. (சந்து, இறக்கி வைக்கிறார்). இந்தா, தோள் மேல் ரவை மூட்டை இருக்கு. அரிசி மூட்டை இருக்கு. மெல்ல இறக்கு. அரிசி மாவு வாங்கணுமா வேண்டாமான்னு

சந்தேகமாவே இருந்தது. எதற்கும் இருக்கட்டும்னு வாங்கிட்டேன். (சந்து இவற்றை இறக்குகிறார்). ஜாமண்ணன், தலை மேல் இருக்கும் சர்க்கரை மூட்டையை தானே இறக்கி வைத்து, நெட்டி முறிக்கிறார். முகம், உடம்பு மேல் இருக்கும் வியர்வையை துண்டினால் துடைக்கிறார். துண்டினால் காற்று வீசிக்கொண்டு, அப்பப்பா, இவற்றை தூக்கி வருவதற்குள் உடல்வலியே வந்துடுச்சு. இந்தா. இங்கே வா, இதையும் எடுத்து வை (என்று ஒரு பாட்டிலை எடுத்துக் கொடுக்கிறார்).

சந்து: என்ன இருக்கு இந்த பாட்டிலில்?

ஜாமண்ண: ஓம-வாட்டர். நல்லா சாப்பிட்டு, அஜீரணம் ஆயிட்டா, என்ன செய்யறது. அதுக்குதான் இதை வாங்கி வந்தேன்.

சந்து: சரிதான். அப்படின்னா, எதுக்கு அவ்வளவு அதிகமா சாப்பிடணும்?

ஜாமண்ண: எதுக்கு அவ்வளவு சாப்பிடணுமா? பேஷ்! உன்னைப் போல ஒருத்தி இருந்தா போதும். எதையும் தின்னாமல் இருக்க எதுக்கு இவ்வளவு கஷ்டப்படணும்?. இந்தா மறந்துட்டேன். ஒரு வேளை அந்த ஓம்-வாட்டர் வேலை செய்யலேன்னா, இந்த இஞ்சி மொரப்பாவையும் வாங்கியிருக்கேன். வெச்சிக்கோ.

சந்து: அது சரி. இவ்வளவு சாமான் வாங்குவதற்கு எவ்வளவு பணம் ஆச்சோ?

ஜாமண்ண: அந்த விஷயமெல்லாம் உனக்கு எதுக்கு? சிரோடி தயார் ஆவதற்கு எவ்வளவு நேரம் ஆகும், அது மட்டும் சொல்லு.

சந்து: குறைந்த பட்சம் ரெண்டு மணி நேரமாவது வேணும். நான் ஒருத்திதானே எல்லாத்தையும் செய்யணும்.

ஜாமண்ண: அதுக்கு நான் செய்ய? உன்னை மட்டும்தான் நான் தொந்தரவு செய்ய முடியும். அந்த கடைசி வீட்டு நாகம்மாவை உனக்கு உதவி செய்வதற்கு கூப்பிடலாம்னு நினைச்சேன்.

ஆனா, வேலியில் போற ஓணானைப் பிடித்து மடியில் கட்டியது போல ஆகிடும்னு விட்டுட்டேன்.

சந்து: இதுக்கு எதுக்கு இன்னொருத்தரின் உதவி? நீங்க அப்படியே குளத்திற்குப் போய், ஸ்னான, சந்தியாவந்தனத்தை முடிச்சிக்கிட்டு வாங்க. அதுக்குள் சிரோடி செய்துடறேன்.

ஜாமண்ண: என்ன? இன்னிக்கு குளத்தில் ஸ்னானமா? சரியாப் போச்சு. இன்னிக்கு எல்லாமே ஒரு மாதிரிதான் பாத்துக்க. இது ப்ருங்காமலக எண்ணைய் வாங்கியிருக்கேன். நீ சிரோடி செய். நான் வெந்நீர் வெச்சி, மெதுவா எண்ணெய் தேய்ச்சி குளிச்சிட்டு வர்றேன். சரியா?

சந்து: அப்படியே செய்ங்க. (என்றவாறு, சந்து சாமான்களை சமையலறைக்கு எடுத்துச் செல்கிறாள். ஜாமண்ணன் ஒரு குடத்தை எடுத்துக் கொண்டு)

ஜாமண்ண: இந்தா, நான் பின்னாடி குளிக்கப் போறேன்.

சந்து: சரி போங்க.

ஜாமண்ண: இங்கே வா. இவ்வளவு வயசாகியும் உனக்கு உலக அறிவே இல்லை. சிரோடி செய்து கிழிக்கிற மூஞ்சியா இது?

சந்து: அது என்ன ஆச்சு திடீர்னு?

ஜாமண்ண: என்ன செய்யறேன்னு நான் பார்த்தேன். நீ வெளிக்கதவை அப்படியே திறந்து போட்டுட்டு சிரோடி செய்றதுக்கு கிளம்பிட்டே. உள்ளே என்ன நடக்குதுன்னு எல்லாருக்கும் தெரிவதற்கா? முதலில், கதவை நல்லா இழுத்துப் போட்டுட்டு, வேலையை செய்.

காட்சி-7

ஜாமண்ணன் எண்ணெய் தேய்த்துக் குளித்து, கந்த அட்சதைகளை தரித்து, பலகை மேல் பத்மாசனத்தில் அமர்ந்து, தலைப்பாகையை சரி செய்தவாறு, ‘ஏய், இங்கே பார்த்தாயா? நம் திருமண நாளிலும்

இத்தகைய அலங்காரங்கள் எனக்கு கிடைக்கவில்லை. எல்லாத்துக்கும் நேரம் வரணும். இந்தா, எனக்கு ஒரு ஆசை. நாம இருவரும், ஒரே சமயத்தில் அமர்ந்து சாப்பிடணும். என்ன சொல்றே?' என்றார்.

சந்து: பிறகு பரிமாறுவது யாரு?

ஜாமண்ண: நாம எதிரெதிரில் அமர்ந்து, நமக்கு நடுவில் சிரோடி பாத்திரத்தை வைத்திடுவோம். அப்போ பரிமாறுவதற்கு ஒரு தனியாள் தேவையேயில்லை. (சந்துவும் அப்படியே செய்தார். இருவரும் அமர்ந்து சாப்பிடத் தயாரானார்கள்).

கணப : பாவா, அக்கா. பாவா. கதவைத் திறங்க. நான் கணப வந்திருக்கேன். (ஜாமண்ணனின் முகம் வெளிறிப் போகிறது).

ஜாமண்ன: சரிதான். உன் தம்பி வந்திருக்கான். இந்த பிரச்னை இப்போ ஏன் வந்ததோ?

சந்து: ஏனோ, வந்தது வந்துட்டான். அபூர்வமா வந்திருக்கான். கதவை திறக்கட்டுமா?

ஜாமண்ண: ஏன், என் தலைமேல் கல்லைத் தூக்கிப் போடறே? அவன் என்ன சாதாரண கணபனா? கழுத்து வரைக்கும் வயிறு. தொடர்ந்து தின்று கொண்டே இருப்பானே தவிர, முடிப்பவனல்ல. இவ்வளவு சிரோடியும் அவனுக்கு ஒரு வேளைக்கே போதாதே. எவ்வளவு தடவை பார்த்திருக்கேன் அந்த பகாசுரனை. எனக்குத் தெரியாதா அவனைப் பற்றி?

கணப: பாவா, அக்கா, கதவைத் திறங்க. (கடகடவென்று கதவைத் தட்டுகிறான்).

சந்து: நான் என்ன அவனை வெற்றிலை பாக்கு வெச்சி கூப்பிட்டேனா? அவனே வந்திருக்கான். இப்போ என்ன செய்யறது? அவன் பாட்டுக்கு கத்திக்கிட்டே இருக்கட்டும். நாம இந்த சிரோடியை சாப்பிட்டு, பின்னர் போய் கதவைத் திறக்கறேன்.

கணப: அக்கா, நீயாவது வந்து கதவைத் திறக்கக்கூடாதா? என் கால்வலி உயிர் போகுது.

ஜாமண்ண: அடேய். உனக்கில்லைடா. கை, கால் போனது எனக்குதான்.

கணபா: பாவா, அக்கா, பாவா..

ஜாமண்ண: இவன் கதவைத் தட்டுவது, என் இதயத்தில் ராமபாணம் தாக்குவது போல இருக்கு. இந்த சனியன் போனால்தான் சாப்பிட முடியும் போல.

சந்து: என்ன செய்யலாம் சொல்லுங்க.

ஜாமண்ண: சரி ஒரு வழி இருக்கு. போய் கதவைத் திற. சரியாக அவன் வரும்போது, நாம் இருவரும் அடிதடி சண்டை போடுவது போல போடுவோம். நீ என்னைத் திட்டு. நான் உன்னை அடிப்பது போல அடிக்கிறேன். நீ ரகளை செய்தவாறு, அழுதுகொண்டே, இந்த வீடு எனக்கு வேண்டாம், இனி திரும்ப வரவே மாட்டேன்னு கத்திக்கிட்டே, வீட்டை விட்டுப் போய்விடு. நீயே போனபிறகு, எனக்கு இந்த வீட்டில் என்ன வேலைன்னு கத்திக்கிட்டு நானும் வெளியே போயிடறேன். நாம் இருவரும் புறப்பட்டுப் போனபிறகு இவனும் பயந்தவாறு புறப்பட்டுப் போய்விடுவான். கொஞ்ச நேரம் கழித்து நாம திரும்பி வந்து, இந்த சிரோடியை சாப்பிடலாம். இப்போதைக்கு இவற்றை எடுத்து ஒளித்து வை.

கணப: அக்கா, கதவைத் திற. எவ்வளவு நேரம் ஆனாலும் சரி, நான் வேறு எங்கும் போகப்போவதில்லை.

சந்து: (சத்தமாக அழுதவாறு) யார்றா அது? கணபா, நீ வந்தியாப்பா? என்னோட இந்த நரக வாழ்க்கையைப் பார்க்க? நீ ஏன் இப்போ வந்தே? (கதவைத் திறக்க, கணபனும் திகைத்தவாறு உள் நுழைகிறான்).

கணப: இதென்ன பிரளயம்? என்ன பிரச்னை?

சந்து: இன்னும் என்ன ஆகணும்? ஆகவேண்டியது எல்லாம் ஆயிடுச்சு. இந்த அரக்கனை கல்யாணம் செய்து கொடுத் தாங்களே, அவங்களை சொல்லணும். இவர் என்னை கொன்றே விடுவார்.

ஜாமண்ண: என்னடி சொன்னே? உன்னை துண்டு துண்டா வெட்டிப் போட்டுடறேன் இன்னிக்கு (என்று அவள் கூந்தலைப் பிடித்து கத்துகிறார். கணப உடனடியாக வந்து சமாதானம் செய்கிறார்).

சந்து: (அழுதவாறு) இந்த எழவு வீட்டில் நான் ஒரு கணமும் இருக்க மாட்டேன். (என்று சொல்லி வெளியேறுகிறாள்).

ஜாமண்ண: கணப, எந்த நேரத்தில் நீ இந்த வீட்டில் காலடி வெச்சியோ, நாசமாப் போச்சு. அது சரி, நீ என்ன செய்வே? எல்லாம் என் கிருஹச்சாரம். அவளே போனபிறகு, எனக்கு இந்த வீட்டில் என்ன வேலை? நானும் போறேன். (என்று வெளியேறுகிறார்).

கணப: (மனதில்) இதென்ன பிரச்னை? நான் ஏன் இந்த வேளையில் இங்கே வந்தேன்? நான் ஏன் இந்த சண்டை வீட்டில் இருக்கணும்? ஐயோ. நானும் புறப்பட்டுப் போகலாம்னா, ரொம்ப தூரம் நடந்து வந்தது கால் வலி உயிர் போகுதே. 30 மைல் தூரம் நடந்த கால்களில் சக்தியே இல்லை. பசியும் சேர்ந்து என்னை கொல்கிறது. பசி, தாகம், கால் வலி எல்லாம் சேர்ந்து பயங்கர பிரச்னையா இருக்கு. (சிரோடியின் வாசனையைப் பிடிக்கிறான் கணப). ஆஹா! இதென்ன வாசனை. எத்தகைய கமகம வாசனை வருதே! (என்று தேடி, சிரோடி பாத்திரத்தை கண்டுபிடித்து, பால் நெய் சர்க்கரை பாத்திரங்களை கண்டு பிடிக்கிறான்). ஆஹா. இன்று என் அதிர்ஷ்ட நாள்தான். இப்போ புரிஞ்சிடுச்சு. ரெண்டு பேரின் சண்டை, மூன்றாமவருக்கு லாபம்னு சும்மாவா சொன்னாங்க. ஆனா, இங்கே கொஞ்சம் தானே இருக்கு, இது எனக்கு போதுமா? இருக்கட்டும், கடவுள் கொடுத்ததற்கு மட்டும் திருப்தி அடைவோம். இப்படி சிரோடி கிடைக்கும்னு கனவிலாவது நினைத்திருப்பேனா?

காட்சி-8 - (ஜாமண்ண, சந்து இருவரும் வீட்டில் நுழைகிறார்கள். அதைக் கண்ட கணப, ஓடிப்போய் முக்காடு போட்டு ஒளிந்து கொள்கிறான்).

ஜாமண்ண: ஏய், பார்த்தியா, என் திட்டம் எப்படி இருந்தது?

சந்து: நான் எப்படி நாடகமாடினேன் பார்த்தீங்களா?

ஜாமண்ண: சூப்பரா இருந்தது. அப்படி நடிக்கலேன்னா, அந்த சனியன், உன் தம்பி தொல்லை நீங்கியிருக்குமா? இப்போ பாரு, கவலை இல்லாமல் சிரோடி சாப்பிடலாம். என்ன கொஞ்சம், தாமதமாயிடுச்சு. சரி, போய் சிரோடி கொண்டுவா. சீக்கிரம்.

சந்து: (சிரோடி, பால், சர்க்கரை என எல்லா பாத்திரங்களும் காலியாக இருப்பதைப் பார்த்து அதிர்ச்சியடைகிறாள். அவற்றை கொண்டு வருகிறாள்). நம் தலையில் கல் விழுந்துடுச்சு. சிரோடி கிரோடி எல்லாம் காலியாயிடுச்சு. ஒரு துண்டு கூட மிச்சமில்லை இங்கே.

ஜாமண்ண: ஐயய்யோ! என் கனவில் வந்ததுபோலவே ஆயிடுச்சே! பாவி. அதான் உன் தம்பி. அவனுடைய வேலையாதான் இருக்கும் இது.

சந்து: இல்லே, வீடு காலியா இருப்பதைப் பார்த்து யாராவது திருடர்கள் வந்துட்டாங்களோ என்னவோ. (உள்ளேயிருந்து ஐயோ, ஐயோ என்று முனகும் சத்தம்).

ஜாமண்ண: உள்ளே யாரோ இருக்காங்க. திருடன் சிக்கிட்டான். ராஸ்கல், வா இன்னிக்கு மாட்டினே நல்லா.

(கணப மெல்ல எழுந்து வந்து, வயிற்றைப் பிடித்தவாறு டம்மென்று கீழே விழுகிறான்).

கணப, பாவா, அஜீர்ணம் ஆயிடுச்சு. வாந்தி வர்ற மாதிரி இருக்கு. செத்துடுவேன் போலிருக்கு.

சந்து: ஐயோ. கணப. என்ன ஆச்சு உனக்கு? சிரோடி எல்லாத்தையும் நீயே தின்னுட்டியா?

கணப: ஆமா. நீங்க ரெண்டு பேரும் வீட்டை விட்டுப் போயிட்டீங்க. இதை ஏன் பிறர் வந்து எடுத்துக்கணும்னு, நானே தின்னுட்டேன். ஐயோ, வயிறு வலிக்குதே.

சந்து: என்ன சொல்றே கணப? நீ உயிர் விட்டுட்டா என் கதி என்ன?

கணப: அக்கா, கொஞ்சம் வீட்டு சமையல் இருந்தா பரிமாறு. (கணப அதையும் தின்றுவிட்டு, மறுபடி கீழே விழுந்து புரள்கிறான்).

சந்து: ஏன் கணப? இன்னும் சரியாகவில்லையா?

ஜாமண்ண: இந்தா, ஓம் வாட்டர், குடி. சரியாயிடும். (அதைக் குடித்ததும் கணபனின் பிரச்னை அதிகமானது).

ஜாமண்ண: சரிதான். இன்னும் அதிகமாயிடுச்சு போல. இந்த இஞ்சி மொரப்பா. இதையும் சாப்பிடு. (கணப அதையும் சாப்பிட்டு, மறுபடி பழையபடியே புலம்புகிறான்).

ஜாமண்ண: கணப, கடவுள் சத்தியமா வீட்டில் வேறு எதுவும் இல்லை. வேணும்னா, காற்று வீசறேன். சரியா?

கணப: சரி, கொஞ்சம் காற்று வீசுங்க (ஜாமண்ண காற்று வீசுகிறார்).

ஜாமண்ண: கணப, தொட்டில் கட்டி, அதில் உன்னை படுக்க வைத்து தாலாட்டவா? (கணப அதற்கு பதில் எதுவும் கொடுக்காமல், கண் மூடி தூங்கிப் போகிறான்).

விஷகண்டய்யா வருகை.

விஷகண்டய்யா: ஜாமண்ண, நீ இவ்ளோ பெரிய ஏமாற்றுக் காரன்னு நான் நினைக்கலை. 3.5 அணா பெருமானமுள்ள

பித்தளை வளையலைக் கொடுத்து, அதை தங்கம்னு சொல்லி ஏமாற்றி, ரூபாய் வாங்கி வந்துட்டியே? ஒழுங்கா என் பணத்தை திருப்பிக் கொடு. இல்லேன்னா நான் போலிஸில் புகார் சொல்லிடுவேன். பாத்துக்கோ.

ஜாமண்ண: வாங்க ஸ்வாமி. நான் உங்களை ஏமாற்றிட்டேன். சாப்பாட்டு ஆசை. சபல புத்தி. இத்தகைய வேலையை செய்துட்டேன். இப்போதைக்கு, என் கையில் ஒரு காசும் இல்லை. எனக்கு இருக்கும் ஒரே சொத்து, இந்த ஓட்டை வீடுதான். நாளையே இந்த வீட்டை அடமானம் வெச்சி, அந்த பணத்தை கொண்டு வந்து உங்களுக்குக் கொடுத்துடறேன். ஐயோ. இந்த பொல்லாத நாக்கு, என்னுடைய சபல புத்தி!!

***

## கஞ்சனின் கை

பாத்திரங்கள்:
ராகவேந்திரராம = குடும்பத் தலைவர்
சாரதம்ம = அவரது மனைவி
அனந்த = மகன்
தாசரு = கோபாளத்திற்கு (யாயிவார) வரும் ஹரிதாசர்
சாஸ்திரி = மகனின் பூணூல் விழாவிற்கு யாசகம் வேண்டி வருபவர்
செலுவ ஐயங்கார் = பணம் கேட்டு வித்யாபீடத்திற்கு வருபவர்
ராம மற்றும் வெங்கு = அனந்தனின் நண்பர்கள்
மற்றும் தயிர் விற்பவர் & பிச்சைக்காரன்.

காட்சி-1

ராகவேந்திரராமனின் வீடு. வீட்டு சூழ்நிலை மிகவும் கஞ்சத் தனமாக உள்ளது. அழுக்கு நாற்காலிகள், கதவின் இரு புறமும் இரு கடவுளின் அழுக்கான படங்கள். வாங்கியபோது துவைத்த சட்டைகள். கிழிந்த வேட்டி. இப்படியான காட்சிகள் காணப் படுகின்றன. வீட்டு வெளியில் இருக்கும் துளசி செடிக்கு நீர் ஊற்றியவாறு, சாரதம்மா பூஜை செய்து ‘பாக்யதா லட்சுமி

பாரம்மா' என்று பாடுகிறார். அவர் பாடிக்கொண்டிருக்கும்போதே, ராகவேந்திரராமன் வீட்டில் நுழைந்து, கையில் இருந்த ஒரு பொட்டலத்தைப் பிரித்து, அதிலிருந்த ஒரு முழம் பூவை கொஞ்சமாகப் பிய்த்து, இரு படங்களுக்கு போட்டு, அவற்றை வணங்கி, மீதமிருக்கும் பூவை அதே காகிதத்தில் சுற்றுகிறார். அப்படி அவர் செய்வதைப் பார்த்த, மகன்...

அனந்த: என்னப்பா, கடவுள் படத்திற்காகவது புதிய பூவை போடக்கூடாதா? இது 15 நாளான பழைய பூ போல இருக்கு. அதையே தினமும் போடுறீங்களே?

ராகவேந்திரராம: சரிதான். படத்தில் இருக்கும் கடவுள், தினமும் தன் மூக்கை வெளியில் எடுத்து வாசனை பார்ப்பதாக இருந்தால், நானும் புதிய பூவையே போட்டிருப்பேன். போ போ. உன் மங்களாரத்தி ஆயிடுச்சாம்மா?

சாரதம்மா: (மங்களாரத்தி தட்டுடன் நுழைந்து) கொஞ்சம் மெதுவாதான் செய்ங்களேன். கடவுள் படத்திற்கு விளக்கு ஏற்றுவதற்கும் விடுவதில்லை நீங்க.

ராக: ஆமா. காலையிலிருந்து மாலை வரை படத்திற்கு விளக்கு ஏற்றி, பிடித்துக்கொண்டே இரு. உன் விளக்கின் வெளிச்சத் தில்தான், அந்த லட்சுமி, தலைவாரி, குங்குமம் வெச்சிக்கப் போறாங்களா. (மங்களாரத்தி எடுத்துக்கொண்டு, தீபத்தை உடனடியாக ஊதி அணைக்கிறார்).

சாரதம்மா: ஐயோ ராமா. நல்லாயிருக்கு. அந்த குழந்தைக்கு கொஞ்சம் மங்களாரத்தி காட்டக்கூடாதா? அதுக்குள்ளே அதை அணைப்பதற்கு என்ன அவசரம்?

ராக: அவன் அப்பன் நான் எடுத்துக்கிட்டேனே. என் புண்ணியத் தில் அவனுக்கு பாதி வரும்தானே? சும்மா எண்ணெய் வீணாகுது. அதுக்குதான் அணைச்சேன்.

சாரதம்மா: ரொம்ப நல்லாயிருக்கு. 'கழுதையும் தேய்ந்து கட்டெறும்பு ஆனது'ன்னு இதுக்குதான் சொல்றது. (சொல்லிய வாறு உள்ளே செல்கிறார்).

ராக: (படிக்கும் மகனிடம் சென்று). அனந்தா, என்னப்பா செய்யறே?

அனந்த: பகவத்கீதை. புதிய கன்னடப் புத்தகம் வந்திருக்கு. அதை படிக்கலாம்னு வாங்கினேன்.

ராக: இந்த வயதில் படிப்பதா இதெல்லாம்? தூக்கிப் போடு அதை அந்தப்பக்கம்.

அனந்த: என்னப்பா இப்படி சொல்றே? கீதை படிப்பது தப்பா? நம் நாட்டின் பகவத்கீதையை வெளிநாட்டில் எல்லாரும் படிக்கறாங்க. அதிலும் கிருஷ்ணன் என்ன சொல்றார் தெரியுமா? 'நைனம் சிந்தந்தி ஷஸ்த்ராணி நைனம் தஹதி பாவக:' ஆத்மனை நெருப்பால் சுடமுடியாது. பாணங்களால் காயப்படுத்த முடியாது. ஆகவே, இந்த தேகம் வெறும் ஆடையைப் போல. அதுமேல இவ்வளவு மோகம் / ஆசை வேண்டாம் என்கிறார். இதைக் கேட்ட அர்ஜுனன்...

ராக: தாத்தாவை, குருகளை, அண்ணன் தம்பிகளைக் கொன்றான். இதைதானே நீங்க கீதையைப் படித்து தெரிந்து கொண்டது. இந்த துர்புத்தியையெல்லாம் வயதானபிறகு, உடலில் சக்தியெல்லாம் போனபிறகு கத்துக்கணும். அதற்காகதான், கீதையை வயசான வங்க படிக்கணும்னு சொல்வாங்க. அதனாலே, அதை அந்தப் பக்கம் வெச்சிட்டு, உன் பள்ளிக்கூட புத்தகத்தை எடுத்துப் படி.

அனந்த: (கீதை புத்தகத்துடன் வெளியேறியவாறு). இனி உன்னெதிரே படிச்சாதானே.

ராக: எழுந்து போயிட்டான். புத்திமதி சொன்னால் எழுந்து போயிடறான். படிக்கிறானாம் பகவத்கீதை. இன்று கிருஷ்ணன், தேகத்தின் மேல் மோகத்தை விடுன்றார், நாளை காசு மேல

மோகத்தை விடுன்னு சொல்வார். கஷ்டப்பட்டு சம்பாதிச்சி வெச்சதெல்லாம் தொலைச்சிடு.

(வெளியிலிருந்து தயிர் விற்பவர் வருகிறார்).

ராக: ஏய்.. தயிரு. வா இங்கே. கீழே வை. பார்க்கலாம்.

தயிர்: கீழே வைக்கிறார்.

ராக: என்னப்பா, இது தயிரா? என்ன இப்படி தண்ணியாட்டம் கேவலமா இருக்கு.

தயிர்: என்ன இப்படி சொல்லிட்டீங்க? இதைவிட தயிர் எப்படி கெட்டியாக இருக்கும்?

ராக: சரிதான். என்ன விலை?

தயிர்: ஒரு சேர் எட்டு அணா.

ராக: எட்டு அணா, இந்த சேரையும் சேர்த்தா?

தயிர்: இல்லை, இந்த பாத்திரத்தையும் சேர்த்து. உங்களுக்கு தயிர் வேணுமா வேண்டாமா சொல்லுங்க.

ராக: சும்மா கேட்டேன். 30 பைசான்னு வெச்சிக்கோ.

தயிர்: ஒரு பைசா கம்மி இல்லை சொல்லிடேன். (கிளம்புகிறார்).

ராக: வாப்பா இங்கே. இந்த தயிரை விட நீயே சூடா இருக்கியே. போடு ஒரு சேர். (உள்ளே பார்த்து) ஏய். ஒரு பாத்திரம் கொண்டு வாம்மா.

சாந்தம்ம: ஒரு பாத்திரம் வைத்துவிட்டுப் போகிறார்.

தயிர்: அளந்து போடுகிறார்.

ராக: உன் பெயர் என்னவோ?

தயிர்: என் பேரு ஹாலப்ப.

ராக: எவ்வளவு குழந்தைங்க?

தயிர்: எட்டு பெண் குழந்தைகள் சார். (தயிர் ஊற்றிவிட்டு) காசு கொடுங்க சார். நேரமாயிடுச்சு. இதை வித்துட்டு வீட்டுக்குப் போகணும்.

ராக: கொடுக்கறேன் இருப்பா. (30 பைசா கொடுக்கிறார்).

தயிர்: இது என்ன. 30 பைசா கொடுக்கிறீங்க. 8 அணா கொடுங்க.

ராக: இந்த தயிருக்கு இதுவே ஜாஸ்திதான். கிளம்பு.

தயிர்: இல்லே. பாக்கியை கொடுங்க. முதல் போணியே நீங்கதான். நீங்களே இப்படி செய்தா, நாள் முழுக்க இப்படியே நஷ்டமாயிடும்.

ராக: சும்மா காசு, காசுன்னு ஏன் கூவறியோ? ஆண் பசங்களே இல்லைன்னு சொன்னே. சம்பாதிச்ச காசை வேறு யாருக்கோ கொடுப்பதற்கு ஏன் இவ்வளவு கஷ்டப்பட்டு சம்பாதிக்கறே. அதுக்கு பதில், என் காலில் விழு. ஆண் வாரிசு ஆகட்டும்னு மனதார ஆசிர்வாதம் பண்றேன். என் ஆசிர்வாதம் கண்டிப்பா பலிக்கும்.

தயிர்: ம்ம். உங்க ஆசிர்வாதம் மட்டும்தான் பலிக்கும்னா நான் ஏன் நாகரகல்லு (பாம்பு சிலை) வழிபட்டேனோ? சரிதான் சார். காசு கொடுங்க. நான் போகணும்.

ராக: அவ்வளவுதான். போயிடு. (பாத்திரத்துடன் உள்ளே போகிறார்).

தயிர்: (தயிர் பாத்திரத்தை பிடுங்கி, தயிரை தன் பாத்திரத்தில் போடுகிறார்). எங்கே போறீங்க? சரியான கிராக்கி மாட்டிக்கிச்சு காலையிலேயே. (காலி பாத்திரத்தை வைக்கிறார்). இந்தா, உன் காசு. உன் கஞ்சத்தனத்துக்கு வேறு ஆள பாரு (என்றவாறு வெளியேறுகிறார்).

ராக: போடா போ. கஞ்சனாம் கஞ்சன். உங்கப்பா கஞ்சன். உங்க தாத்தா கஞ்சன். (பாத்திரத்தை பார்க்கிறார்). ஆஹா. திட்டு வாங்கினாலும், அதில் ஒரு பலன் இருக்கு. பாத்திரத்தில் கொஞ்சம் தயிர் ஒட்டியிருக்கு. அதையும் நான் பயன்படுத்திக்கலாம். (தன்னைத்தானே புகழ்கிறார்). அடேய். உன் புத்தியே புத்தி, ஷாரி.. ஷாரீ... (மனைவியை கூப்பிடுகிறார்).

சாரதம்ம: (உள்ளேயிருந்து வந்து) நீங்க ஒவ்வொருமுறையும் ஷாரின்னு கூப்பிடும்போது நான் வந்து பார்த்தால், என் வேலை எப்போ முடிவது? என்ன சொல்லணுமோ, காலையில் எழுந்தவுடனே சொல்லிடுங்க. அப்பப்போ கூப்பிட்டுக்கிட்டே இருந்தா, என்னால் வரமுடியாது.

ராக: நான் இருப்பது கூப்பிடுவதற்குதான். நீ இருப்பது வருவதற்குதான்.

சாரதம்ம: வேறு எதில் தாராளம் இருக்கோ இல்லையோ, கூப்பிடுவதில் தாராளத்துக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லை. இப்போ என்ன ஆச்சு?

ராக: வேற என்ன ஆகணும்? சாப்பாட்டு நேரமாயிடுச்சு. இன்னும் சமையல் ஆகலியா?

சாரதம்ம: சாப்பாடு சாப்பாடுன்னா நான் என்ன பண்றது? விலை குறைவுன்னு நீங்க வாங்கி வர்ற விறகு எங்கே எரியுது? ஊதி ஊதி என் தொண்டை வலிக்குது. என்னங்க, என்னங்கன்னு நீங்க கூப்பிடறதுக்கு பதில் சொல்லி என் வாய் வலிக்குது. உங்களை கட்டிண்டு போதும் போதும்னு ஆகுது எனக்கு.

ராக: என்னடி நீ சொல்லிட்டே போறே. ஊர் முழுக்க எல்லாருக்கும் நல்லா எரியும் விறகு, உனக்கு மட்டும் எரிய மாட்டேங்குதா? நீ மட்டும்தான் இப்படி புலம்பறே.

சாரதம்ம: என்னைத் தவிர வேறு யாரையும், இந்த விறகில் சமையல் செய்து போடுன்னா, அதையே அடுக்கி, மண்ணெண்ணெய் ஊற்றி, நெருப்பை பற்ற வைத்து, ஹாயாக

அதுமேலேயே படுத்துடுவாங்க. சரி. இன்னும் ஒரு மணி நேரம் ஆகும் சமையலுக்கு. உட்காருங்க. முடிஞ்சதும் கூப்பிடறேன்.

ராக: பேச்சுக்கு எதிர்பேச்சு பேச நல்லா கத்துக்கிட்டிருக்கே. எனக்கு பசிக்குதுன்னு சொல்லி உன்னை கூப்பிடலே. பாவம் நம்ம பையன் பசியோட காலேஜுக்கு போக வேண்டிருக்கேன்னு சொல்வதற்கு கூப்பிட்டேன் அவ்வளவுதான். சரி. சமையலில் என்ன இன்னிக்கு?

சாரதம்ம: வேறென்ன. 3-4 பொரியல். ஆரேழு அப்பளம். சண்டிகேன்னு விதவிதமா சமைக்க கொண்டு வந்து போட்டிருக்கீங்களா? கொஞ்சமா பருப்பு போட்டு, நீரை கொதிக்க வைத்து, பொரியல், சட்னின்னு செய்துக்கிட்டிருக்கேன். அவ்வளவுதான்.

ராக: பருப்பு போட்டு ரசம். காய், சட்னி செய்றியா? தினமும் இதே ரசத்தை செய். வீடு சந்தோஷமாயிருக்கும். இங்கே பார். விறகும் சரியா எரியமாட்டேங்குதுன்னு சொல்றே. சும்மா ஏன் உடம்பை கெடுத்துக்கறே. வெந்தயம் போட்டு கொஜ்ஜு செய். சூடு அடங்கும். (தயிர் பாத்திரத்தைக் கொடுத்தவாறு). இந்தா, இது முழுக்க தண்ணீர் போட்டு, கலக்கி வை. இன்னிக்கும், நாளைக்கு, மோருக்கு ஆகும்.

சாரதம்ம: தினமும் வெந்தய கொஜ்ஜு, கொட்டு ரசம் இப்படியே செய்தா, நாக்கு செத்துடும். வாரத்துக்கு ஒரு தடவையாவது நாலு பருப்பு போட்டு ஏதாவது செய்யலேன்னா, இதை ஒரு சம்சாரம்னு யாராவது சொல்வாங்களா?

ராக: வேக வை. வேக வை. வெறும் பருப்பை மட்டும் ஏன். இந்த சம்சாரத்தையே வேக வை. உனக்கு மட்டும்தான் நாக்கு இருக்கா? எனக்கும் இருக்கும்மா. அதுக்கும் ருசி தெரியும். நனைந்த விறகு கொண்டு வந்ததுக்கே, இப்படிப்பட்ட சமையல் செய்யறே. இதே நல்ல காய்ந்த விறகு கொண்டு வந்தா, அதையே நல்லா அடுக்கு, அதில் பெட்ரோல் ஊற்றி, BTS பஸ்ஸை எரித்தது போல எரிச்சிடுவியோ என்னமோ. சும்மா வந்துட்டா.

சாரதம்ம: அந்த ரசம், சட்னி செய்யறதும் போதும். உங்ககிட்டே வாங்கி கட்டிக்கறதும் போதும். கொஞ்சம் சாதம் செய்யறேன். அதுக்கு கொஞ்சம் உப்பு, தண்ணீர் கலந்துண்டு சாப்பிடுங்க.

ராக: செய் செய். அப்படியே செய். காசு சம்பாதிச்சு கொண்டு வந்து கொடுக்கிறவங்களுக்குதான் தெரியும் அதோட மதிப்பு. சும்மா சமையல் செய்து சாப்பிடுபவர்களுக்கு என்ன தெரியும்?

அனந்த: (உள்ளேயிருந்து வந்து) இல்லேப்பா. வாரத்துக்கு ஒரு நாளாவது, ஞாயிற்றுக்கிழமையாவது, நல்லபடியா, கொஞ்சம் சாதம், பருப்பு ரசம், சட்னிக்கு சாப்பிடக்கூடாதா?

சாரதம்ம: ஐயோ சும்மாயிரு. ரசம் அதுவும் பருப்பு ரசம்னா சும்மாவா?

ராக: ஏன்? அவன் கேட்கறதை செய்து போட்டால்தானே, நல்லா சாப்பிட்டு, அவனும் நல்லா பலசாலியா வளர்ந்து, நாலு காசு சம்பாதிப்பான். வரதட்சணை கிடைக்கும். ஸ்ரீபாதராயர் வீட்டில் தேங்காய் வைத்து வெற்றிலை பாக்கு கொடுத்தாங்களே, அந்த தேங்காயை உடைத்து, ஒரு மூடியை அரைத்து, உப்பு போட்டு சுவையான சட்னி செய்து கொடு. பாவம் சின்னப்பையன் சாப்பிடட்டும்.

சாரதம்ம: ஆஹாஹா. இந்த பேச்சை கர்ணன் கேட்டால், காதை மூடிட்டு ஓடிடுவான் (உள்ளே போகிறார்).

அனந்த: அப்பா, கால்பந்து மேட்ச் பார்க்கப் போகணும். 8 அணா கொடு.

ராக: சரியாப் போச்சு. அதெல்லாம் நல்லா மென்னு தின்னு இருப்பவர்கள் ஓடி விளையாடும் விளையாட்டு. உனக்கு சரிப்படாது. நீ நல்லா படிச்சி புத்திசாலியாகு. போ போ. போய் படி.

அனந்த: என்னப்பா, காலேஜுக்கு சேரும்போது, என் சட்டை பழசாயிடுச்சு வேற வாங்கிக்குடுன்னு சொன்னேன். அடுத்த

பரிட்சையும் வந்துடுச்சு. நீ இன்னும் வாங்கிக் கொடுத்த பாடில்லை.

ராக: பரிட்சைக்கும் ஆடைக்கும் என்னப்பா சம்பந்தம்? நான் படிக்கும்போது, பரிட்சைக்குப் போகும்போது இருப்பதிலேயே பழைய ஆடையா போட்டுட்டுப் போவேன். என்னைப் பார்ப்பவர்கள், பாவம் ஏழை போலிருக்குன்னு பரிதாபப்பட்டு, என்னை பாஸ் பண்ணிடுவாங்க. (அனந்த முணுமுணுத்தவாறு உள்ளே போகிறான்).

(தாசர், பாடியவாறு வருகிறார்)

நாயியா மொலெ ஹாலு நால்கு மொகெயித்தரு
நரஹரிய நைவேத்யவல்லவய்யா

ராக: வாங்க வாங்க தாசராயரே. அதென்னவோ சொன்னீங்களே.. மறுபடி சொல்லுங்க.

தாசர்: மறுபடி நாயியா... சொல்கிறார்.

ராக: ஆமாம் ஸ்வாமி. நாயின் பால் நேரடியாக ஸ்ரீஹரிக்குப் போகலேன்னாலும், அந்த நாயின் குட்டிகளுக்குப் போகுதே. அந்த குட்டியின் ஆத்மாவும் ஹரிதானே. இப்படி அர்த்தமேயில்லாத தத்வங்களை சொல்வதைவிட, எங்காவது நடைபாதை மேலே, ஜோசியம் பார்த்தவாறு உட்கார்வது நல்லதுதானே?

தாசர்: ஆமாம் ஸ்வாமி. நீங்கள் சொல்வது கண்டிப்பாக நிஜம். எல்லா ஆத்மாவிலும் இருப்பது ஸ்ரீஹரியே. அதுக்காக நாய் தின்பதையெல்லாம் நீங்க தின்பது சாத்தியமா?

ராக: ஏன் சும்மா நாய் நாய்ன்னு சொல்லிட்டிருக்கீங்க? நாராயணன் நாய் ரூபத்தில்தானே கனகதாசருக்கு தரிசனம் கொடுத்தான். யமன், நாய் ரூபத்தில்தானே தர்மராஜரை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துப் போனது. சரி விடுங்க. வயசானவர். உங்ககிட்டே எதுக்கு சண்டை? எந்த ஊரு உங்களது?

தாசர்: என் ஊர் தாராளநகரம். கொடுகை கோதண்டராம என் பேரு.

ராக: பாவம் உட்காருங்க. எங்கே இவ்வளவு தூரம்?

தாசர்: எவ்வளவு தூரம் ஆனால் என்ன, ஹரி நாம சங்கீர்த்தனை செய்தவாறு வாழ்க்கையை நடத்தறேன். எவ்வளவு தூரம் ஆனாலும் வருவேன் ஸ்வாமி. உங்களைப் போன்றவர்களின் கருணையே எனக்கு ஆதாரம்.

ராக: ஆதாரமும் இல்லை. ஒண்ணுமில்லை. உங்களிடம் இன்னொரு விஷயம் கேட்கணுமே?

தாசர்: கேளுங்க ஸ்வாமி. நல்லா கேளுங்க. லௌகிக விஷயமா? ஆன்மிக விஷயமா?

ராக: சரியாப் போச்சு. ஆன்மிக விஷயத்தை உங்களிடம் கேட்கும் அளவுக்கு நான் என்ன முட்டாளா? நான் லௌகிகன் தான். உங்க பையில் சுமார் 8-10 கிலோ அரிசி இருக்கும்தானே? கடுமையான ரேஷன் இருக்கும் இந்தக் காலத்தில் நீங்க ஒரு நாளைக்கு 10 கிலோ அரிசி சம்பாதிப்பதை அரசு பார்த்ததுன்னா, சும்மா இருக்குமா?

தாசர்: எப்போதும் ஹரிஹரின்னு சொல்லிட்டிருப்பவனிடம், எந்த அரசு எந்த சட்டம் வரும் ஸ்வாமி? என்னிடம் அவங்களுக்கு என்ன கிடைக்கும்?

ராக: ஆஹா. சரிதான். தினமும் 10 கிலோ அரிசி சம்பாதிச்சாலும், நீங்க ஏழைதான். நானும் அதையேதான் யோசிக்கிறேன். எப்படியும் வயசாயிடுச்சு. ஹாய்னு ஒரு பையை மாட்டிக்கிட்டு புறப்பட்டா, ஸ்வாமி-கார்யம், ஸ்வ-கார்யம் இரண்டுக்கும் பயன்படும்.

தாசர்: நீங்க இப்படியெல்லாம் பேசக்கூடாது. உடல், பொருள் அனைத்தையும் மறந்து புனிதரான புரந்தரதாசர், கனகதாசர்,

விஜயதாசர் ஆகியோர் வழியையே பின்பற்றி வாழும் தாச மஹனீயர்களை இப்படி தரம் தாழ்த்தி பேசாதீங்க ஸ்வாமி.

ராக: அவர்கள் எல்லாம் தியாகம் செய்து நிஜமான தாசர் ஆயினர். நீங்கல்லாம் பொருள் வைத்துக்கொண்டே தாச வேஷம் போட்டு மேலும் சம்பாதிக்கத் துவங்கிட்டீங்க.

தாசர்: நீங்க தப்பா புரிஞ்சிட்டிருக்கீங்க. பரமாத்மனின் ஸ்மரணை மட்டுமே பெரியதுன்னு நம்பியிருப்பவர்கள் நாங்க. நீங்க கொடுக்கும் ஒரு கைப்பிடி அரிசி பெரிசு இல்லை ஸ்வாமி.

ராக: தப்பா நினைக்காதீங்க. ஒரு ஆளுக்கு ஒரு மாதத்துக்கு 7 கிலோ அரிசிதான் கொடுக்குது அரசாங்கம். அப்படி பார்த்தா, ஒரு நாளைக்கு 1/5 கிலோதான் வருது. அதையும் உங்களுக்குக் கொடுத்து நான் வயிற்றுக்கு ஈரத்துணி கட்ட்ட்டு தூங்கவா? உங்களுக்கு என்ன? உணவுத்துறை அமைச்சரைவிட திடமா, வலிமையாதான் இருக்கிறீர். பகலெல்லாம் இப்படி சுத்துங்க. ராத்திரியில் சம்சார ஆசை மற்றும் ஹரிநாம சங்கீர்த்தனை செய்ங்க. ராத்திரி ஜாகரணை செய்ங்க. அரசு சொன்னதை கேட்டதாகவும் ஆச்சு. புண்ணியம் சம்பாதிச்சது போலவும் ஆச்சு. அதைவிட்டு என்னை ஏன் தொந்தரவு செய்றீங்க ஸ்வாமி.

தாசர்: 'இக்கலாரத கை எஞ்சிலு' என்று தாசர் சும்மா பாடவில்லை ஸ்வாமி. இந்த புண்ணியம் உங்க அடுத்த பிறவிக்கு நீங்க சேர்த்து வைக்கும் சொத்து. இதை ஞாபகம் வெச்சிக்கோங்க போதும்.

லோபியா பளி பரியு கூபியா பளி கரியு
நாஸ்திகன நாலிகெயு ஒந்தே
(பாடிக்கொண்டே போகிறார்).

ராக: போங்க ஸ்வாமி போங்க. இவனுக்கு தினமும் அரிசி தானம் கொடுத்துக்கிடே இருந்தா, நான் என்ன பண்றது? அடுத்த பிறவிக்கு கொண்டு போகும் மூட்டையாம். என்னிடம் பணம் இல்லைன்னா, நீ கேட்பதற்கு வருவியா, நானே புரந்தரதாசர் ஆகிவிட்டால், நீ ஏன் இங்கே வரப்போறே. ரெண்டு தேவர

நாமாவை மனப்பாடம் செய்து, ஏதோ ஒரு ஸ்ருதியில் பாடுறவங்கல்லாம் தாசரா? பிக்ஷை கேட்கும் முட்டாள்.

சாஸ்திரி: (வருகிறார்). என் விலாசம் உங்களுக்கு எப்படி தெரியும் ஸ்வாமி?

ராக: (அதே கோபத்துடன்) என்ன விலாசம் அது?

சாஸ்திரி: அதே. முட்டாள்னு சொன்னீங்களே?

ராக: ஆஹா. அது உங்களுக்கு இல்லை. வாங்க வாங்க. யாரோ பிக்ஷை கேட்டு வந்திருந்தான். அவனை திட்டிக்கிட்டிருந்தேன். இந்த காலத்து பிக்ஷுகர்கள் நம்மை நல்லா ஏமாத்தறாங்க. இப்படியே கொஞ்ச நாள் போச்சுன்னா, கழுத்துச் சட்டையை பிடித்து பிக்ஷை கேட்பாங்களோ என்னவோ. ஐயோ, நின்னுக்கிட்டே இருக்கீங்களே. உட்காருங்க. (இருக்கும் ஒரே நாற்காலியில் தான் அமர்ந்துவிடுகிறார்).

சாஸ்திரி: (வேறு நாற்காலி இல்லாததை கவனிக்கிறார்). அமரும் பழக்கம் எனக்கு இல்லை. கொடுத்தால், எடுத்துப் போகும் பழக்கம் மட்டும்தான் இருக்கு.

ராக: புரியல. நான் ஏதுவும் உங்களுக்கு பாக்கி கொடுக்க வேண்டுமா? அப்படி ஏதும் நினைவில் இல்லையே?

சாஸ்திரி: இல்லை. எனக்கு ஒரே பையன்.

ராக: இன்னொரு பையனைக் கொடுக்கச் சொல்றீங்களா? எனக்கும் இருப்பது ஒரே ஒரு மகன்தான்.

சாஸ்திரி: அதில்லை. என் மனைவி செத்து பல ஆண்டுகள் ஆயிடுச்சு.

ராக: அப்போ மனைவியையே கொடுக்கச் சொல்றீங்களா? அது முடியாது. எனக்கு இருப்பதே ஒரே ஒரு மனைவிதான்.

சாஸ்திரி: சரியாப் போச்சு. இருங்க சொல்றேன் (திக்கித் திக்கி பேசுகிறார்).

ராக: நீங்க இந்த மாசம் சொல்ல ஆரம்பிச்சா, அடுத்த மாசம்தான் முடிப்பீங்க. இருங்க, ஒரு காகிதம் கொடுக்கறேன். சொல்ல வந்ததை எழுதுங்க. உங்க பேனாவின் நாக்கே மேல்.

சாஸ்திரி: எழுதணுமா? எனக்கு எழுத வராது. வாயிலேயே சொல்லிடறேன்.

ராக: சொல்ல வந்ததை சீக்கிரம் சொல்லுங்க.

சாஸ்திரி: சொல்றேன். உங்களைத்தான் பார்க்கணும்னு வந்தேன்.

ராக: அதான் பார்த்துட்டீங்களே. அடுத்தது சொல்லுங்க.

சாஸ்திரி: என் மகன்... பாவம். தாயில்லா குழந்தை. அவனுக்கு பூணல் போடலாம்னு இருக்கேன்.

ராக: என்னையும் என் மனைவியையும் மணை மேல் உட்காரச் சொல்றீங்களா? அப்படினா வர்றேன். இரு வேளையும் அங்கேயே சாப்பிடறோம்.

சாஸ்திரி: அதில்லை. நான் தாலுகா ஆபீஸில் குமாஸ்தா. சம்பளம் வெகு குறைவு. கையில் காசு இல்லை. ஆகவே, ஏதாவது தர்மம் பண்ணுங்கன்னு..

ராக: கேட்க வந்தீங்களா? சரிதான். இப்படி வீட்டுக்கு வீடு பிக்ஷை கேட்பதற்கு பதில், ஏதாவது ஒரு மடத்திற்கோ, தேவஸ்தானத்திற்கோ போய் சொல்லுங்க. தர்ம-முஞ்சி (பூணல் விழா) செய்திடுவாங்க.

சாஸ்திரி: செய்திருக்கலாம்தான். எங்க அப்பா செத்து 4 வருஷமாயிடுச்சு. என் மனைவி செத்து 3 வருஷமாயிடுச்சு. வீட்டில் வரிசையா கெட்ட நிகழ்ச்சிகள். அதற்காக, வீட்டில் முதல்முறையா ஒரு மங்கல நிகழ்ச்சியை, சொந்த செலவிலேயே செய்யலாம்னு நினைச்சேன்.

ராக: என் காசை வாங்கி நீங்க செலவு செய்து, பூணல் விழா செய்தால், அது உங்க சொந்த செலவு ஆகுமா சொல்லுங்க?

சாஸ்திரி: இல்லை. என் மனைவியின் கடைசி ஆசை அதுதான். மகனுக்கு மணை மேல் அமர்ந்து பூணல் விழா செய்ங்கன்னு சொல்லிட்டு செத்துப் போனாள்.

ராக: சரியாப் போச்சு. அவ ஏதோ சொல்லிட்டு செத்துப் போனது எனக்கு இப்போ பிரச்னையா போயிடுச்சு. நீங்க கிளம்புங்க.

சாஸ்திரி: ஏதாவது கொடுங்க (கை நீட்டுகிறார்).

ராக: (அவரைப் போலவே திக்கிப் பேசி, கேலி செய்கிறார்). எதுவும் கொடுக்கும் பழக்கம் எனக்கு இல்லை (உள்ளே போகிறார்).

சாஸ்திரி: அப்படி சொல்லக்கூடாது ஸ்வாமி.

ராக: ஸ்வாமி கோயிலில் இருக்கிறான். அங்கேயே போங்க.

சாஸ்திரி: ஒரு கஞ்சனிடம் வந்து கேட்டேனே. நான் ஒரு முட்டாள் (போகிறார்).

ராக: போடா டேய். தர்மம் கேட்பதற்கு வந்துட்டான். என்கிட்டே பணம் இருக்குதுன்னு இவங்களுக்கெல்லாம் எப்படிதான் தெரியுதோ?. என் வீட்டையே தேடிகிட்டு வந்துடறாங்க. பங்காளிங்க மாதிரி விதவிதமா வந்துடறாங்க.

('அம்மா மூன்று நாளா சாப்பிடவில்லை. ஒரு கை சாதம் இருந்தா போடுங்க'ன்னு வெளியிலிருந்து குரல் கேட்கிறது).

ராக: நீ வந்தியாப்பா. மூணு நாளா சாப்பிடலியா? இன்னும் ஆறு நாள் அப்படியே இரு. பிறகு பிச்சை பிரச்னையே இல்லை. முனிசிபாலிடிகாரங்க கொண்டு போய் செய்ய வேண்டியதை செய்திடுவாங்க.

(அம்மா ஏதாவது போடுங்கம்மான்னு குரல்)

ராக: போப்பா போ. அடுத்த வீட்டுக்குப் போ.

பிச்சை: இதுதான் ஸ்வாமி இந்த தெருவில் கடைசி வீடு.

ராக: அப்படின்னா வந்த வழியே திரும்பிப் போ.

அனந்த: (உள்ளேயிருந்து கதவு வரை சென்று பார்த்து) அம்மா, அம்மா. யாரோ பிச்சைக்காரன் வந்திருக்கான். ஏதாவது இருந்தா வந்து போடும்மா. எடுத்துப் போகட்டும்.

ராக: எடுத்துப் போவதற்கே அவன் வந்திருக்கான். இந்த மாதிரி விஷயங்களில் மூக்கை நுழைக்காதேன்னு உனக்கு எவ்வளவு தடவை சொல்றது? எவ்வளவு கிடைக்காலும் விடமாட்டாங்க. நீ உன் வேலையை பார்த்துட்டுப் போ.

அனந்த: அது இல்லைப்பா. அவன் குரலைக் கேட்டாலே பாவமா இருக்கு.

ராக: இருக்கும் இருக்கும். இன்னும் பிறந்து 3 அமாவாசைகூட பார்க்கலை. அதுக்குள் எனக்கு சொல்ல வந்துட்டான்.

சாரதம்ம: ஐயோ சும்மா இருங்க. எப்போ பார்த்தாலும் குழந்தையை திட்டிக்கிட்டு. ஒரே ஒரு கைப்பிடி சாப்பாடு போட்டா என்ன ஆகிடப்போகுது.

ராக: இதுக்குதான் உனக்கு அனுபவம் போறாதுன்னு சொல்றது. இன்னிக்கு சாதத்தை போட்டா, சும்மா எடுத்துக்கிட்டு போவானா அவன்? தினமும் சரியா இதே வேளைக்கு வந்து கதவைத் தட்டுவான். (வெளியில் பார்த்து) ஏய், இங்கே வந்து ஏம்பா கத்தறே, இன்னிக்கு ஒரு கவளம் சோறுகூட மீதமில்லை. பாத்திரம் எல்லாம் நல்லா துலக்கி வெச்சாச்சு. இனி அவை எல்லாம் எழுந்து உட்காருவது நாளை காலை சமையலுக்கு தான். நம் வீட்டில் ஒரு நாள்கூட சாதம் மீந்து போவதே யில்லை. மீந்து போவதுபோல நாங்கள் நிறைய சமைப்பதும் இல்லை. பக்கத்து தெருவில் பணக்காரங்க வீடு இருக்கு. அங்கே போ. இது இரும்பு அடிக்கிற கடை. இங்கே உன்னைப் போன்ற

ஈக்கு எதுவும் வேலை இல்லை. (சாரதம்மாவிடம் திரும்பி) இவ்வளவு சொன்னா போயிடப் போறான். அதைவிட்டு ஏனோ புலம்பறே. வரும் பாவமெல்லாம் இன்றைக்கே வந்துடட்டும். விடு.

பிச்சை: (பாடுகிறான்)
இட்டவனு தாஜாண கொட்டவனு கடுமூர்க்க
கொட்டு நாகெட்டெ எனபேடா
ஹூதிட்ட தனதான்ய மண்ணாகி ஹோதாக
நினகேனு உளிதிதோ அண்ணா (வைராக்கியப் பாடல்)

அனந்த: கேட்டியாப்பா அவன் பாடின பாட்டை.

ராக: ம்ம். கேட்டேன் கேட்டேன். அவன் எல்லாம் தெரிஞ்சவன் சொல்லிட்டான். இவன் அதை கேட்டுட்டான். (உள்ளே பார்த்த வாறு) ஏய். சமையல் ஆயிடுச்சா? (செலுவ ஐயங்கார் வருகை)

செலுவ: ராயரே.. ராயரே..

அனந்த: யாரது?

செலுவ: ராயர் இருக்காரா வீட்டில்?

அனந்த: உள்ளே இருக்காரு. நீங்க?

செலுவ: சென்னராய பட்டணத்து செலுவ ஐயங்கார் என் பெயர். ராயரின் மகனா நீ?

அனந்த; ஆமா. நான் அனந்த. B.Sc இறுதி ஆண்டு படிக்கிறேன். 22 வயசு. இன்னும் திருமணம் ஆகவில்லை. கொடகள்ளியிலிருந்து ஒரு சம்பந்தம் வந்திருக்கு. ஆனா, பெண்ணின் வீட்டிலிருந்து இன்னும் பதில் வரவில்லை. அதனால் திருமணம் இன்னும் லேட்டாயிட்டே இருக்கு. நீங்க ஏதாவது பெண்ணின் ஜாதகம் கொண்டு வந்திருக்கீங்கன்னா, தயவு செய்து வெளியே போயிடுங்க.

செலுவ: அடேடேடே. இதென்னப்பா இவ்வளவு விஷயங்களை ஒரே மூச்சில் சொல்லி முடிச்சிட்டே. என்னை திருமண ஏஜெண்ட்னு நினைச்சிட்டியா. நான் உங்கப்பாவின் நண்பன்.

அனந்த: மன்னிச்சிடுங்க. எனக்கு தெரியல. உங்க கையில் இருக்கும் பையைப் பார்த்து ஏஜெண்ட்னு நினைச்சேன். இருங்க, அப்பாவை கூப்பிடறேன். அப்பா. அப்பா...

(உள்ளேயிருந்தே 'என்னடா அது' என்று குரல் வருகிறது)

அனந்த: உங்க நண்பராம் யாரோ வந்திருக்கார். பாருப்பா.

ராக: (உள்ளேயிருந்து தலையை மட்டும் வெளிக்காட்டி) சாப்பிட்டு வந்திருக்காரா அவரு?

அனந்த: யாருக்கு தெரியும். நான் கேட்கவில்லை (உள்ளே போகிறான்)

ராக: அதைத்தானே முதலில் கேட்கணும்? சரி. முகத்தைப் பார்த்தலாவது தெரியுமே? (என்றவாறு வருகிறார்). யாரு? ஓஹோஹோ. செலுவ ஐயங்கார். என்ன இது இந்த நேரத்தில்?

செலுவ: நான்...

ராக: ரொம்ப அவசரத்தில் இருக்கீங்கன்னு தெரியுது. எனக்கு நல்லா தெரியும். எங்களைப் போன்ற ஏழைகளின் வீட்டுக்கு அடிக்கடி எங்கே வரீங்க? அதுவும் எங்களுக்கு தொந்தரவு கொடுக்கக்கூடாதுன்னு, வரும்போதே சாப்பிட்டு வர்றீங்க, சரி. வந்தது வந்துட்டீங்க. ரெண்டு நிமிஷம் நின்று பேசிட்டுப் போங்க, ஐயங்காரரே.

செலுவ: அது என்ன அப்படி சொல்லிட்டீங்க. நின்னுக்கிட்டு எதுக்கு, உட்கார்ந்துகிட்டே பேசுவோம். படுத்துக்கிட்டு பேசினாலும், பேசுவதற்கு அவ்வளவு விஷயம் இருக்கு. நீங்க நலம்தானே?

ராக: இன்னிக்கு காலைவரை நலம்தான். இப்போ நீங்க வந்தீங்க. தலைவலியும் வந்துடுச்சு. நீங்கதான் கொண்டு வந்தீங்களா அதுவே வந்துடுச்சான்னு தெரியல. என்னை தப்பா நினைக்காதீங்க. நான் என் நண்பர்களுடன் உட்கார்ந்து பேசுவதைக் கண்டால், என் மகனுக்கு பிடிக்காது. வாங்க, உங்க ஹோட்டலுக்கே போகலாம். உங்க அறையில் உட்கார்ந்து ஹாயாக பேசலாம்.

செலுவ: ஐயோ. என் விஷயம் உங்களுக்கு தெரியாதா? நான் ஹோட்டல் கீட்டல்னு பணத்தை வீணடிப்பவனில்லை. இதே ஊரிலேயே நீங்க இருப்பதால், பிரச்னையில்லை. உங்க வீட்டிலேயே பேசலாம். அவசர விஷயமும் இல்லை. இப்போ நான் யாருன்னு உங்க மகனுக்கு தெரிஞ்சிடுச்சு. அவனும் எதுவும் தப்பா நினைச்சிக்க மாட்டான். பேசலாம் இல்லையா?

ராக: சரி. பேசலாம். என்ன விஷயம்?

செலுவ: மிகப்பெரிய விஷயம் எதுவுமில்லை. உங்களைப் பார்த்து ரொம்ப நாளாயிடுச்சு. நீங்க முன்னாடி எப்படி இருந்தீங்களோ, அப்படியே இருக்கீங்களேப்பா? கொஞ்சம்கூட மாறவேயில்லை.

ராக: சும்மா இந்த ஆடம்பரப் பேச்செல்லாம் வேண்டாம் விடுங்க. இஹத்தில் செலவு செய்தால், பரத்திற்கு அது நாம் கொண்டு போகும் பாவமூட்டை அவ்வளவுதான்.

செலுவ: இதைத்தான் ‘நிறைகுடம்’னு சொல்வாங்க. உங்களைப் போன்றவர்களால்தான் பிராமண சமூகம் மேம்படணும்.

ராக: ஐயோ. அதை மேம்படுத்தவோ பாழ்படுத்தவோ நான் யார்? நீங்க பெங்களூரிலிருந்து எப்போ வந்தீங்க?

செலுவ: 11.30 மணி பஸ்ஸில் வந்தேன். சாப்பாடு சாப்பிட்டு வருவதற்கு இவ்வளவு நேரமாயிடுச்சு.

ராக: சாப்பிட சொல்லமாட்டேன். ஹிஹி. கூச்சப்படாதீங்க.

செலுவ: சரியாப் போச்சு. உங்க வீட்டில் சாப்பிட கூச்சப்பட என்ன இருக்கு?

ராக: அப்படின்னா, நிஜமாவே சாப்பாடு ஆயிடுச்சா? ஆஹா. சாதத்துக்கு வெச்சிட்டாளோ என்னவோ. பழைய நண்பர் வந்திரு க்காருன்னு அவ பாட்டுக்கு அதிக அரிசி போட்டுடப் போறா.. ஷாரீ. ஷாரீ.. இன்னும் சமையல் செய்திடாதே. சார் சாப்பிட்டு வந்துட்டாராம். வெயிலில் நடந்து வந்திருக்காரு. ஒரு (ரொம்ப சின்னதாக கை காட்டி), சின்ன சொம்பில் நீர் நிரப்பி அனுப்பு. அதென்னவோ பாருங்க. முதலிலிருந்தே எனக்கு இந்த கண்ணராவி காபி கீபின்னாலே ஆவதில்லை. குடித்தவுடனேயே வாந்தி வந்துடுது. அதுக்காக என் மனைவி வீட்டில் காபி செய்வதேயில்லை. உங்களுக்கு நேரமாயிடுச்சோ என்னவோ..

செலுவ: அப்படி ஒண்ணுமில்லை. இப்போ நான் வந்திருக்கேன்னு உங்களுக்கு தெரிஞ்சிருக்கும்.

ராக: ஐயோ. எனக்கு தெரியாதே. பழைய நண்பராச்சேன்னு பார்த்துட்டு போக வந்திருப்பீங்க. அதானே?

செலுவ: அதுவும் சரிதான். அதனுடன் இன்னொரு வேலையும் இருந்ததால், இவ்வளவு தூரம் வரவேண்டியதாப் போச்சு பாருங்க.

ராக: என்னிடம் பேசும் அளவுக்கு அவ்வளவு பெரிய விஷயம் இருக்கா, அது என்ன?

செலுவ: நான் சுத்திப் பேச விரும்பலை. நேரடியாவே விஷயத்துக்கு வர்றேன். மண்ணிலிருந்து எண்ணெய் எடுப்பது கஷ்டம்.

ராக: நானும் கொஞ்சம் மண் மாதிரிதான்னு ஊரில் பேசிக்கறாங்க.

செலுவ: அப்படி சொல்லாதீங்க ஸ்வாமி. நீங்க மண் இல்லை. ஆமணக்கு. ஆமணக்கிலிருந்து எண்ணெய் எடுப்பது கஷ்டமா என்ன?

ராக: அதுவும் சரிதான். ஆனா அதிலிருந்தும் எண்ணெய் வராது. முந்தாநாள் ஒரு விஷயம் நடந்தது பாருங்க. மின்சார கட்டணம் கட்டலைன்னு ஃபூஸ் பிடுங்கிட்டு போயிட்டாங்க. அதிலிருந்து மினுக்மினுக்னு வரும் தெரு விளக்கு ஒளியே நமக்கு கதியாயிடுச்சு. அவ்வளவு ஏழையானவங்க நாங்க. அப்படி இருக்கும்போது... (அனந்த தண்ணீர் கொண்டு வருகிறான். கடகடவென்று அதை வாங்கி குடிக்கிறார்).

செலுவ: விஷயம் வேறு ஒண்ணும் இல்லை. பிராமணியமே கெட்டுப் போயிருக்கும் இந்த காலத்தில், அதை நாம்தான் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில், மூன்று மதத்து சங்கம் ஒன்று துவக்க இருக்கிறோம். முதலில் ஒரு வித்யாபீடத்தை கட்டணும்னு இருக்கோம்.

ராக: ரொம்ப நல்லது. செய்ங்க. செய்ங்க. உங்களைப் போன்றவங்க செய்யாமல் இதை வேறு யார் செய்வாங்க. கண்டிப்பா செய்யணும்.

செலுவ. ஆமாம் ஸ்வாமி. ராகவேந்திர ஸ்வாமிகளின் பெயரை வைத்திருக்கும் உங்களிடம் அவரது கருணை உள்ளமும் நிறைந்திருக்கும் என்று நினைத்தே இங்கே வந்திருக்கிறேன்.

ராக: ஐயோ. பெயரில் என்ன இருக்கு. விடுங்க. நீங்க செலுவ ஐயங்கார்னு பெயர் வெச்சிருக்கீங்க. அந்த பெயர் போல உங்க முகம் அழகா இருக்கா என்ன?. உங்க முயற்சிக்கு என்னுடைய முழு ஆதரவு உண்டு. இந்த வித்யாபீடத்திற்கு கட்டணம் அப்படின்னு எதுவும் இல்லைதானே?

செலுவ: கண்டிப்பா இலவசம்தான். டிகிரி பாடத்தையும்கூட இலவசமா கத்துக் கொடுக்கணும்னுதான் எங்க நோக்கம்.

ராக: அப்புறம் என்ன? கண்டிப்பா அதுக்கு என் ஆதரவு உண்டு.

செலுவ: (டைரியை எடுத்து வைத்துக்கொண்டு) எவ்வளவு எழுதட்டும் சொல்லுங்க?

ராக: என்ன? என் பையன் பேரு அனந்த. இப்பவே பேர் எழுதிக் கறீங்களா என்ன? சரி. நீங்க எதுக்கும் யோசனை செய்யாதீங்க. என் பையனை உங்க வித்யாபீடத்துக்கே படிக்க அனுப்பறேன். அவனுக்கு இலவசமா கல்வி கொடுத்து, டபுள் டிகிரியும் கொடுத்து, ஒரு நல்ல குடிமகனா மாற்றி திருப்பி அனுப்புங்க. புண்ணியமா போகும்.

செலுவ: புண்ணியமெல்லாம் அப்புறம். முதலில் கட்டடம் கட்டு வதற்கு நீங்க ஏதாவது நூறோ இருநூறோ தர்மம் கொடுத்தால்...

ராக: ஐயோ. இல்லைன்னு சொல்லப்போறேனா. இப்படிப்பட்ட நல்ல காரியத்துக்கு என்னுடைய சொத்து முழுக்க கொடுத்துட லாமானு நினைக்கிறேன். நான் எதையும் தானம் செய்வதாக இல்லை. ஏன்னு கேட்கறீங்களா? என் சொந்தக்காரர் ஒருத்தர், பெரிய வேலை ஆகியிருக்குன்னு சொல்லி, என்னையும் என் மனைவியையும் தன் சொந்த செலவில் காசிக்குக் கூட்டிப் போனார். அங்கு உங்களுக்கு மிகவும் பிடித்த ஏதாவது ஒன்று விடச்சொன்னாங்க. நானும் எனக்கு பிடித்தமான ‘தானம் கொடுக்கும் செயலை’ விட்டுட்டேன்னு விஸ்வேஸ்வரன் முன்னால் சத்தியம் செய்து சொல்லிட்டேன். இப்ப என்ன சொல்றீங்க?

செலுவ: இனி சொல்வதற்கு ஒண்ணுமில்லை. சொல்ல வேண்டியதையெல்லாம் நீங்களே சொல்லிட்டீங்க. ஆனாலும், அந்த கணேஷ ராயனின் பேச்சு உண்மையாயிடுச்சு.

ராக: என்ன சொன்னான் அந்த கணேச ராயன்?

செலுவ: என்ன சொல்லப் போறான்? அந்த ராகவேந்திரனிடம் எதுக்கு போறீங்க? முதலிலேயே கஞ்சன். ஈ ஓட்டுவதற்கு ‘உஷ்’னு சொன்னா, மூச்சு செலவாகிடும்னு அதையும் அவன் சொல்வதில்லை. அவன் என்ன கொடுக்கப்போறான் அப்படின்னு சொன்னார். நீங்களும் அதே போலவே செய்திட்டீங்க. நான் வர்றேன் ஸ்வாமி (கிளம்பிப் போகிறார்).

ராக: (அவர் போனபிறகு). போங்க போங்க. சங்கம் கிங்கம்னு சொல்லிக்கிட்டு, என் பணத்தை வாங்கி, உன் நெற்றியில் இருக்கும் நாமத்தை என் நெற்றிக்கு போடலாம்னு பார்த்தியா? நான் சிக்குவேனா? இன்னும் வேறென்ன கேட்கப் போறானோ ன்னு நினைச்சேன். நல்லவேள, கிளம்பிட்டான்.

(தீபம் ஏற்றும் வேளை. சாரதம்மா தீபத்தை ஏற்றிவிட்டு, ஏதோ தேவரநாமாவை சொல்லிக் கொண்டிருக்கிறார். அனந்த காலேஜுக்குப் போகாமல் அங்கு அமர்ந்திருக்கிறான்).

சாரதம்ம: ஏய் அனந்த. ஏண்டா காலேஜுக்குப் போகாமல், இப்படி உட்கார்ந்திருக்கே?

அனந்த; ஐயோ விடும்மா. எப்படி இருந்தா என்ன? நம் வாழ்க்கை இப்படி ஆகிடுச்சேன்னு யோசனை செய்துகிட்டே உட்கார்ந்திருக்கேன்.

சாரதம்ம: நல்லாயிருக்கு. அப்படி என்ன ஆயிடுச்சு இப்போ உனக்கு?

அனந்த: ஒவ்வொரு விஷயத்துக்கும் அப்பா இப்படி செய்துகிட்டிருந்தா என்னம்மா?

சாரதம்ம: அப்படி சொன்னா எப்படிப்பா? படிக்கற பையன். தந்தையானவர் உனக்கு கொஞ்சம் அறிவுரை சொன்னாதான் என்ன?

அனந்த: சொல்றதையெல்லாம் சொல்லட்டும். யார் வேணாங்கறா? எல்லாத்துக்கும் ஒரு கேள்வி. பேனாக்கு இங்க் வேணும்பான்னா, எவ்வளவு எழுதியிருக்கே, கொண்டு வா பார்க்கலாம்றார். நான் அந்த இங்கை குடிச்சிடப் போறேனா?

சாரதம்ம: பெரியவர் ஏதோ அறிவுரை சொல்றார். அது தப்பா?

அனந்த: சரிதான். ஷேவ் செய்றதுக்கு 4அணா கேட்டா, கன்னத்தைத் தொட்டுப் பார்த்து, இன்னும் வளரட்டும் பிறகு செய்துக்கலாம்றார். இப்படி இருந்தா எப்படிம்மா? வீட்டில் சரி.

காலேஜிலும் இப்படி தாடியுடன் இருந்தா, நண்பர்கள் சிரிக்கறாங்க.

சாரதம்ம: என்னமோ அவருடைய சுபாவமே அப்படி இருக்கு. அவரை மாற்றுவதற்கு பிரம்மனாலும் முடியாது. நாம என்ன செய்ய முடியும் சொல்லு?

அனந்த: அப்பான்னு சொல்லிட்டு சும்மா இருந்தால் சரியா? உன்னை என்ன சொல்வது? அவர் எது சொன்னாலும், அப்படியே தலையை ஆட்டி சரின்னுடறே.

சாரதம்ம: என்னை என்ன செய்யச் சொல்றே? ரசத்துக்கு தாளிச்சி கொட்டணும். கடுகு வாங்கிட்டு வாங்கன்னா, அவரே கடைக்குப் போய், மூணு பேருக்கு எண்ணி மொத்தம் ஆறே ஆறு கடுகு வாங்கிட்டு வந்திருக்காரு.

அனந்த: நமக்கு ஏன் இந்த நிலைமை வந்தது? அப்பாகிட்டே பணம் இல்லையா? பெட்டியில் காசு நிறைய இருக்கே. நிறைய பணம் வட்டிக்கும் கொடுத்திருக்காரு. வங்கியிலும் பணம் இருக்கு. வேண்டிய அளவுக்கு தங்கம் வங்கியின் லாக்கரில் இருக்கு. இவ்வளவு இருந்தும் ஏன் இப்படி இருக்கணும்? என்னை விடுங்க. ஆம்பள பையன். எப்படி இருந்தாலும் சமாளிச்சிடுவேன். உன்னைப் பார்த்தாலே எனக்கு தலை வலிக்குது. அவ்வளவு நகைகளை வெச்சிருக்காரே, அதெல்லாம் எதுக்காம்? இருக்கும் ஒரே ஒரு புடவையை ஏகப்பட்ட ஒட்டு போட்டு தைத்து, அணியும் கிரஹச்சாரம் நமக்கு எதுக்கும்மா?

சாரதம்மா: என்ன செய்யலாம்றே? நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாச்சு. கெஞ்சி பார்த்தாச்சு. பட்டினி போராட்டமும் செய்தாச்சு. எதுக்கும் மசிய மாட்டேங்குறாரு.

அனந்த: சரிதான். நான் பழைய கிழிந்த சட்டையை போட்டுப் போனால், காலேஜில் நண்பர்கள் எவ்வளவு கேலி பேசறாங்க தெரியுமா? வந்து பாரு, fancy dressஆ கேட்கறாங்க. கஞ்சன், பிச்சைக்காரன்னு என்னென்னவோ சொல்றாங்க. எனக்கு பயங்கர எரிச்சலா இருக்கு. நான் எங்காவது சினிமாக்குப்

போறேனா, ஹோட்டலுக்குப் போறேனா? என்ன தப்பு காரியம் செய்றேன்? காலேஜுக்கு போவதற்கு 1-2 நல்ல சட்டை வேணும்னு கேட்கறேன். அவ்வளவுதானே?

சாரதம்ம: நீ நல்ல கோட், சூட் போட்டுப் போறதை பார்க்கும் ஆசை எனக்கு மட்டும் இல்லையா? ஆனா பாரு, எதுவும் என் கையில் இல்லை. அவரோ கொடுக்கப்பதில்லை. நானும் வாய் விட்டு புலம்பாமல், தினமும் மனசிலேயே புலம்பிக்கிட்டுதான் இருக்கேன்.

அனந்த: இப்படியே புலம்பிக்கிட்டே இரு. நான் இன்னிக்கு இரண்டில் ஒன்று பார்த்துடறேன். ஒண்ணு நீ அவரை திருத்தணும். முடியலேன்னா சொல்லு, நான் அவருக்கு ஒரு தக்க பாடத்தை இன்னிக்கு கத்துக் கொடுக்கறேன்.

சாரதம்ம: என்னடா சொல்றே? கடந்த 20 வருசமா இந்த சம்சாரத்தில், என்னால் செய்ய முடியாததை, நீ சின்னப் பையன் என்ன சொல்லி திருத்தப்போறே?

அனந்த: பார்த்துக்கிட்டே இரு. அப்பா வரட்டும். சில நல்ல வார்த்தைகளை சொல்லி இந்த கஞ்சத்தனத்தை ஒழிக்க முடியுதான்னு பார்க்கிறேன். அவர் கேட்கலேன்னா, பணப்பெட்டிக்கு இன்னொரு Master Key செய்து, தேவையான பணத்தை நானே எடுத்துக்கப் போறேன்.

சாரதம்ம: Master Keyன்னா?

அனந்த: அப்படின்னா கள்ளச்சாவி.

சாரதம்ம: ஓஹோ. ரொம்ப சந்தோஷம். நல்ல வம்சத்தில் பிறந்து, உன் வீட்டில் நீயே திருடனாகப் போறியா?

அனந்த: ஐயோ. இது திருட்டுத்தனம் இல்லேம்மா. தேவையான பணத்தை எடுத்துக்கணும். பிறகு சொல்லிடணும்.

சாரதம்ம: சொல்லாமல் எடுத்தா என்ன, எடுத்துட்டு சொன்னா என்ன? அது திருட்டுதான். நான் உயிரோட இருக்கிறவரை

அதுமாதிரி எதுவும் செய்யாதே. எனக்கு ஒரு சொட்டு விஷம் கொடுத்துட்டு, நீ எதையாவது செய்துக்கோ.

அனந்த: என்னம்மா இது, இப்படியெல்லாம் பேசறே? சரி விடு. அப்பா அவருக்கே என்னிக்கு புத்தி வந்து, எனக்கு பணம் தர்றாரோ, அதுவரைக்கும் நான் இப்படியே பிச்சைக்காரன் மாதிரி சுத்திக்கிட்டிருக்கேன். போதுமா?

சாரதம்ம: எதையாவது சொன்னா, நீ வேறையாவது சொல்லிடறே. நான் உன்னை பிச்சைக்காரன் ஆகச்சொன்னேனா?

அனந்த: வேற என்ன செய்றது? அப்பா பணம் கொடுக்க மாட்டேங்கறாரு. உன்னால் கொடுக்க முடியல. நானே எடுத்துக்கறேன்னு சொன்னா, அதையும் செய்ய விடுவதில்லை. பின்னா, பிச்சைக்காரன் ஆகாமல், பிர்லா ஆகமுடியுமா? இப்படி எதுவும் முடியலேன்னா, இருப்பது கடைசியா ஒரே ஒரு வழிதான். லாரிலியோ, பஸ்ஸிலேயோ அடிபட்டு சாவதுதான்.

சாரதம்ம: முதலில் அதைச் செய். பெற்ற வயிற்றில் பாலை வார்த்தே. இதையெல்லாம் அவர் முன்னால் பேசாதே. செத்துப் போறானாம். செத்துப் போறதுன்னா அவ்வளவு சுலபம்னு நினைச்சியா?

அனந்த: தெரியுதோ இல்லையோ. எப்படி செத்து காட்டறேன்னு மட்டும் பாரு. அப்பவாவது இவருக்கு புத்தி வருதான்னு பார்ப்போம்.

சாரதம்ம: ஏண்டா இப்படியெல்லாம் பேசறே. நீ செத்தபிறகு அவருக்கு புத்தி வந்தா என்ன, வரலேன்னா என்ன?

அனந்த: உனக்காச்சும் நல்லது ஆகுமே? (கோபத்துடன் வெளியேறுகிறான்)

சாரதம்ம: அனந்தா.. டேய்.. அப்படியெல்லாம் பேசாதே.. வாப்பா. ஐயோ போயே போயிட்டானே. இப்ப நான் என்ன செய்றது? அவர் இருந்தாலாவது போய் கூட்டிட்டு வரலாம். கடவுளே, நான்

என்ன செய்யட்டும்? அவனை எப்படியாவது காப்பாத்துப்பா. இவர் என்னை திட்டினாலும் சரி. எப்படியாவது நெய் தீபம் ஏத்திடறேன். (அழுதவாறு உள்ளே போகிறார்).

(ராகவேந்திரராயர் தபால்காரருடன் உள்ளே வருகிறார்)

ராக: வாங்க வாங்க. உன் முகத்தை பார்க்க சகிக்கலை. வெயிலில் இவ்வளவு வியர்வை வந்திருக்கே. அரசு உங்களுக்கு ஒரு குடை கொடுக்க வேண்டாமா? வேண்டாம், நீயே ஒண்ணு வாங்கியிருக்கக்கூடாதா?

தபால்: பழைய செருப்பையே திருப்பிக் கொடுத்தால்தான், புதுசா ஒண்ணு தருது அரசு. இன்னும் குடை வேற தருவாங்களா? வரும் சம்பளம் இரு வேளை சாப்பாட்டுக்கே சரியாப் போயிடுது. இதில் குடை, ரெயின் கோட் இதெல்லாம் எங்கே வாங்கறது சொல்லுங்க.

ராக: ஐயோ பாவம். நீயும்தான் என்ன செய்வே? உனக்கு எவ்வளவு சம்பளம்?

தபால்: அது எதுக்கு கேட்கறீங்க விடுங்க. மாசத்துக்கு 28, 29, 30, 31 எவ்வளவு நாட்களா இருந்தாலும், அதே சம்பளம்தான். இதிலேயே மனைவி, மக்கள், சாப்பாடு, மின்சார செலவு இதெல்லாம் ஆகணும். உங்களைப் போன்றவர்களின் தயை இருந்தால், என்ன வேண்டுமானாலும் செய்யலாம்.

ராக: அநியாயம். இப்படி இருக்கக்கூடாது. கண்டிப்பா என் தயை உன் மேல் இருக்கு. சரி உனக்கு ஒரு குடைதான் வாங்கிக் கொடுத்துடலாம்னு நினைச்சா, கடவுள் அந்த சக்தியை எனக்குக் கொடுக்கலை. நீ ஒண்ணும் கவலைப்படாதே. ஒவ்வொரு தபால்காரருக்கும், மூன்று வருஷத்துக்காவது ஒரு குடை அரசு தரணும்னு நான் பேப்பரில் எழுதறேன்.

தபால்: ஏதோ பார்த்து செய்ங்க ஸ்வாமி. எங்களுக்கு பலன் வந்தா, உங்களுக்கே நன்றி சொல்றேன்.

ராக: ஐயோ. எனக்கு எதுக்கு நன்றி. கடவுளுக்கு சொல்லு.

தபால்: அதுவும் சரிதான். பேப்பரில் எழுதுமளவுக்கு உங்களுக்கு தயாள புத்தியைக் கொடுத்த இறைவனுக்குதான் நன்றி சொல்லணும்.

ராக: சரி. எனக்கு இன்னிக்கு எவ்வளவுக்கு பணம் வந்திருக்கு?

தபால்: மணி ஆர்டர்லாம் இல்லே ஸ்வாமி. 30 பைசா.

ராக: 30 பைசாவா? யார் எனக்கு இவ்வளவுக்கு மணி ஆர்டர் அனுப்பினது?

தபால்: மணி ஆர்டர் இல்லை ஸ்வாமி. ஒரு லெட்டருக்கு Not Paid.

ராக: Not paidஆ? அபராதமா? வேறு யாருக்காவது இருக்கப்போகுது சரியா பாருப்பா.

தபால்: இதென்ன ஸ்வாமி இப்படி சொல்றீங்க? உங்க முகவரிதான் தெளிவா போட்டிருக்கே. இந்த தெருவில் ராகவேந்திர ராயர், நீங்க மட்டும்தானே. உங்களுக்கு வந்த கடிதம்தான் இது.

ராக: இங்கே நான் ஒருத்தந்தான் இருக்கேனா ராகவேந்திரராயர்? ஊரெல்லாம் அதே பேர்தான். இதே தெருவில் மேலே போ. அங்கேயும் ஒருத்தர் இருக்கார். அங்கே போய் கொடு உன் Not Paid லெட்டரை. வந்துட்டான் கதவைத் திறந்துகிட்டு.

தபால்: அதெல்லாம் விடுங்க. இப்போ இந்த கடிதத்தை வாங்கிக்கிறீங்களா இல்லையா? சொல்லிடுங்க.

ராக: எனக்கு வேண்டாம். நான் வாங்க மாட்டேன். அந்த கடிதத்தில் Party not foundனு எழுதி திருப்பி அனுப்பிடு.

தபால்: சரி விடுங்க. அதனுடன் அரசு கடிதமும் ஒண்ணு இருக்கு. அதையும் திருப்பி அனுப்பிடறேன்.

ராக: அட, வாப்பா. ஒரு வீட்டு மனைக்கு விண்ணப்பம் போட்டிருந்தேன். அதுதான் வந்திருக்கோ என்னமோ, அந்த கடிதத்தைக் கொடு.

தபால்: இல்லே ஸ்வாமி. ஒரு கடிதத்தைக் கொடுத்துட்டு, இன்னொரு கடிதத்துக்கு, Party not foundன்னு போடமுடியாது. இரண்டையும் திருப்பி அனுப்பிடறேன்.

ராக: வேண்டாம்பா வேண்டாம். கொடுப்பா. அந்த இரண்டையும் கொடு. நாசமாப் போச்சு.

தபால்: (Not paid கடிதத்தை மட்டும் கொடுத்து) 30 பைசா கொடுங்க.

ராக: 30 பைசாவா? சரி இந்தா... கடிதத்தை டக்கென்று பிடுங்குகின்றார்.

தபால்: இதென்ன? வெறும் 15 பைசாதான் இருக்கு?

ராக: போதும் போதும். அதுவே ஜாஸ்திதான்.

தபால்: அதிலும் இந்த 10 பைசா செல்லாது போலிருக்கு. வேற கொடுங்க.

ராக: செல்லாதுன்னா என்ன? நீ கொடுக்கும் மணி ஆர்டர் பணமும் அப்படிதான் இருக்கு. புது நோட்டு கொடுப்பான்னா, எவ்வளவோ முறை எவ்வளவோ பேர் தொட்டு பழசாகிப் போன பணத்தைத்தான் தர்றே. உனக்கு இது போதும். போ.

தபால்: தூ. எவ்வளவு கஞ்சன் நீங்க. வெறும் 5-10 பைசாக்கெல்லாம் இப்படி அலையறீங்க.

ராக: அந்த அரசு கடிதத்தைக் கொடுப்பா தபால்காரரே!

தபால்: அந்த பாக்கி ஐந்து பைசாவை கொடுங்க சாரே!

ராக: அட. என்னடா இவன்? சரி இந்தா 5 பைசா.

தபால்: முதல்லேயே கொடுத்திருந்தா மரியாதையாவது மிஞ்சி யிருக்கும். புரந்தரதாசரின் பூர்வாசிரம ஆசாமி (என்றவாறு போகிறார்).

ராக: யாரையாவது திட்டிக் கொண்டிருப்பதே இந்த மக்களுக்கு வேலை போல. திட்டினா திட்டிட்டுப் போடா.. (Not paid கடிதத்தை திறக்கிறார்). என் கையிலிருந்து 30 பைசா பிடுங்கின கடிதத்தைப் படிப்போம். இதை யார் எழுதியிருக்காரோ? அவருக்கும் ஒரு பழைய கவரின் கடிதத்தை எழுதி அனுப்பறேன். அப்பதான் புரியும். (கடிதத்தை படிக்கிறார்)

கஞ்சர்களின் தலைவன், ராகவேந்திர ராயருக்கு அன்பான வணக்கங்கள்.

நான் நேற்று உங்கள் வீட்டிற்கு வந்து, பொதுமக்களின் சமுதாய முன்னேற்றத்திற்காக ஓர் உதவி கேட்டபோது, நீங்கள் எவ்வித உதவியும் செய்யவில்லை என்று சொல்லி என்னை துரத்தி அனுப்பினீர்கள். உங்களுக்கு தகுந்த ஒரு பாடத்தை கற்பிக்க வேண்டி, நான் என் கைக்காசினை செலவழித்து பெங்களூருக்குச் சென்று, வருமான வரி அலுவலகத்தில் செய்ய வேண்டியதை செய்து, உங்களின் மாத மற்றும் ஆண்டு வருமானத்தை அவர்களிடம் கொடுத்து பார்க்கச் சொன்னபோது, தாங்கள் அரசுக்கு சுமார் 30 ஆயிரம் ரூபாயின் வரியையே கட்டவில்லை என்னும் விஷயம் தெரியவந்தது. அதை அவர்களுக்கு தெரிவித்து, உங்களிடமிருந்து அதை வசூல் செய்வது எப்படி என்று ஆராயுமாறு தெரிவித்தேன். இந்த என் கடிதத்துடன், அரசின் கடிதமும் வந்திருக்கும் என்று நம்புகிறேன். என் இந்த உதவியை நீங்கள் என்றும் மறக்கமாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு
சென்னராய பட்டிணத்து செலுவ ஐயங்கார்.

ராக: ஐயோ. ஐயங்காரே. கடைசியா அவன் நெற்றியில் இருந்த நாமத்தை என் நெற்றிக்கு போட்டுட்டான். சரி. அடுத்த கடிதம் என்னன்னு பார்க்கலாம். [இன்னொரு கடிதத்தையும் பிரித்து,

பயந்து போகிறார்]. ஐயய்யோ. என் வாழ்க்கையே நாசமாப் போச்சே. ஷாரீ. ஷாரீ..

சாரதம்ம: என்னங்க ஆச்சு. எதுக்கு இப்படி கத்தறீங்க. அனந்தனை முடிச்சிட்டீங்களா? எனக்கு தெரியும். என்னிக்காவது உங்க கஞ்சத்தனம் இப்படி நம் வீட்டையே அழிச்சிடும்னு எனக்கு தெரியும். இப்படி என் பையனே போனபிறகு இனி நான் வாழ்ந்து என்ன பயன்? உங்க கையாலேயே எனக்கு ஒரு சொட்டு விஷம் கொடுத்துடுங்க. அவன் இருக்கும் இடத்திற்கே நானும் போயிடறேன். நீங்க மட்டும் ஜாலியா தனியா இருங்க.

ராக: ஏண்டி புலம்பறே. அவன் சாகவில்லை. குண்டுகல்லாக இருக்கான். இப்போ செத்துக்கிட்டிருப்பது நாந்தான்.

சாரதம்ம: அப்படியா. சரி இப்போ வேற என்ன ஆச்சுன்னு கத்தறீங்க? நல்லவேளை என் பையனுக்கு ஒண்ணும் ஆகலை.

ராக: உன் கவலை உனக்கு. என் கவலை எனக்கு. சுளையா 10,000 ரூபாய் பிடுங்கிட்டுப் போறாங்களேன்னு உயிரே போகுது.

சாரதம்ம: போனால் போகட்டும் விடுங்க.

ராக: எது என் உயிரா?

சாரதம்ம: அட அதில்லைங்க. பணம். பத்து இருபதாயிரம் போனா, இந்த உலகமே அழிஞ்சிடாது. நம் பையன் சாகப்போறேன்னு சொல்லிட்டு வீட்டை விட்டுப் போனான். அவனைவிட பணம் பெரிசு இல்லை. எங்கே போனான்னு பார்த்து, மறுபடி பிடிச்சிக்கிட்டு வாங்க, ரெண்டு பேரும் சாப்பிடலாம்.

ராக: பணம் போகுதேன்னு நான் கவலைப்பட்டுட்டிருக்கேன். நீ வெறும் கொட்டிப்பதிலேயே குறியாயிருக்கே. கொட்டிக்கோ. பால் குடி. பழம் சாப்பிடு. வாய் நிறைய வெற்றிலை பாக்கு போட்டு சந்தோஷமா இரு. என் வீட்டை நாசம் பண்ணிட்டு, நீங்க

ஜாலியா தூங்குங்க. என்னையும் இந்த வீட்டையும் சுற்றி எறும்புப்புற்று வரட்டும்.

சாரதம்ம: அப்படியெல்லாம் அபசகுனமா பேசாதீங்க. இப்ப என்ன ஆச்சு. விஷயத்தை வாய்விட்டு சொல்லுங்க.

ராக: இனி ஆகவேண்டியது என்ன இருக்கு. மொத்தமா அழிச்சிட்டான். அந்த செலுவ ஐயங்கார் வந்து காசு கேட்டதுக்கு இல்லைன்னு சொன்னேனே, அந்த கோபத்தில் என்னிடம் காசு இருக்கும் விஷயத்தை வருமான வரி ஆபீசுக்கு சொல்லி, என் வீட்டையே நாசம் பண்ணிட்டான். சரியான கணக்கு வழக்கை சொல்லி, வரி கட்டுமாறு அலுவலகத்திலிருந்து கடிதம் வந்திருக்கு. என் பணம் போச்சுடி. என் பணம் போச்சு. உயிரும் போகப்போகுது. உன் நெற்றியை பாழாக்கப் போறாண்டி கடவுள், பாழாக்கப் போறான்.

சாரதம்ம: ஐயய்யோ. அப்படியெல்லாம் ஆக வேண்டாம். பணம் போனா போகுது. மானமும், உயிரும் போவதற்கு முன்னாடி, அரசுக்குக் கட்டவேண்டியதை கட்டிடுங்க. நீங்க போயிட்டா எனக்கு வேற யாரு கதி?

ராக: சரிதான். கட்டிடுங்கன்னு நீ சொல்லிட்டே. அதை சம்பாதிக்க எவ்வளவு கஷ்டப்பட்டேன்னு உனக்கு என்ன தெரியும்? அதெல்லாம் முடியாது. போ. சமையலறை டப்பாக்கள் எல்லாத்தையும் காலி செய். அதிலெல்லாம் எவ்வளவு முடியுமோ பணத்தை நிரப்பிட்டு, குறைந்த கணக்கையே காட்டுவோம். அப்படி செய்தாலும், ஐயோ, 7-8 ஆயிரத்தைவிட குறைவா காட்டமுடியாது. போச்சுடி என் 7-8 ஆயிரம். போ, உடனே காலி செய். இந்த அரசு ஆட்கள் எப்போ வருவாங்களோ தெரியாது.

சாரதம்ம: காலி செய்வதற்கு என்ன இருக்கு அங்கே. சாமான்களை வாங்கிக் கொடுத்தால்தானே. ஏற்கனவே எல்லாம் காலியாதான் இருக்கு. போங்க எங்கெங்கே என்னென்ன நிரப்பணுமோ நிரப்புங்க.

(வெளியேயிருந்து சார்.. சார்... என்று குரல்)

ராக: ஓ. வருமான வரியினர் வந்துட்டாங்க போலிருக்கு. அவங்க வந்துட்டா, யமதேவனே வந்தது போல. நான் வீட்டில் இல்லைன்னு சொல்லிடு. இப்போதைக்கு தப்பித்திடலாம்.

சாரதம்ம: யாரப்பா அது (என்றவாறே கதவைத் திறக்கிறார். உடலெல்லாம் கட்டு போட்டிருக்கும், மயக்க நிலையில் இருக்கும் அனந்தனை, ராமு தூக்கி வருகிறான்). ஐயோ அனந்த, என்ன ஆச்சு? ஏன் உடம்பெல்லாம் கட்டு போட்டிருக்கு? என்னப்பா ஆச்சு?

ராமு: விவரமா சொல்றேம்மா. முதலில் ஒரு பாய் விரிங்க. இவனை படுக்க வைக்கலாம்.

சாரதம்ம: ஐயோ மயக்கமாவே இருக்கானே. என்னப்பா ஆச்சு உனக்கு?

ராமு: என்னம்மா சொல்றது? எனக்கு வீட்டில் இருப்பதே பிடிக்கலை, தற்கொலை செய்துக்கணும்னு தினமும் சொல்லிக்கிட்டே இருப்பான். இன்னிக்கு என்ன ஆச்சோ என்னமோ, என்கூடவே வந்துட்டிருந்தான். எதிரில் லாரி வருவதை பார்த்து, திடீர்னு குறுக்கில் விழுந்துவிட்டான். நல்ல வேளை, டிரைவர் பயங்கரமா ப்ரேக் போட்டு நிறுத்தினான். ஆனாலும், முன் சக்கரம் அனந்தனின் வெகு பக்கத்தில் வந்துவிட்டது. மேலே ஏறிடுச்சோ என்னமோ. எனக்கு இப்படிப்பட்ட விபத்தை பார்த்தாலே பயம். உடனே மயக்கம் போட்டுட்டேன். இரண்டு பேரையும் யாரோ, மருத்துவமனைக்குக் கூட்டிட்டுப் போனாங்க. உடனே இவனை வீட்டுக்குக் கூட்டிட்டுப் போப்பா. இவன் பெற்றோர் இவனை பார்க்கட்டும். உயிருக்கு உத்தரவாதமில்லை என்றுவிட்டனர். அதனால், உடனடியாக வண்டிக்குக்கூட காத்திருக்காமல் இவனை தூக்கிட்டே வந்துட்டேன்.

சாரதம்ம: ஐயோ. அனந்தா. போயிட்டியாப்பா. என்னங்க. இங்கே வாங்க. நிஜமான யமனே வந்து, நம் அனந்தனை கொண்டு

போயிட்டான். தைரியமா வெளியே வாங்க. என்னங்க. உங்களைத்தான். அனந்தா.. ஐயோ லாரி... (என்று அழுது புலம்பி உள்ளே போகிறார்).

அனந்த: போடா டேய். உன் பேச்சைக் கேட்டு, நான் தமாஷுக்கு செத்தேன். இதைப் பார்த்து எங்கம்மா நிஜமாவே போயிட்டேன்னு நினைக்கறாங்க. இரு. அம்மாவை கூப்பிடறேன்.

ராமு: டேய். நீ இப்போ செத்திருக்கே. திடீர்னு எழுந்து அம்மா முன்னாடி போய் நின்னா, அதைப் பார்த்து உங்கம்மாவுக்கு நிஜமாவே மாரடைப்பு வந்து நின்றுவிடும்.

ராக: ஐயோ. போயிட்டானா. லாரியில் அடிபட்டு செத்துட்டானா? (ராமனைப் பார்த்து) என்னப்பா, நீதானா இவனை அழைத்து வந்தது?

ராமு: அழைத்து வரவில்லை. தூக்கிக் கொண்டு வந்திருக்கிறேன்.

ராக: அதுவும் சரிதான். எதுக்கு வீணா வண்டிக்கு வாடகை கொடுத்துக்கிட்டு. ஆபத்தில் உதவுபவனே நல்ல நண்பன். அந்த லாரி நம்பரை நோட் பண்ணியா? அதைக் கொடு. அவன் மேல் ஒரு கேஸ் போட்டு அவனை கோர்ட்டுக்கு இழுக்கறேன்.

ராமு: நீங்க ஒரு மருத்துவரை அழைத்து இவனை கவனிங்க. நான் போலீஸ் ஸ்டேஷன் போய் ஒரு புகார் கொடுத்துட்டு வந்துடறேன்.

ராக: நில்லுப்பா. அப்படியெல்லாம் செய்துடாதே. முதலில் அந்த லாரி நம்பரின் டிரைவரை கண்டுபிடிப்போம். அவனை இங்கே வரவழைத்து, சண்டை போட்டு, குறைந்தபட்சம் ஒரு 5-10 ஆயிரமாவது அவனிடமிருந்து பிடுங்குவோம். கோர்ட், கேஸ்னு போனா நமக்குதான் செலவு. லாபமெல்லாம் போலீஸ்க்குதான்.

சாரதம்ம: ஐயோ. எப்போ பார்த்தாலும் காசுதானா? மகன் செத்து கிடந்தாலும், அந்த பாழாய்ப்போன பணத்தாசை உங்களை

விடவில்லையே? அது எப்படியாவது போகட்டும். ஒரு தடவை இங்கே பாருங்க நம்ம பையனை. ஒழுங்கா ஒரு டாக்டரை வரவழைக்கப் பாருங்க.

ராக: ஐயோ. அவன் சாகல்லாம் மாட்டான். சரி. இரு ஒரு தடவை பார்த்துடறேன். (கை, கால், நாடி பிடித்துப் பார்த்து) இன்னும் கை, கால் சூடாதான் இருக்கு. மூச்சுகூட மெதுவா வருது. ஐயோ. இவன் இன்னும் சாகலையா?

சாரதம்ம: இன்னும் என்ன, மொத்தமா செத்துடணுமா? இப்போதைக்கு கடவுள் ஏதோ நல்லது பண்ணியிருக்கார். போப்பா. போய் டாக்டரை அழைச்சிட்டு வா. எவ்வளவு பெரிய டாக்டரானாலும் பரவாயில்லை.

ராமு: சரிம்மா. இப்போ வந்துட்டேன் (என்று வெளியே கிளம்புகிறான்).

ராக: டேய். கொஞ்சம் நில்லு.

சாரதம்ம: ஏன்? என்ன ஆச்சு? டாக்டரை கூட்டிட்டு வரப்போறான்.

ராக: அழைச்சிட்டு வந்தா, அவனுக்கு வேற தனியா காசு கொடுக்கணும். எதுவும் வேண்டாம் (அனந்தனை பார்த்தவாறு) இவனை பார்த்தால், நாளை காலை வரை எதுவும் பயமில்லை. காலையில் அந்த மந்திரவாதி மாதய்யனை கூப்பிடறேன். 6 மாசமா அவன் இந்தப்பக்கம் வரவில்லை. அவன் யாரிடமும் கை நீட்டி காசு வாங்குவதில்லை. பாவம். மகா புண்யவந்தன்.

சாரதம்ம: இவனுக்கு கொஞ்சமும் பணம் செலவழிக்க மாட்டீங்கன்னு எனக்கு நல்லா தெரியும். உங்களுக்கு காசுதான் பிரதானம். நான் போய் கடவுள்கிட்டேயாச்சும் முறையிடறேன்.

ராக: சரிதான். நீ அதைப் போய் செய். பக்தியினால் அவனை வேண்டு. காலைவரை ஏதாச்சும் செய்து என் மகனை காப்பாற்று. காலையில் அந்த மந்திரவாதியை கூப்பிட்டு மந்திரத்தை போடச் சொல்றேன்.

சாரதம்ம: இப்போதைக்கு அதுக்காகவாது ஒத்துக்கிட்டீங்களே? (என்று பூஜையறைக்கு விரைகிறார்).

ராக: கொஞ்சம் இதையும் கேளு. நீ பாட்டுக்கு எதையாவது வேண்டிக்காதே. வெள்ளி நாக்கு போடறேன். தங்கப் பல் போடறேன். வைர மாலை போடறேன்னு எதையாச்சும் சொல்லிடாதே. பார்த்து பார்த்து.

சாரதம்ம: கொஞ்சம் சும்மா இருங்க. ஒரே மகன். அவனே போனபிறகு, உங்களுக்கு இன்னும் கஞ்சத்தனமா?

ராக: கடவுள் கொடுத்தத்தை வீணடிக்கக்கூடாது. பத்திரமா வைச்சிக்கணும்தானே. ‘அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயக’னான அவன், நாம கொடுத்து அவன் வாங்கி வெச்சிப்பானா?

சாரதம்ம: பின்ன என்ன செய்வது?

ராக: உன் தலை. தெரியலேன்னா கேளு. சொல்றேன். பிரார்த்தனைன்னா - நஞ்சன்கூடின் நஞ்சுண்டேஸ்வரனே, என் பையனை காப்பாத்துப்பா. நான்கு மண்டலம் வரை ஒரு வேளை மட்டும் சாப்பிடறேன். திருப்பதி திம்மப்பா, நாலு வீட்டில் பிச்சை எடுத்து சாப்பிடறேன். மந்திராலயத்து ராகவேந்திரா, நான்கு மண்டலம் முடிந்தபிறகு, வீட்டையே மந்திராலயம்னு நினைச்சி, உருளு சேவை செய்யறேன். இப்படி வேண்டனும். இதுதான் பக்தி. இதைவிட்டு, ஏதோ தங்கத் தோடு போடறேன். இருக்கும் ஒரிஜினல் காதிலேயே நாம் வேண்டுவது பகவானுக்கு கேட்பதில்லை. அதையும் தங்கத்தில் ஏன் போடணும்?

சாரதம்ம: உங்க பக்தியை நீங்கதான் மெச்சிக்கணும். நீங்க கூப்பிடறீங்களோ இல்லையோ, நான் டாக்டரை கூப்பிடத்தான் போறேன். இந்த தாலியை வித்தாவது அவருக்கு பணம் கொடுக்கறேன். இந்தாப்பா, இதை வெச்சி, பணம் வாங்கிட்டு வா.

ராக: இதை யாரிடமோ போய் ஏன் விக்கணும்? நானே இருக்கேனே. எனக்கு குடு. காசு கொடுக்கறேன்.

ராமு: (கை கூப்பியவாறு) ஸ்வாமி. ரொம்ப நல்லாயிருக்கு. அவங்க தாலியை விற்கவும் வேண்டாம். நீங்க காசு கொடுக்கவும் வேண்டாம். நான் முதலில் டாக்டரை கூட்டிட்டு வர்றேன். காசு பத்தி பிறகு பார்க்கலாம்.

சாரதம்ம: (அனந்தனின் அருகில் அமர்ந்தவாறு) அனந்தா, பேசுப்பா. நான் உன் அம்மா. கடைசியா ஒரு வார்த்தைகூட பேசாமல் இப்படி திடீர்னு போயிட்டியேப்பா.

ராக: ஐயோ ராமா. அவன் இன்னும் போகவில்லை. நீயே அவனை அவசரமா அனுப்பி வெச்சிடுவே போலிருக்கே. முதலில் போகப்போறது அவன் இல்லை. நாந்தான் போகணும். அரசுக்கு காசு, டாக்டருக்கு காசு. மருந்துக்கு காசு. ஐயோ ஒரே நேரத்தில் எனக்கு இவ்வளவு செலவு வந்துடுச்சே?

சாரதம்ம: போதும் போதும் நிறுத்துங்க. உங்க காசு புராணம். இன்னொரு தடவை என் எதிரில் காசு பற்றி பேசினீங்கன்னா, கிணற்றிலோ, குளத்திலோ விழுந்து செத்துடுவேன்.

ராக: போய் விழு. அப்படி விழுந்தா, உன் பங்கு அரை கிலோ அரிசியாவது மிஞ்சும்.

சாரதம்ம: மிச்சப்படுத்துங்க. எல்லாத்தையும் ஒரு மூட்டை கட்டி வெச்சிக்கோங்க. என் மகன் சாகறதை நான் பார்க்க மாட்டேன். அவனுக்கு முன்னாடி நான் போய் சேர்ந்துடுவேன். (கிளம்புகிறார்)

ராக: கொஞ்சம் நில்லும்மா. எதையாவது செய்திடாதே. நீ போயிட்டா என்னால் தனியா இருக்கமுடியாது.

சாரதம்ம: ஏன் முடியாது? உங்களுக்கு மகனை விட, என்னைவிட காசுதானே முக்கியம்?

ராக: அதுக்குதான் முடியாதுன்னேன். நீ செத்தபிறகு, போலீஸ்கு, அதுக்கு இதுக்குன்னு இன்னும் அதிக காசு செலவாகும்.

சாரதம்ம: போதும் போதும். நான் எதையும் கேட்க மாட்டேன். கடவுள் உங்களுக்கு ஏன் இப்படி புத்தியை கொடுத்தானோ? (ராமு, டாக்டருடன் வருகிறான்).

ராமு: வாங்க டாக்டர். இங்கு படுத்திருப்பவனே உங்க பேஷண்ட். (ராகவேந்திரரிடம்) சார், இவர்தான் டாக்டர் பை. நல்ல டாக்டர்.

ராக: அது இருக்கட்டும்பா. இந்த பை, எவ்வளவு காசு கேட்கிறார், அதை முதலில் சொல்லு.

ராமு: அதை விடுங்க. இவர் அதிகம் ஒண்ணும் கேட்பதில்லை.

ராக: ஐயோ உனக்கு தெரியாது. பேரு மட்டும் பைன்னு வெச்சிருப்பாரு. கேட்பது நானூறு ரூபாய் கேட்பாரு.

டாக்டர்: இங்கே பாருங்க சார்.

சாரதம்ம: என்னன்னு சொல்லுங்க டாக்டர்.

டாக்டர்: பயப்படும்படியா ஒண்ணும் இல்லைம்மா.

ராக; நாந்தான் சொன்னேனே. என் பேச்சை யார்தான் கேட்குறாங்க. டாக்டர் சொன்னாதான் சரி. சும்மா எதுக்கு இந்த டாக்டர் கீக்டர் செலவுன்னு சொன்னா கேட்டால்தானே?

டாக்டர்: அதுவும் சரிதான். சும்மா பயப்படத் தேவையில்லை.

ராக: நல்லா சொல்லுங்க. கேட்டுக்கோ. எனக்கு தெரியும். டாக்டர் பை ரொம்ப நல்லவர். நோயாளியைப் பார்க்காமல் 3 காசுகூட வாங்குவதில்லை. அப்படி வந்தாலும், பிரச்னை ஒண்ணும் இல்லைன்னா, எதுவும் வாங்காமலேயே போயிடுவார்னு சொன்னேன். சரிதானே டாக்டர்?

ராமு: (ராகவேந்திரர் பேச்சை முடிப்பதற்குள், டாக்டரிடம் ஏதோ சைகை செய்கிறான்)

டாக்டர்: கரெக்ட். ஆனா, எதுவும் ஆகலைன்னா, எதுவுமே ஆகலைன்னு பொருள் இல்லை. இப்போவும் எதுவும்

செய்யாமல் விட்டுவிட்டால், பிறகு எமர்ஜென்ஸி கேஸ் ஆயிடும். அபாய கட்டத்தை நெருங்கிடுவான்.

சாரதம்ம: பார்த்தீங்களா, அதுக்குதான் நான் டாக்டர் வரட்டும்னேன். டாக்டர், உங்ககிட்டே கை கூப்பி கேட்டுக்கறேன். ஏதாவது செய்து என் பையனை பிழைக்க வெச்சிடுங்க. உங்க காலில் வேணா விழறேன்.

ராக: அவ்வளவு சொல்லு போதும். மேலே எதுவும் சொல்லாதே. டாக்டர், வேணும்னா நானும் அவளுடன் சேர்ந்து உங்க காலில் விழறேன்.

டாக்டர்: ஐயய்யோ. நீங்க பெரியவங்க. அப்படில்லாம் சொல்லாதீங்க. இங்கே பாருங்க. நீங்க சொல்லுங்க. சொல்லாமல் போங்க. டாக்டர் நான் என் கடமையை சரியா செய்வேன்.

ராக: அது போதும். எதாவது செய்து இவனை காப்பாத்திடுங்க. உங்களுக்கு..

ராமு: (ஆச்சரியத்துடன்) அவருக்கு?

ராக: புண்ணியம் வரும்னு சொல்ல வந்தேன்.

டாக்டர்: நீங்க எனக்கு ஒண்ணும் கொடுக்கலேன்னாலும் பரவாயில்லை. ஆனால், மருந்து, ஊசி, டாக்சி இதுக்காவது பணம் கொடுத்துதான் ஆகணும்.

ராக: மருந்து சரி. வேறு வழியில்லை. டாக்சிக்கு எதுக்கு நான் பணம் கொடுக்கணும்?

டாக்டர்: ஏன்னா, எல்லா மருத்துவமும் இங்கேயே பார்க்கமுடியாது. முதலுதவி செய்வதற்கும் இங்கே வழியில்லை. டாக்சியில் பட்டணத்துக்கு கூட்டிட்டுப் போகணும், அதுக்காகதான்.

சாரதம்ம: சரி சரி. நீ போய் உடனடியா ஒரு டாக்சி பிடிச்சிட்டு வாப்பா.

டாக்டர்: உடனடியா ஒரு இஞ்செக்ஷன் கொடுக்கணும். நானே போய் அதையும் எடுத்துட்டு ஒரு டாக்சியில் வந்துடறேன். ராமு, நீயும் கூட வா. ரெண்டு பேரும் போயிட்டு வந்துடலாம்.

சாரதம்ம: அப்படியே செய்ங்க.

ராக: (தலை மேல் கை வைத்து அமர்கிறார்) செய்ங்க செய்ங்க. உங்க மனசுக்கு எதெல்லாம் சரின்னு படுதோ அதையெல்லாம் செய்ங்க. என் வீட்டை குடிசை வீடா மாத்திடுங்க.

அனந்த: (மெதுவாக) அம்மா

சாரதம்ம: ஆ! எழுந்தியாப்பா அனந்த. என்னப்பா வேணும்? பஞ்சாமிர்தம் வேணும்னாலும் சொல்லு, தர்றேன்.

ராக: ம். கொடுப்பா கொடுப்பா. பால், தயிர், நெய், தேன் எல்லாம் சும்மாவா கிடைக்குது. கொடுக்கிறாளாம்..

அனந்த: தண்ணீர்.. தண்ணீர்..

சாரதம்ம: தண்ணியா. இதோ வர்றேன். (ஓடுகிறார்)

ராக: தண்ணிதான் வேணுமாப்பா. என்ன ஆனாலும் என் பையனாச்சே. காசின் மதிப்பு அவனுக்கு தெரியும். அதுக்குதான் அவன் வேறெதுவும் கேட்காமல், வெறும் தண்ணீர் கேட்கிறான். நீயும் இருக்கியே?

சாரதம்ம: ஐயயோ. தண்ணீர் குடித்தாவது அவன் கண் திறக்கட்டும். நீங்க கொஞ்ச நேரம் சும்மா இருங்க.

ராக: (அப்படியே அமர்கிறார்).

டாக்டர்: (இஞ்செக்ஷன் ட்யூபுடன் நுழைந்து, அவசர அவசரமாக அதை அனந்தனுக்கு போடுவதற்கு முன், தலை குனிந்து நிற்கிறார்).

சாரதம்மா: ஐயோ. என்ன இது? இஞ்செக்ஷன் போடலியா டாக்டர்?

டாக்டர்: மன்னிச்சிடுங்க. என் கையில் எதுவும் இல்லை. 24 மணி நேரம் கழிச்சிதான் எதுவும் சொல்லமுடியும். சொந்தக் காரங்க யாராவது இருந்தா தந்தி கொடுத்து சொல்லி விடுங்க. நிறைய பணம் சம்பாதிச்சிருக்கீங்க. அதை அப்படியே மிச்சம் பிடிக்கலாம். நீங்கதான் அதை செலவு செய்ய மாட்டேன்றீங்களே?

சாரதம்ம: ஐயயோ. அப்படி சொல்லாதீங்க டாக்டரே. எவ்வளவு வேணா செலவு ஆகட்டும். என்னங்க, டாக்டர் கேட்பதை கொடுத்துடுங்க. இன்னும் உங்க பணத்தாசையை விடுங்க. மகனை விட்டுட்டு பணத்தை வெச்சிக்கிட்டு என்ன செய்வது?

ராக: ஆமாமா. இப்போ காசு செலவழித்தாலும் அது வீண் இல்லை. திரும்பி வரத்தான் போகுது. இவன் பிழைச்சிட்டான் னா, இவன் கல்யாணத்தில் நல்லா வரதட்சிணை வருமே. இருப்பது ஒரே ஒரு மகன். அவனுக்கும் காசு செலவழிக்காம போயிட்டான்னு அவச்சொல் வந்துவிடும். டாக்டரே, ஒரு 25-30 ரூபாய் போதுமா?

டாக்டர்: அது எப்படி போதும் சார்? அதை 100ஆல் பெருக்குங்க.

ராக: அப்படின்னா 2500 ரூபாயா? ஐயோ. நான் 2500 ரூபாய் எப்படி கொடுப்பேன்? ஆனா என்ன செய்வது? மகனும் பிழைக்கணும். காசும் செலவாகக்கூடாது. ஆனா அப்படி ஆகாது போலிருக்கே? இந்தா, பெட்டி சாவி. உள்ளே போய் 2,500 ரூபாய் எடுத்து, 10 தடவை எண்ணு. எண்ணி அதை இந்த டாக்டர் மூஞ்சி மேல் விட்டெறி. நாசமாப் போகட்டும்.

டாக்டர்: நாசமாப் போகட்டும்னு சொல்லி நீங்க பணத்தைக் கொடுத்தா, அதை நான் எடுத்துக்க மாட்டேன். அப்படியும் எடுத்துட்டு, மருந்து கொடுத்தா, அந்த மருந்து வேலை செய்யாது.

ராக: அப்படின்னா நீங்க உங்க பணத்தையே போட்டு மருத்துவம் செய்றேன்றீங்களா? அதாவது செய்ங்க. உங்களுக்கு புண்ணியமாப் போகும். பார்த்தியா டாக்டர் சொல்றதை?

ராமு: டாக்டர் அப்படி சொல்லலைம்மா. எஜமானரின் கையிலிருந்தே கொடுத்தா, காசு வாங்கிக்கறேன்னுதான் சொல்றார்.

ராக: அது எப்படி? சம்பாதிக்கறவங்க யாரும் தங்கள் சொந்த பணத்தை செலவழிப்பதே இல்லை. எல்லாரும் என் கஞ்சத்தனத்தை மட்டுமே குற்றம் சொல்லுங்க.

சாரதம்ம: (பணம் கொண்டு வந்து) இந்தாங்க டாக்டர் நீங்க கேட்ட பணம்.

ராக: ஐயோ இங்கே கொடும்மா. நானே கொடுக்கணுமாம் பணத்தை. ஐயோ 2,500 அப்படியே போகப்போகுதே. ஒரே நிமிடத்தில் என் கை விட்டுப் போகுதே. அதுவும் என் கையாலேயே நானே கொடுக்க வேண்டியதாப் போச்சே. கடவுளே, என்னை மன்னிச்சிடுங்க. நீ எனக்கு கொடுத்ததை, நான் வேறொருவருக்கு கொடுக்கிறேன். என்ன செய்றது? எனக்கு வேறு வழி இல்லை. இந்தாங்க டாக்டர். இரண்டாயிரத்து ஐநூறு. (மயக்கமடைந்து விடுகிறார்)

சாரதம்ம: ஐயோ. இதென்ன? இருந்தாற்போல மயக்கம் போட்டுட்டாரே? டாக்டர், என் தாலியை காப்பாத்துங்க.

டாக்டர்: சரிதான். அவருக்கு ஒண்ணும் ஆகலை. பயப்படாதீங்க. அவருக்கு என்ன ஆயிருக்குன்னு எனக்கு தெரியும். ஆனா அவருக்கு தேவையான மருந்து இப்போ என் கைவசம் இல்லை.

அனந்த: (எழுந்து) அப்பாவிற்கு எதுவும் ஆகலை. சும்மா இரும்மா. எனக்கு தெரியும் அப்பாவுக்கு வேண்டிய மருந்து.

சாரதம்ம: அனந்து. எழுந்தேவிட்டியாப்பா. உடல் நலமாயிருக்கா இப்போ?

அனந்த: ஐயோ. எனக்கு ஒன்றும் ஆகவில்லையம்மா. அதை அப்புறம் சொல்றேன். முதலில் அப்பாவை எழுப்புவோம். (டாக்டரிடமிருந்து பணத்தைப் பெற்று அதை அப்பாவின் மூக்கின் முன் ஆட்டுகிறார்). அப்பா. இங்கே பாருப்பா. உன் 2500 பணம் எங்கேயும் போகலை. இங்கேதான் இருக்கு. எழுந்திருப்பா (அப்பா எழுந்திருக்கும் முன், அனந்த உள்ளே போகிறான்).

ராக: ம். என் பணம் எங்கேயும் போகலையா? அதுக்கு ஒண்ணும் ஆகலையா? மருந்து கொண்டு வரலையா? அப்படின்னா, அனந்து போயே போயிட்டானா? ஐயோ. பாழாப் போன காசுக்கு ஆசைப்பட்டு, மகனை பறிகொடுத்துட்டேனா? நான் பாவி. நான் மகாபாவி.

டாக்டர்: பார்த்தீங்களா உங்க பணத்தாசை. உங்க மகனையே இழந்துட்டீங்க.

ராக: தின்னுட்டேன். தின்னு தண்ணீரும் குடிச்சிட்டேன். பாழான பணத்தால் என் மகனையே கொன்னுட்டேன்.

ராமு: அதுக்குதான் சொன்னேன். அவனுக்கு மருந்து கொடுத்து எழுப்பியிருக்கணும். இப்பவும், உங்க மகனை எழுப்பிக் கொடுத்தா, எங்களுக்கு என்ன கொடுப்பீங்க?

ராக: என்ன கொடுக்கணும்? நீங்க என்ன கேட்டாலும் கொடுக்கிறேன். எல்லாத்தையும் நீங்களே எடுத்துக்கோங்க. என் மகனை மட்டும் என்கிட்டே கொடுத்துடுங்க.

டாக்டர்: கண்டிப்பா கொடுப்பீங்களா?

ராக: ம்ம்.

ராமு: சத்தியமா சொல்லுங்க.

ராக: ஐயோ. நான் சேர்த்து வைத்திருக்கும் பணத்தின் மேல் ஆணை. போதுமா?

டாக்டர்: அப்படின்னா அந்தப் பக்கம் பார்த்து கண் மூடி நில்லுங்க. (அனந்த மெல்ல டாக்டர் பக்கத்தில் வந்து நிற்கிறான்). இப்ப திரும்பி பாருங்க ஸ்வாமி.

ராக: (டக்கென்று திரும்பி, டாக்டரையே கட்டிப் பிடித்தவாறு) அனந்த, உனக்கு ஒண்ணும் ஆகலியாப்பா? சரியாயிடுச்சா?

டாக்டர்: ஸ்வாமி, நான் டாக்டர். அனந்து இங்கே இருக்கான் பாருங்க.

ராக: மன்னிச்சிடுங்க. சரியா பார்க்கலை. அப்போ என் 2500 ரூபாய் எங்கே போச்சு?

ராமு: மகன் பிழைத்தபிறகு பணத்தைப் பற்றி ஏன் கவலை சார்?

ராக: அப்படியில்லை. மருந்து கொடுக்காமல், எப்படி அவனுக்கு சரியாச்சுன்னு சந்தேகம்.

டாக்டர்: அவனுக்கு என்ன பிரச்னை, அது சரியாவதற்கு?

ராக: அப்படின்னா?

அனந்த: ஆமாம்பா. உங்களுக்கு பணத்தாசை போகணும்னு நாங்க இந்த நாடகத்தை ஆடினோம். நான் சாகவும் இல்லை. இவன் டாக்டரே இல்லை. இவன் என் நண்பன் வெங்கடசுப்பா இவன் பேரு.

ராக: ஓ. அப்படி சொல்லு. இப்போ தெரிஞ்சி போச்சு. நீங்க என் பணத்தை அபகரிக்க திட்டம் போட்டிருக்கீங்க. கொடு அந்த பணத்தை. நல்ல வேளை நீயும் சாகலை. என் பணமும் போகவில்லை. ஷாரி... ஏய் ஷாரீ... பார்த்தியா இவங்களை. பணத்தை கொள்ளை அடிப்பதற்கு என்ன வேலை பார்த்திருக்காங்கன்னு.

சாரதம்ம: சரி விடுங்க. அவங்க செய்ததில் என்ன தப்பு இருக்கு?

ராக: ஓ. நீயும் அவங்ககூடதானா இதில்? போங்க. எல்லாரும் இந்த வீட்டை விட்டுப் போயிடுங்க.

சாரதம்ம: பாத்தீங்களாப்பா. நீங்க என்னதான் செய்தாலும், அவருடைய குணத்தை மாத்த முடியாது. அவர் அப்படிதான் விடுங்க.

வெங்கடசுப்பு: பிறந்ததிலிருந்து இருக்கும் இந்த குணம் அவ்வளவு சுலபத்தில் போகக் கூடியது அல்ல. ராயரே.. இன்றிலிருந்தாவது இந்த குணத்தை விடுங்க.

ராக: சரிசரி. நான் மாறிடறேன். என் மகன் தினமும் பை நிறைய காசு கொண்டு வருவான். அவனுடன் சேர்ந்து நீங்க எல்லாரும் தினமும் வெண்ணை மசாலா தின்னுங்க. போங்கய்யா.

ராமு: அதில்லை ராயரே. நீங்க தப்பா நினைக்காதீங்க. உங்க பையன் கையில் காசு இல்லாதபோதும்கூட நாங்க அவனுடைய நண்பர்கள் அவனுடன்தான் இருந்திருக்கிறோம். அதை மறக்காதீங்க.

ராக: இன்றைக்கு இல்லைன்னா நாளைக்காவது பணம் வரும்னு காத்திட்டிருக்கீங்க. எனக்கு தெரியாதா? ஒரு விஷயத்தை புரிஞ்சிக்கோங்க. நான் செத்தாலும் சரி, ஒரு காசு அவன் பேருக்கு வராது. எல்லாத்தையும் அவனுடைய குழந்தைகளின் பேரிலேயே எழுதிடுவேன். அப்போ என்ன ஆகுதுன்னு பார்க்கிறேன்.

வெங்கட: ஒண்ணும் ஆகாது ராயரே. எனக்கு உங்க காசு எதுவும் வேண்டாம். உங்க இஷ்டத்துக்கு நீங்க எழுதுங்க. ஆனா வெறும் பணம் சேர்ப்பதால் ஒரு பிரயோஜனமும் இல்லை. ஒரு காசு சம்பாதித்தாலும், அதற்கு தக்க மரியாதையையும் சேர்த்து சம்பாதிக்கணும். அப்போதே அவற்றை சம்பாதித்ததற்கு ஒரு அர்த்தம் கிடைக்கும்.

ராக: சரி சரி. ஒரு லட்சம் சம்பாதித்து, அதில் 99,999 செலவு செய்தால் ஒரு மரியாதை கிடைக்குமா? சொல்லு.

ராமு: அப்படியில்லை ஸ்வாமி. இப்போ புத்தர், காந்தி, பசவண்ண, புரந்தரதாசர் இவங்கல்லாம் செலவு செய்து அல்லது கடன் வாங்கினாங்களா? இல்லை. பணமே பெரியதுன்னு கடைசி வரை சொல்லிட்டிருந்தாங்களா?

ராக: இல்லை. டாடா பிர்லா இவங்கல்லாம் தங்கள் கஜானாவை காலி செய்திருந்தா, பெரிய மனுசங்கன்னு பேர் வாங்கியிருப் பாங்களா?

வெங்கட: அவங்க அளவுக்கு நாம நினைக்க வேண்டாம். அவங்க நாலு வேளை நன்றாக தின்றாலும், அவங்க சொத்து கரையாது. அதுக்காக தினமும் வெறும் தயிர் சாதம் சாப்பிட்டு பணத்தை மிச்சப்படுத்தணுமா?

ராக: அப்படின்னா சம்பாதிச்சி வெச்சிருப்பதையெல்லாம் நல்லா செலவு செய்து, பிறகு பிச்சைக்காரனைப் போல பிச்சை எடுத்து சாப்பிட்டால், புத்திசாலின்னு சொல்வாங்களா?

ராமு: எதையும் வீண் செலவு செய்யணும்னு அவசியம் இல்லை ராயரே. ஆனால், அவசியமான / தேவையான செலவு களை செய்தே ஆகணுமே? இல்லைன்னா பணம் வைத்துக் கொண்டு என்ன பிரயோசனம்?

ராக: இப்போ நான் என்ன அவசியமான செலவு செய்யலேன்னு சொல்ல வர்றீங்க? கல்யாணம் செய்துக்கலையா? இவங்களை யெல்லாம் காப்பத்தலையா? நல்ல சாப்பாடு / உடை வாங்கிக் கொடுக்கலையா?

அனந்த: ஆமா. கொடுத்திருக்கே. அம்மாக்கு மூன்று வருசத்துக்கு ஒரு புடவை, எனக்கு வருசத்துக்கு ஒரு சட்டை. விளக்கு எரிந்தா மின்சார செலவு வீண். தெரு விளக்கு பளிச்சுன்னு எரியுது. வெளியில் உட்கார்ந்து படி. தினமும் மூன்று வேளையும் கொட்டு-ரசம். இப்படியெல்லாம் செலவு

செய்யறேன்றியா? இதை எவ்வளவு நாள்தான் ஒருவர் பொறுத்துக் கொள்ள முடியும்?

வெங்கட: நீ சும்மா இரு அனந்தா. ஸ்வாமி, நீங்க இவ்ளோ பணத்தை யாருக்காக சேர்த்து வைக்கறீங்க?

ராக: எதையெடுத்தாலும் எதிர்த்து பேசறானே? நான் பணத்தை சேர்த்து வைப்பது என் மகனுக்காக. நான் செத்தபிறகு, அவன் மனைவி மக்களுடன் சந்தோஷமாக இருக்க வேண்டாமா?

ராமு: உங்க காசு ஆசையின் காரணமாக, அவங்கல்லாம் உங்களை தனியே விட்டுட்டா? அப்போ பணத்தை சேர்த்து வெச்சி என்ன பலன் சொல்லுங்க?

ராக: யாரு இவங்களா? யாரும் என்னை விட்டு போகமாட்டாங்க. அந்த பணம் என்னிடம் இருப்பதால்தான், இவங்கல்லாம் என்கிட்டே இருப்பதே. நான் இதையெல்லாம் அவங்க பேரில் உயில் எழுதி, கண் மூடற வரை, யாரும் என்னைவிட்டு போகமாட்டாங்க.

வெங்கட: இல்லை ஸ்வாமி. இந்த தந்தை, தாய், மனைவி, மகன் ஆகிய உறவுகளெல்லாம் பணத்தால் மட்டுமே இருக்குன்னு நீங்க நினைச்சிருக்கீங்க. அது தப்பு ஸ்வாமி. எவ்வளவோ ஏழை மக்கள் ஒரே குடும்பமா ஒண்ணா இருக்கலையா என்ன?

ராக: ஏன் இல்லை? இன்னிக்கு இல்லைன்னா, நாளை பணம் வரும்னு அவங்கல்லாம் சேர்ந்து இருக்காங்க. நீ எங்கே வேணா பாரு. திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து இந்த தெரு முனை கடை வரைக்கும் பணமே பிரதானம்.

அனந்த: அப்படின்னா ஒரு வேளை நான் வீட்டை விட்டு போயிருந்தா?

ராக: போடா போ. என் சொத்திலிருந்து ஒரு பைசாகூட உனக்கு வந்திருக்காது.

அனந்த: எனக்கு உன் சொத்தே தேவையில்லை. நான் மட்டும் போகப்போவதும் இல்லை. கூடவே அம்மாவையும் கூட்டிட்டுப் போவேன்.

ராக: யார் ஷாரீயா? சாத்தியமே இல்லை. அவள் உனக்கு அம்மான்னா, எனக்கு மனைவிடா. அதாவது உனக்கு அம்மா ஆவதற்கு முன்னாடியே எனக்கு மனைவி. உன்னைவிட அவள் குணம் எனக்கு நல்லாவே தெரியும். என் அனுமதி இல்லாமல் அவள் ஒரு அடி கூட வெளியே எடுத்து வைக்கமாட்டாள்.

அனந்த: உனக்கு பிரமை. அவளுக்கு உன் சகவாசம் போதும் போதும்னு ஆயிடுச்சு. இப்போ பாரு. அம்மா அம்மா... (சாரதம்ம வருகிறார்).

சாரதம்ம: என்னடா அனந்த? ஏன் இப்படி கத்தறே?

ராக: அதாவது..

அனந்த: நீ சும்மா இருப்பா. நானே சொல்றேன்.

சாரதம்ம: என்னடா விஷயம் அனந்தா?

அனந்த; ஒண்ணும் இல்லைம்மா. இப்போ உனக்கு நான் வேணுமா, இல்லேனா அப்பா வேணுமா?

சாரதம்ம: என்னடா இது கேள்வி? நீங்க ரெண்டு பேரும் என் ரெண்டு கண்ணு மாதிரி. இதில் எது வேணும்னு எப்படி சொல்வேன்?

அனந்த: சரி அப்படின்னா ரெண்டு பேரும் வேணும்னு அர்த்தம். இப்போ அடுத்த கேள்வி. உனக்கு அப்பா வேணுமா? அப்பாவோட பணம் காசு வேணுமா?

சாரதம்ம: ரொம்ப நல்லாயிருக்கு. நான் என்னிக்கு காசு மேல் ஆசைப்பட்டிருக்கேன்?

ராக: உனக்கு பணம் வேண்டாம். பணம் வைத்திருக்கும் நான் வேணும். அதானே?

சாரதம்ம: அப்படியில்லை. எனக்கு பணம் இல்லைன்னாலும், நீங்கள் இருவரும் ஆரோக்கியமாக இருந்தால் அது போதும்.

அனந்த: பார்த்தியாப்பா. அப்பா அப்படி புரிந்து கொள்ளவில்லை. அப்பாவிடம் பணம் இல்லைன்னா, நாம அவரிடம் இருக்கவே மாட்டோம்னு நினைக்கிறாரு. கத்தரிக்கோல் எதையெல்லாம் கத்தரிக்கணுமோ அவற்றை மட்டுமே கத்தரிக்கும். காற்று, தண்ணீர் இதையெல்லாம் கத்தரிக்காது. அது போல, பணத்தால் எது எதெல்லாம் சாத்தியமோ அதை மட்டுமே செய்யமுடியும். அன்பு, நம்பிக்கை, இதையெல்லாம் பணம் கொடுத்து சம்பாதிக்க முடியாது. உன் பணத்தை நீயே வெச்சிக்கோ. நான், அம்மா இருவரும் கூலி வேலை செய்தாவது பிழைச்சிக்கறோம்.

சாரதம்மா: என்னடா பேசறே? என்னங்க, உங்க பையன் கூலி வேலை செய்து பிழைச்சிப்பேன்னு சொல்றான். சும்மா நிக்கறீங்களே? இப்பவாச்சும் உங்க பணத்தாசையை விட்டுடுங்க.

ராக: சும்மா இரு. கூலி வேலை செய்யறானாம். சும்மா என்னை பயமுறுத்தறான். இங்கே பாருங்க. இஷ்டம் இருப்பவங்க இங்கே இருங்க. இல்லாதவங்க கிளம்பி போயிட்டேயிருங்க. எனக்கு ஒண்ணும் பிரச்னையில்லை.

அனந்த: பார்த்தியாம்மா. இப்பவாச்சும் அப்பாவின் குணம் தெரிந்ததா? இப்போ இருப்பது ஒரே வழி. வாம்மா. நாம இந்த வீட்டை விட்டு போவோம். நம்மை வீட்டு இவர் எப்படி இருக்கிறார்ன்னு நாமும் பார்த்துடுவோம்.

வெங்கட: அனந்த, இது சரிப்படாது. நல்லா யோசனை செய்து பாரு.

அனந்த: நீ ஒண்ணும் சொல்லாதே சுப்பு. அவ்வளவு அக்கறை இருந்தால், நீ இங்கே இருந்து அப்பாவின் சேவையை செய்.

இவ்வளவு சொல்லியும் அவர் புரிந்து கொள்ளவில்லையெனில், நான் எதுக்கு இங்கே இருக்கணும்?

ராமு: சுப்பு. மெதுவா பிரச்னை அதிகமாயிட்டிருக்கு. இது அவங்க குடும்பப் பிரச்னை. நம் தலையில் நாமே குப்பையை போட்டுக்கிட்ட மாதிரி, நமக்கு கெட்ட பெயர் வரணுமா? நாம எதுக்கு இங்கே இருக்கணும்? நாம போயிடலாம் வா.

ராக: (ஒவ்வொருவராக வெளியேறுவதைப் பார்த்தவாறு நிற்கிறார். அனந்தனும், வாம்மா போகலாம்னு அம்மாவுடன் போவதை பார்க்கிறார்).

சாரதம்ம: (கணவனை வணங்கி) நான் போயிட்டு வர்றேங்க. கவலைப்படாதீங்க. இனிமேலாவது கடவுள் உங்களுக்கு நல்ல புத்தியை கொடுக்கட்டும். (வெளியே போகின்றனர்).

ராக: (அவர்கள் போவதை வெளியே எட்டிப் பார்க்கிறார். பிறகு தன் கையில் இருக்கும் காசினைப் பார்க்கிறார்). போங்க போங்க. எல்லாரும் போங்க. உங்களை நம்பி நான் இங்கு பிறக்கவில்லை. வாழவில்லை. எங்கே போறீங்க, எவ்வளவு நாள் வாழறீங்கன்னு நானும் பார்க்கிறேன். போங்க. (வெளியேயிருந்து பாட்டு கேட்கிறது).

ஆத்மஹோதரெ தேஹ அக்னி ஹோத்ரன பாலு
கடினஷல்யகளெல்ல நங்கெ பாலு
மேலெ ஹோதெதா வச்த்ரஜால அகஸன பாலு
ஹொத்திட்ட தனதான்ய தரணிபாலு
மகனு ஹாகுவ பிண்ட அது காகெகள பாலு
நீனு மாடித கர்ம ஒந்தெ நெலெயாகெ
துத்தொந்து பரது பரது

(எதுவும் நிலையில்லாத உலகம் இது. எதுவுமே நம்முடன் இறுதியில் வரப்போவதில்லை என்ற பொருள் தரக்கூடிய பாடலைக் கேட்டு, கண்ணீர் வருகிறது ராயருக்கு. கையிலிருந்த பணம் நழுவுகிறது).

ராக; ஆமாம். எவ்வளவு உண்மை இந்தப் பாட்டு. வாழ்க்கையின் கடைசியில் நான் செய்த பாவம் மட்டுமே என்னுடன் வரப்போகிறது. என்னையே நம்பி வந்த மனைவி, மக்களுக்கு சாப்பாடும் போடாத பாவம் என்னை சுடப் போகிறது. ஐயோ. பாழாய்ப் போன இந்த பணத்தாசை என்னை எந்த வேலை செய்ய வைத்துவிட்டது. இல்லை. இனிமேலும் இதை செய்து பாவத்தை வளர்த்துக் கொள்ள விரும்பவில்லை. ஐயோ. இவங்க எங்கே போனாங்கன்னே தெரியலையே. நான் எங்கே போய் தேடுவது? அனந்தா... சாரதம்மா.. (துக்கத்துடன் நாற்காலியில் அமர்ந்து விடுகிறார்).

சாரதம்ம: (கடகடவென நுழைந்து) என்னங்க, என்ன ஆச்சு? அனந்தா. இங்கே வாடா. உங்கப்பாவை பாருடா. என்னென்னவோ செய்றாரு. சொல்றாரு.

ராக: சாரதம்மா. வந்துட்டியா? பெரிய மனசு உனக்கு. இந்த பாவியின் மேல் கருணை காட்டி வந்துட்டியா? அனந்த எங்கே? அவன் வரலியா? இல்லை. அவன் வரமாட்டான். என்னதான் ஆனாலும், அவன் என் மகன் ஆச்சே. பிடிவாத குணம் என்னைவிட அதிகமாதானே இருக்கும். நான் செத்தாலும் அவன் வரமாட்டான்.

சாரதம்ம: ஐயோ. அப்படியெல்லாம் பேசாதீங்க. நம் அனந்தன் எங்கேயும் போகவில்லை. இங்கேதான் இருக்கான். அனந்தா. உங்கப்பா கூப்பிடுறார் வாடா முன்னாலே.

ராக: எனக்கு தெரியும் சாரதா. கடவுள் மேல் சத்தியம் செய்து சொல்றேன். இனி பணத்தாசையை விட்டுடறேன், அனந்தா, வாப்பா.

அனந்த: (உள்ளே நுழைகிறான்) எனக்கென்னமோ நம்பிக்கை இல்லையப்பா. நாங்கல்லாம் இங்கேயே இருக்கணும்னு நீ நினைப்பதால் இப்படி சொல்றியோன்னு நினைக்கிறேன்.

ராக: இல்லைப்பா. சத்தியமாக இல்லை. உனக்கு எப்படி புரியவைப்பேன்? இவ்வளவு நாள் நான் செய்ததெல்லாம் தப்புதான்னு சொல்லி உங்க காலில் விழறேன்.

சாரதம்ம: என்ன பேச்சு பேசறீங்க. இப்படியெல்லாம் பேசாதீங்க.

ராக: வேற என்ன செய்யணும்றீங்க. (கொத்துச்சாவியை அவனிடம் கொடுத்து) எடுத்துக்கோடா. இது என் பணப் பெட்டியின் கொத்துச்சாவி. இனி நீயே இந்த வீட்டுக்கு தலைவனாக, எல்லா விஷயத்தையும் பார்த்துக்கோ.

அனந்த: நீ இருக்கிற வரைக்கும் அந்த பொறுப்பெல்லாம் எனக்கு வேண்டாம். அம்மாவை கேள். ஒரு விஷயம் சொல்வாள்.

ராக: என்னம்மா ஷாரி. என்ன விஷயம்?

சாரதம்ம: உங்க பையனையே கேளுங்க.

அனந்த: அட, சொல்லும்மா நீயே..

ராக: அட. யாராவது ஒருத்தர் சொல்லுங்க.

சாரதம்ம: அது ஒண்ணுமில்லைங்க. வரதட்சிணை கொடுக்க முடியாதவர்கள்னு கொடகள்ளி வாத்தியார் சம்பந்தத்தை வேண்டாம்னு சொன்னீங்க. அந்தப் பொண்ணைத்தான் இவன் கட்டிப்பானாம்.

ராக: அவ்வளவுதானே? சரிதான். வரதட்சிணையும் வேண்டாம். ஒரு மண்ணும் வேண்டாம். ரெண்டு செலவையும் நானே செய்து திருமணம் செய்து வைக்கிறேன். வேற என்ன வேணும் சொல்லு?

அனந்த: போங்கப்பா (வெட்கத்தில் உள்ளே ஓடுகிறான்).

***

## கிட்டுவும் புட்டாரியும்

பாத்திரங்கள்:
கிட்டு - புது மாப்பிள்ளை
புட்டாரி - கிட்டுவின் தோழன்
மற்றும் சில கிராமத்தினர்

காட்சி - 1 (கிட்டு ஒரு புது மாப்பிள்ளை. அவன் நண்பன் புட்டாரி)

கிட்டு: புட்டாரி, இங்கே வா. உனக்கு ஒரு பரிசு. அது என்னன்னு சொல்லு?

புட்டாரி: பரிசா? அது என்ன சாப்பிடற பொருளா?

கிட்டு: சாப்பாட்டுப் பொருள்னா வேண்டாமா? என்னோட அத்தை வீட்டுக்கு வர்றியா?

புட்டாரி: ஏன்? அங்கே என்ன இருக்கு?

கிட்டு: அங்கே என்ன இருந்தா உனக்கென்ன? எனக்கு திருமணம் ஆகி ஒரு வருசம் ஆயிடுச்சு. அதுக்காக நான் போகணும். தனியா போகக்கூடாது. கூட யாராவது இருந்தா அந்த விஷயமே தனி. யாராவது நான் யாருன்னு கேட்டா, நாந்தான் மாப்பிள்ளைன்னு சொல்லவாவது ஒருத்தர் கூட இருக்கணுமா வேண்டாமா? கேட்குறவங்களுக்கெல்லாம் பதில் சொல்லவும் கூட ஒருத்தர் வேணுமே? அதுக்கே உன்னை கூப்பிடறேன். வர்றியா?

புட்டாரி: எந்த ஊருக்கு போகணும்?

கிட்டு: மைசூர் சாலையில் வரஹாபுரம். இங்கிருந்து 12 மைல் ஆகும். வர்றியா?

புட்டாரி: ஐயோ வேண்டாம்பா. எங்க அப்பா திட்டுவாரு. எங்கம்மா ராயர் வீட்டில் சமையல் செய்றாங்க. அங்கே நானும் போய் ஏதாவது வேலை செய்யவேண்டியிருக்கும்.

கிட்டு: அட. இங்கே வாடா. உங்க அம்மாகிட்டே நான் சொல்றேன். அவர் ஒண்ணும் சொல்ல மாட்டார். ஊரில் நல்ல பண்டிகை சாப்பாடு கிடைக்கும். இனிப்பு, காரம், உப்புமா, காபின்னு ஜமாய்க்கலாம். வராமல் இதையெல்லாம் விட்டுடாதே.

புட்டாரி: எங்கம்மா திட்டினா?

கிட்டு: அட, நாந்தான் உங்கம்மாகிட்டே சொல்றேன்னு சொன்னேனே?

புட்டாரி: எங்கம்மாவிடம் சொல்லி, என்னையும் கூட்டிட்டுப் போ கிட்டு.

கிட்டு: ஆகட்டும் வாப்பா. 12 மைல் ஆகும். நட சீக்கிரம். மோட்டார் கீட்டார்க்கெல்லாம் என்னிடம் காசு இல்லை.

புட்டாரி: (கண்ணை கசக்கியவாறே) என்ன அவ்வளவு தூரம் நடக்கணுமா? கால் வலிக்குமே கிட்டு? வழியில் வயிறு பசிச்சதுன்னா?

கிட்டு: ஒண்ணும் ஆகாது புட்டாரி. பத்ர ஷெட்டியின் கடையில் ஹோஸ்புரி கிடைக்குது. கொஞ்சம் வாங்கிடுவோம். பக்கத்து கடையில் ஒரு அணாக்கு பெப்பர்மிண்ட், ஒரு அணாக்கு பிஸ்கட் இதெயெல்லாம் வாங்கிடுவோம்.

புட்டாரி: என் அம்மாவிடம் சொல்றியா கிட்டு? போட்டுக்கவும் எனக்கு நல்ல ட்ரெஸ்ஸே இல்லையே கிட்டு?

கிட்டு: டிரெஸ் எதுக்கு? போட்டிருப்பதே போதும். கையில் காசே இல்லைடா. சௌகார் ரங்கப்பா மகனிடம், மூன்று நாளுக்கு மட்டும்னு சொல்லி, ஒரு பட்டு வேஷ்டி வாங்கியிருக்கேன். அத்தை வீட்டுக்கு அதை போட்டுக்கிட்டு போனால் ஆச்சு. வா கிளம்பு.

புட்டாரி: உன் மனைவி பேர் என்ன கிட்டு?

கிட்டு: போடா டேய். யாராவது மனைவி பேர் சொல்வாங்களா என்ன?

புட்டாரி: அட சொல்லுப்பா. நீ சொன்னால்தான் நான் வருவேன்.

கிட்டு: ஐயோ இது என்ன தொல்லை? சரி. அவள் பேரு மஞ்சுளா.

புட்டாரி: ஐயோ. மனைவி பேர் சொல்லிட்டான். மனைவி பேர் சொல்லிட்டான். (என்று சொல்லி இரு கைகளைத் தட்டி குதிக்கிறான். இருவரும் கிளம்புகின்றனர்).

காட்சி - 2

(மாமியார் வீடு. தலைமுடியை கட்டி, அதிலும், காதிலும் பூவை சொருகிக் கொண்டு, பட்டு வேட்டி கட்டி, கம்பீரமாக நடந்து வருகிறான் கிட்டு. உடன் புட்டாரியும் நிற்கிறான்)

கிட்டு: புட்டி, உப்புமா எப்படி இருந்தது?

புட்டாரி: நல்லா இருந்தது கிட்டு. ஆனா போதவில்லை.

கிட்டு: நல்லா இருக்குன்னு நிறைய சாப்பிட்டியே?

(இருவர் அங்கு வருகின்றனர்).

ஒருவர்: ஓ. யார் இவர்கள்? புதுசா இருக்காங்களே? நல்லா ஆடை அலங்காரம் ஜோர். ஒருத்தர் பட்டு வேட்டியிலும் இன்னொருத்தர் பழைய சட்டையும். யார் இவங்க?

இன்னொருவர்: ஆஹா. எவ்வளவு பட்டு. அற்புதம். குட் மார்னிங் சார். நீங்க எந்த ஊரு?

கிட்டு: (பதில் சொல்லவில்லை).

ஒருவர்: இவன் பதில் சொல்வதில்லை. கூட இருக்கும் நண்பரைக் கேட்போம். (புட்டாரியிடம்) அப்பா. உன் பேர் என்ன?

புட்டாரி: புட்டாரி.

இன்னொருவர்: புட்டாரிய்யா, இவர் யார் புதுசா இருக்கே?

புட்டாரி: இவர் இந்த வீட்டு மாப்பிள்ளை. தீபாவளி பண்டிகைக்காக வந்திருக்கார். இவர் உடுத்தியிருக்காரே, பட்டு வேட்டி, அது மட்டும் அவருடையது இல்லை.

(இருவரும் கடகடவென்று சிரிக்கின்றனர்).

கிட்டு: அடேய். உனக்கு கொஞ்சமும் விவரமே பத்தலை. மாப்பிள்ளை உடன் இருப்பவன் எப்படி இருக்கணும்? இங்கே பார். யாராவது கேட்டால், இவர் இந்த வீட்டு மாப்பிள்ளைன்னு மட்டும் சொன்னா போதும். இந்த வேட்டி இவருடையது இல்லைன்னு ஏன் சொன்னே? முட்டாள். அதை சொல்லவே தேவையில்லை. சரியா?

(புட்டாரி கோபித்துக்கொண்டு புறப்படத் தயாராகிறான்).

கிட்டு: சரி சரி. நில்லு. கோபம் வேண்டாம். இனி அப்படியெல்லாம் சொல்லாதே. (புட்டாரியும் திரும்பி வருகிறார்).

(இரு கிராமத்தினர் வந்து கிட்டுவிடம் நிற்கின்றனர்).

ஒருவர்: அடடா. பார்க்கும்போதே கண்ணை பறிக்குதே, பட்டு வேட்டி. யாரு இவர்? ஊருக்கு புதுசு போல இருக்கே.

இன்னொருவர்: சார், சார், யார் நீங்க? எந்த ஊரு?

கிட்டு: (பதில் சொல்லவில்லை)

இன்னொருவர்: ஏன் இவர் பேசவே மாட்டேங்கறார்.

ஒருவர்: உனக்கு புத்தி கித்தி இருக்கா? பெரியவங்களுக்கு மரியாதை கொடுக்கவேண்டும். (கிட்டுவைப் பார்த்து) ஸ்வாமி, உங்களுடையது எந்த ஊர்? புதுசா இருக்கீங்களே?

கிட்டு: (பதில் கொடுக்கவில்லை)

புட்டாரி: அடேய் பசங்களா. அதை சொல்வதற்கே நான் இங்கே கூட வந்திருக்கேன். சொல்றேன் கேளுங்க. இவர் இந்த வீட்டு மாப்பிள்ளை. அத்தை வீட்டுக்கு பண்டிக்கைக்காக வந்திருக்கார். அவர் கட்டியிருக்காரே, பட்டு வேட்டி, அது அவருடையதுதான்.

(இருவரும் சிரிக்கின்றனர்)

இருவர்: ஓஹோ. வேட்டி வாடகைக்கு வாங்கியிருக்கார் போலிருக்கு. (போகின்றனர்).

கிட்டு: புட்டாரி, வடிகட்டின முட்டாள் நீ. இவர் யாருன்னு கேட்டாங்க அவ்ளோதானே. வீட்டு மாப்பிள்ளைன்னு சொல்லணும் அதுக்கு. இந்த வேட்டியைப் பற்றி யாராவது கேட்டாங்களா? உன்னால் என் மானம் போகுது. திட்டினா உனக்கு கோபம் மட்டும் வருது. என் தலையெழுத்து. தம்பி, இனி யாராவது கேட்டால், இந்த வேட்டியைப் பற்றி மட்டும் பேசாதே.

புட்டாரி: சரி சரி. புரிஞ்சுது.

(இரு பெண்கள் வருகின்றனர்).

முதல் பெண்: சாவித்ரம்மா, இவர் யாரு புதுசா? வரபூஜைக்கு வந்திருக்கிற மாதிரி அட்டகாசமா இருக்காரே?

இரண்டாம் பெண்: பூ, குங்குமம். பெண்களைப் போல அலங்காரம். ஊர்வலத்துக்கு தயாரா இருக்கிற மாதிரிதான் இருக்காரு.

முதல் பெண்: அது சரி. இவர் யாருன்னு அந்த பையனை கேட்போம். (புட்டாரியிடம்) தம்பி இங்கே வா, இவர் யாரு?

புட்டாரி: உங்க பக்கத்தில் வருவதற்கு எனக்கு வெட்கமா இருக்கு. இங்கேயிருந்தே சொல்றேன் கேளுங்க. இவர் இந்த வீட்டு மாப்பிள்ளை. ஆனா அவர் உடுத்தியிருக்காரே, நல்ல அகலமான பட்டு வேட்டி. அதைப் பற்றி மட்டும் என்னிடம் கேட்காதீங்க. நான் அதைப் பற்றி கண்டிப்பா எதுவும் சொல்ல மாட்டேன்.

(பெண்கள் சிரித்தவாறே போகின்றனர்).

கிட்டு: (கோபத்துடன் புட்டாரியின் காதினை இழுத்துப் பிடித்து) அடேய் முட்டாள். வேலியில் போற ஓணானை பிடித்த மாதிரி உன்னை கூட்டிட்டு வந்தேனே! ஐயோ! என் மானமெல்லாம் போச்சு. ஓடிப்போ. (என்று அடித்து துரத்துகிறான்).

புட்டாரி: (அழுதுகொண்டே ஓடுகிறான்).
***

## அண்ணாஜப்பன் (அமல்தார்) செய்த வசூல்

பாத்திரங்கள்:
அண்ணாஜப்ப = மேலதிகாரி
திம்மப்பையா = கணக்காளர்
பிண்ணி = கிராமத்து ஆள்
லிங்கப்பாஜி = சாஹுகார்

***

காட்சி - 1 :

அமல்தார்: என்னப்பா திம்மப்பையா, என்னது இது? பாத்திரத்தில் என்ன இருக்கு?

திம்மப்பையா: ஒன்றும் இல்லை ஸ்வாமி. என் வீட்டில் தயாரான பசும்பாலில் செய்த வெண்ணெய் கொஞ்சம் இருக்கு. நம் தோட்டத்தில் விளைந்த வெண்டைக்காய் கொஞ்சம் இருக்கு. சுண்டைக்காய் கொஞ்சம் இருக்கு. அவ்வளவுதான். ஸ்வாமியின் ஒப்புதல் இருக்குன்னு முதலாளி சொன்னாரு. பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்.

அமல்தார்: இதையெல்லாம் எடுத்துட்டு வான்னு நான் சொன்னேனா?

திம்மப்பையா: இல்லை இல்லை. வெறும் கையில் ஸ்வாமியை பார்க்கலாமோன்னு நான்தான் இதையெல்லாம் கொண்டு வந்தேன்.

அமல்தார்: சரி. வெண்ணெய், காய்கறி அங்கே இருக்கட்டும். நீ இங்கே வா.

திம்மப்பையா: ஏன் ஸ்வாமி? நான் ஏதாவது தப்பு செய்துட்டேனா?

அமல்தார்: கீழே வைக்கிறியா இல்லையா? இல்லை, உன்னை சஸ்பெண்ட் செய்து, இந்த வேலையை இன்னொருத்தருக்குக் கொடுக்கணும்னு சப்-டிவிஷனுக்கு சிபாரிசு செய்திருக்கிறேன். அதன்படியே செய்துடவா? உன்னை எச்சரித்தே, எனக்கும் போதும் போதும்னு ஆயிடுச்சு.

திம்மப்பையா: (கோபத்துடன்) நான் என்ன தப்பு செய்தேன் சார்? பெரிய குடும்பம் எனக்கு. என் வயிற்றில் அடிச்சிடாதீங்க ஸ்வாமி.

அமல்தார்: திம்மப்பையா. உன் தலையில் நீயே மண் வாரிப் போட்டுக்கறே. நீ வசூல் செய்யவேண்டிய கடன் காலம் முடிந்து ஒன்றரை மாதம் ஆயிடுச்சு. ஆனா அதுக்கு வட்டியே இன்னும் வசூலிக்கலைன்னு உனக்கு வெட்கமா இல்லையா?

திம்மப்பையா: மஹாஸ்வாமி. அவ்வளவு பாக்கி ஆயிடுச்சா? ஒரே ஒரு வீட்டு பாக்கிதான் ஸ்வாமி அது.

அமல்தார்: ஒரே வீடா இருந்தா என்ன? 50 வீடா இருந்தா என்ன? பணம்தானே எல்லாம்?

திம்மப்பையா: நான் என்ன செய்வது ஸ்வாமி? நானும் கேட்டு கேட்டு என் குரல் வத்திப் போச்சு.

அமல்தார்: என்ன செய்வது? வசூல் செய்து கொடு. ஒரு முறையல்ல 10 முறை போய் கேட்கணும். பின்னே நீ ஏன் கணக்காளர்னு இருக்கே?

திம்மப்பையா: 10 முறையல்ல ஸ்வாமி, அவர் வீட்டுக்கு 50க்கும் அதிக தடவை போயிருக்கேன். அதுக்கு பதிலாக, கோயிலுக்கு போயிருந்தாவது, மோட்சம் கிடைத்திருக்கும். அவர் எதுவும் கொடுக்கற மாதிரியே இல்லை.

அமல்தார்: யாருய்யா அது?

திம்மப்பையா: சாஹுகார் லிங்கப்பாஜி.

அமல்தார்: லிங்கப்பாஜி? என்னய்யா அவன்? வட்டி கொடுப்பதற்கு வழியில்லை. சாஹுகாராம். இத்தகையவரிடம் வசூல் செய்வதற்கு உனக்கு தகுதியே இல்லையே, நீயெல்லாம் கணக்காளர்னு ஏன் இருக்கே?

திம்மப்பையா: மஹாஸ்வாமி நான் என்ன செய்யட்டும்? இன்னும் வேற யாராவது இருந்தா, உடனடியா வசூல் செய்து கொடுத்திருப்பேன். அவர் மிகப்பெரிய மனிதர். அவரிடம் அதிகமா பேசவும் முடியாது.

அமல்தார்: எவ்வளவு பெரிய மனிதராக இருக்கட்டும். அது அவர் வீட்டுக்கு மட்டுமே. நாட்டுக்கு, அரசுக்கு கொடுக்க வேண்டிய பணத்தை கொடுக்காமல் இருப்பவன் என்னய்யா பெரிய மனிதன்? முக்கியமாக, உனக்குதான் தைரியம் இல்லை.

திம்மப்பையா: அப்படியல்ல மஹாஸ்வாமி. அவரிடம் பேச்சு வாங்கிக் கட்டிக்கொண்டு பிழைக்கமுடியாது.

அமல்தார்: ஐயோ. ஒரு கணக்காளர்னா எப்படி இருக்கணும்? அவன் எப்படிப்பட்டவனா இருக்கட்டும் 'வட்டி கொடுக்கிறியா இல்லையா?'ன்னு அவனைப் பார்த்து ஒரு கர்ஜனை செய்ய வேண்டாமா?

திம்மப்பையா: ஸ்வாமி. அப்படியும் செய்து பார்த்துட்டேன். அவரிடம் திட்டு வாங்கியதுதான் மிச்சம்.

அமல்தார்: ஐயோ முட்டாள். உன் கண்ணராவி முகத்தைப் பார்த்தால், யாருக்கும் அப்படி செய்யத்தான் தோணும்.

திம்மப்பையா: வட்டி பாக்கிக்காக ஆபீசர்களிடம் திட்டு வாங்கி வாங்கியே என் மூஞ்சி இப்படி ஆயிடுச்சு ஸ்வாமி.

அமல்தார்: (மனதில்). இனி இந்த வட்டி வசூலுக்கு கொஞ்சம் தைரியமானவர்களை போட்டால்தான் சரியாகும். இவனை மாதிரி முட்டாளுக்கு வேலை கொடுத்தால் எப்படி சரியாகும்? (உரக்க) திம்மப்பையா, இந்த புராணமெல்லாம் சரிப்படாது. உன் ரிஜிஸ்டரை கீழே வை.

திம்மப்பையா: நான் அடுத்து என்ன செய்யணும்னு நீங்கதான் சொல்லணும். ஸ்வாமி நீங்கள் ஆஸ்தானத்திற்கு மிகவும் நெருங்கியவர். அவர் எதிரில் ஒரு முறை குரல் உயர்த்தி பேசியிருக்கீங்கன்னு எனக்கு தெரிய வந்தது. அவருக்கு மரியாதை கொடுக்கலைன்னு ஒருவருக்கு டீக்ரேடும் ஆகியிருக்கு. உங்களுக்கு இல்லை. உங்களுக்கு முன்னால் இருந்தவருக்கு இப்படி ஆகியிருக்கு. இப்படியெல்லாம் இருக்கும்போது நான் என்ன செய்யட்டும்? நீங்க சொன்ன மாதிரி கொஞ்சம் கெடுபிடியாக இருந்தா, இந்த வசூல் சரியாக நடக்கும்னு தோணுது.

அமல்தார்: அப்படி வா வழிக்கு. இப்ப புரியுதா?

திம்மப்பையா: நம்மால் முடியாதது எதுவும் இல்லை மஹா ஸ்வாமி. நீங்க ஒருமுறை எங்க கிராமத்துக்கு வந்து, சும்மா பார்த்துட்டுப் போனால் போதும். ஒரே நிமிடத்தில் எல்லாம் வசூலாகிவிடும். எங்களைப் பார்த்தால் அவர்கள் மதிப்பதே யில்லை. உங்களைக் கண்டால் பில் புக் ஒரே நிமிடத்தில் முடிந்துவிடும்.

அமல்தார்: ஐயோ முட்டாள். கடைசியில் நான்தான் வரணுமா? சரி. திம்மப்பையா, நாளை மதியம் 3 மணிக்கு உங்க கிராமத்துக்கு வர்றேன். அங்கேயே ஒரு வண்டியுடன் காத்திரு.

திம்மப்பையா: அப்படியே ஆகட்டும் ஸ்வாமி.

காட்சி - 2

(குரிமந்தே கிராமத்தின் சந்தை. அமல்தாரர், கணக்காரருடன் அமர்ந்திருக்கிறார்).

அமல்தார்: திம்மப்பையா, லிங்கப்பாஜியை இங்கே வரச்சொல். இல்லேன்னா நாமே அங்கே போவோமா?

திம்மப்பையா: எதுக்கு ஸ்வாமி? அவனே இங்கு வரட்டும். டேய். யாரங்கே. பிண்ணி.. திம்மப்பாஜி வீட்டுக்குப் போய், அமல்தார் சார் வந்திருக்கார். உடனே இங்கே வரவும்னு சொல்லி, அவரை கூட்டிட்டு வா.

பிண்ணி: இப்பவே போறேன். (கொஞ்ச நேரத்தில் திரும்பி வருகிறான்).

திம்மப்பையா: பிண்ணி, லிங்கப்பாஜி எங்கேடா?

பிண்ணி: அவர் வரவில்லை சார்.

திம்மப்பையா: என்னதான் சொல்றாரு?

பிண்ணி: உன் அமல்தார் சாருக்கு அறிவு இல்லைன்னு சொல்லு. தைரியம் இருந்தா, அவரை இங்கே வரச்சொல்லு ன்னார்.

அமல்தார்: அப்படியா சொன்னான் முட்டாள். திம்மப்பையா, அவனுக்கு சரியான பாடம் சொல்லியே தரணும்.

திம்மப்பையா: கண்டிப்பா செய்யணும் மகாஸ்வாமி. நீங்க யாருன்னு அவனுக்கு தெரியணும். அப்பப்பா! எவ்வளவு கர்வம்? ஸ்வாமி, தயவு செய்து அவன் வீட்டுக்கு நீங்க ஒரு முறை வரணும். அவன் அப்படியே பயந்துடுவான். ஒரே நிமிடத்தில் பாக்கித் தொகை மொத்தமும் வசூலாகிவிடும். நீங்க வந்திருக்கும் செய்தியை அவன் பொய்னு நினைச்சி, அப்படி சொல்லியிருப்பான்.

அமல்தார்: திம்மப்பையா, வா. போகலாம். பார்க்கலாம். அவல்தார் அண்ணாஜப்பன்னா யாருன்னு அவனுக்கு காட்டறேன்.

காட்சி - 3 (லிங்கப்பாஜியின் வீடு)

அமல்தார்: திம்மப்பையா. உள்ளே போ. நான் வந்திருக்கேன்னு அவன்கிட்டே போய் சொல்லு,

திம்மப்பையா: மஹாஸ்வாமி, அது பயன் தராது. நான் முதலில் உள்ளே போனால் வேலை கெட்டுடும். நீங்களே உள்ளே போனால்தான் சரியா இருக்கும். உங்க முகத்தைப் பார்த்தால், அடுத்த பேச்சே வராது அவனுக்கு. நான் இங்கேயே இருக்கேன். நீங்க உள்ளே போய், பணத்தை வாங்கறீங்க, எண்றீங்க. வர்றீங்க - ஒரே நிமிட வேலைதான்.

காட்சி - 4
(லிங்கப்பாஜி குடித்து விட்டு, சிவந்த கண்களுடன் படுக்கை மீது ஹாயாக அமர்ந்திருக்கிறான். அமல்தார் வருகை)

லிங்கப்பாஜி: யார்றா அது? யார் நீ?

அமல்தார்: நான்தான் இந்த தாலுக்கின் அமல்தார்.

லிங்கப்பாஜி: அமல்தாரா? ஆல்ரைட். சிட் டவுன். என்ன விஷயம்?

அமல்தார்: உன் பாக்கித் தொகை ரூ.1500க்கும் அதிகமாக ஆகிவிட்டது. கடன் காலமும் முடிந்து விட்டது. ஆகவே, இந்த நிமிடமே பாக்கியை கொடுத்துவிடு.

லிங்கப்பாஜி: இந்த நிமிடமே கொடுக்கணுமா? உங்கப்பாதான் என்னிடம் பணம் கொடுத்து வெச்சிருக்கான் போல.

அமல்தார்: கொஞ்சம் மரியாதை கொடுத்து பேசணும். நான் அமல்தார்னு தெரியல போலிருக்கு. சரியான பாடம் புகட்டுவேன், பாத்துக்கோ.

லிங்கப்பாஜி: அமல்தாரா இருந்தா என்ன? அவங்க தாத்தாவா இருந்தா என்ன? ஓய். கெட் அவுட். ஆர் ஐ வில் கிக் யு. (என்று எழுந்து வருகிறான்).

அமல்தார்: (பயத்தில் நடுங்குகிறார்). என்ன சொன்னே? சரி. இப்போ நான் யாருன்னு தெரிஞ்சிக்கிட்டே. இந்த வட்டி...

லிங்கப்பாஜி: என்ன? என்ன சொல்றே? என்னிடம் வந்து வட்டி கேட்குற அளவுக்கு தைரியம் வந்துடுச்சா? (என்று தலை மேல் அடிக்கிறான். தலைப்பாகை கீழே விழுகிறது. கழுத்தைப் பிடித்து இறுக்கி, தள்ளுகிறான். அமல்தார் நடுங்கியவாறே தலைப்பாகை யைப் பிடித்தவாறு வெளியே ஓடுகிறார்).

காட்சி - 5

திம்மப்பையா: ஓஹோ. நான் சொன்னேனே அப்பவே? நீங்க போனீங்கன்னா ஒரே நிமிடத்தில் பாக்கியெல்லாம் வசூல் ஆகிடும்னு. வேலை சுலபமா முடிஞ்சிடும்னு. ஐயோ பாவம். உங்க தலைப்பாகையிலேயே பணத்தை கட்டிக்கொண்டு வரவேண்டியதாப் போச்சா? பை ஒண்ணு கொண்டு வர மறந்து விட்டோம். எவ்வளவு வேகமா கொடுத்துட்டான். எல்லாத்துக்கும் ஒரு அதிர்ஷ்டம் வேணும். அவங்கவங்க முக லட்சணம் அப்படி. எவ்வளவு வசூல் ஆச்சு? தயவு செய்து சொல்லுங்க.

அமல்தார்: சும்மாயிரு திம்மப்பையா. அவன் எத்தகைய மோசமான ராட்சசன்?

திம்மப்பையா: ஏன்? என்ன ஆச்சு? பணம் வரலையா? ஐயயோ. சட்டையெல்லாம் கிழிஞ்சிருக்கே! வேட்டி எல்லாம் மண் அப்பியிருக்கே. டை கலைஞ்சிருக்கு. தலைப்பாகை கீழே விழுது. நீங்க உள்ளே போய் கீழே விழுந்துட்டீங்களா? இந்த வீட்டில் கண்ட இடத்தில் வழுக்கி விடுது போலிருக்கு.

அமல்தார்: ஐயா சாமி, நான் எங்கேயும் விழவில்லை. அவன் நிஜமாவே அரக்கன்தான். நல்லா குடிச்சிருக்கான். சுயநினைவி லேயே இல்லை.

திம்மப்பையா: ஐயோ. நல்லா அடிச்சிருக்கானே. அந்த ராஸ்கலுக்கு எவ்வளவு தைரியம்? அமல்தாரரை அடிப்பதுன்னா எவ்வளவு தைரியம்? அதிலும் நம்ம அமல்தார் அண்ணாஜப்ப, எவ்வளவு நல்லவரு. அவரைப் போய் அடிப்பதா? இதை சும்மா விடக்கூடாது. மஹாஸ்வாமி. தகுந்த தண்டனையை கொடுக்கணும். இதை இப்படியே விட்டுட்டா தப்பாயிடும்.

அமல்தார்: யப்பா சாமி. நீ கொஞ்ச நேரம் வாய் மூடிட்டு இருக்கியா? ஆனது ஆகிப்போச்சு.

(இரு கிராமத்தினர் வருகின்றனர்)

ஒருவர்: ஐயோ. இவர் அமல்தார். ஆனா தலைப்பாகையே இல்லையே?

இன்னொருவர்: சட்டையும் கிழிஞ்சிருக்கு. வேட்டியெல்லாம் மண்ணாயிருக்கு. என்ன ஆச்சு?

திம்மப்பையா: கௌடா. நான் சொல்றேன் கேளுங்க. அமல்தார் வட்டி கேட்பதற்கு லிங்கப்பாஜியிடம் போனாரா? அவன் பிடிச்சி நல்லா அடிச்சிட்டான்.

கௌட: அப்படியா?

அமல்தார்: ஏ நீங்க போங்க (திம்மப்பையாவிடம்) திம்மப்பையா, நான் இந்த தலைப்பாகையை கட்டிக்கறேன். அதுவரைக்கும் நீ கொஞ்சம் சும்மா இருக்கியா?

திம்மப்பையா: அப்படி சொன்னா எப்படி ஐயா? நீங்க சும்மா இருந்தாலும், நான் சும்மா இருக்கமுடியுமா? இந்த தாலுக்குக்கே நீங்க அதிகாரி. நம்ம கிராமத்தில் உங்களுக்கு இப்படி ஆயிடுச்சுன்னா, நீங்க நாளைக்கு எப்படி மறுபடி வட்டி வாங்க வரமுடியும்?

கௌரம்மா, தாயி, நீங்க கேளுங்க. நம்ம அதிகாரியை லிங்கப்பாஜி நல்லா போட்டு அடிச்சிட்டான். வட்டிதான் கேட்கப் போனாரு. இது சரியா? இதுக்கு நீங்களும் சாட்சி. கழுத்தில்

கட்டியிருக்காரே டை. அதை பிடிச்சு நாலு சாத்து சாத்தியிருக்கான். இது சரியா?

கௌரம்மா: எனக்கெதுக்கு இதெல்லாம்? இதுக்கு நான் வேற இவருக்கு சாட்சி சொல்ல வரணுமா? முன்னாடி இருந்த எங்க அதிகாரி, ஒரு நிரபராதி. அவரை இவர்தானே சஸ்பெண்ட் செய்தார். அதுக்கு தகுந்த பலன்தான் இப்போ இவருக்கு கிடைச்சிருக்கு. (போகின்றனர்).

அமல்தார்: திம்மப்பையா. உன் காலில் விழறேன். இந்த விஷயத்தை இன்னும் வேற யார்கிட்டேயும் சொல்லிடாதே. மரியாதையே போகுது. இந்த வட்டியை நீ எப்போ வேணாலும் வசூல் பண்ணிக்கோ. உன்னை இனி நான் ஒண்ணும் சொல்வதில்லை. சரியா?

திம்மப்பையா: என் கணக்கு புத்தகத்தை எடுத்துக்கவா, அப்படியே கொடுத்துடவா?

அமல்தார்: அது உன்னுடையதுதானே. எடுத்துக்கோ திம்மப்பையா.

***

## காரணம் பாதி தண்டனை பாதி

பாத்திரங்கள்:
சங்கரப்பா : கோர்ட் சிப்பந்தி (முன்ஷி)
நாராயண ரெட்டி = இளநிலை வழக்கறிஞர்
சுலைமான் = இளநிலை வழக்கறிஞர்
மாத ஷெட்டி = வாதி
குல்ஷன் = அபராதி
குப்பண்ண = சங்கரப்பாவின் மகன்
தலைமை ஆசிரியர்
சோனி = தலைமை ஆசிரியரின் மனைவி
கௌஸ் சாப் = சிப்பாய்
வெங்கோப ராவ் = தலைமை குமாஸ்தா
ஷெட்டப்ப = காவலர்

காட்சி-1

கிரிமினல் கோர்ட் குமாஸ்தா ஒரு அழுக்கு கோட்டும், தலைப் பாகையும் அணிந்திருக்கிறார். பெரிய மூக்கு, கண்ணாடியில் கயிறு கட்டி அதை கழுத்தில் மாட்டியிருப்பது அவனை அழகாக காட்டுகிறது. தன் முன்னால் இருக்கும் கேஸ் கட்டுகளை பார்த்தவாறு, கண்ணாடியை சரி செய்தவாறு, அவற்றை எடுத்து பார்க்கிறார். இதே சமயத்தில் நாராயண ரெட்டி மற்றும் மாத ஷெட்டி என்னும் இரு கிராமத்தினர் வருகின்றனர்.

நாராயண: ஐயா வணக்கம்.

(குமாஸ்தாவின் காதில் இவர் சொன்னது விழவில்லை)

நாராயண: முன்ஷி அவர்களுக்கு வணக்கம்.

முன்ஷி: ம்ம். யாரது?

நாராயண: நாந்தான் நாராயண ரெட்டி ஸ்வாமி. மாத ஷெட்டி. சாருக்கு வணக்கம் சொல்லு. (இருவரும் வணங்குகின்றனர்).

முன்ஷி: யார் நீங்க? என்ன வேலை?

நாராயண: ஐயா, என் கேஸ் இன்னிக்கு விசாரணைக்கு வருது. இவனே பிரதிவாதி. எட்டு பேர் சாட்சிகளும் வந்திருக்காங்க. தயவு செய்து எங்க வழக்கை கொஞ்சம் சீக்கிரம் கூப்பிடுங்க ஐயா. இன்னிக்கு விட்டுட்டா இந்த எல்லாரையும் மறுபடி கூட்டிட்டு வர்றது ரொம்ப கஷ்டமாயிடும் சாமி.

முன்ஷி: அப்படியில்லை. இதென்ன விளையாட்டுன்னு நினைச்சியா? என் இஷ்டத்துக்கு செய்றதுக்கு? (கேஸ் கட்டிலிருந்து இவர்களின் வழக்கினை தேடியெடுத்து) பார்த்தியா, உன் வழக்கு. கீழே கடைசியில் இருக்கு.

நாராயண: ஐயோ ஸ்வாமி. அப்படி சொல்லாதீங்க. கொஞ்சம் தயவு பண்ணுங்க.

முன்ஷி: நான் என்னய்யா செய்ய முடியும்? வழக்கு எண் படிதான் வரிசையா அழைக்க முடியும்?

நாராயண: ஏதாவது செய்து எங்களை முதலில் அழைக்க முடியாதா ஸ்வாமி?

முன்ஷி: இதே கிராமத்தான்களிடம் பிரச்னை. கடைசியில் இருக்கும் வழக்கை முதலில் கொண்டு வான்னு சொல்லுவாங்க. இது என்ன தமாசுன்னு நினைச்சியா? இது அந்த ஜட்ஜ்னாலும் முடியாது தெரியுமா? போ போ.

நாராயண: கோபப்படாதீங்க ஸ்வாமி. தயவு பண்ணுங்க.

முன்ஷி: தயவு பண்ணனுமா? சரியாப் போச்சு. ஒருவேளை கோர்ட் தீர்ப்பையாவது மாற்றிடலாம். இதை மாத்தணும்னா அது யாராலும் சாத்தியமில்லை. தெரியுமா? எல்லாத்தையும் சுலபமா மாத்திடணும். வந்துட்டாங்க கிராமத்திலிருந்து.

நாராயண: (மாத ஷெட்டியிடம்) ஏய், எடு அதை.

மாத: எவ்வளவு?

நாராயண: எடு சொல்றேன்.

மாத: (தன் வேட்டி நுனியில் கட்டியிருக்கும் முடிச்சினை அவிழ்த்து, எட்டணா எடுக்கிறார்).

நாராயண: அடேய். என்ன இது? மொத்தமா இருப்பதை எடு.

மாத: இன்னும் எவ்வளவு எடுக்கணும்? (அந்த எட்டணாவை வாங்கி, முழு ஒரு ரூபாயை கொடுக்கிறான். இவர்களிடம் கவனமே செலுத்தாமல், தன் வேலையை செய்து கொண்டிருக்கும் குமாஸ்தாவுக்கு அந்த ஒரு ரூபாயைக் கொடுக்கிறான் நாராயண. குமாஸ்தா கோபத்துடன் அந்த ரூபாயை விட்டெறிந்து).

முன்ஷி: திருட்டுப் பசங்களா! எனக்கு லஞ்சம் கொடுக்கிறீங்களா? ஒரு ரூபாய்? இது என்ன உங்க தாத்தா வீடா, உங்க இஷ்டத்துக்கு உங்க வழக்கை கூப்பிடுவதற்கு?

நாராயண: (மாத ஷெட்டியை கோபத்துடன் பார்த்து) உன்னைக் கூட்டி வந்ததுக்கு என்ன ஆச்சு பார்த்தியா? போ அப்படி. கேஸ் போச்சு தண்டத்துக்கு.

மாத: ஏம்பா கத்தறே? எவ்வளவுதான் காசு கொடுக்கணும்?

நாராயண: காசுல்லாம் கிடையாது. சார் ரொம்ப ஸ்ரிக்ட். வரிசையா வரணும்னா வரிசையாத்தான் வரணும்.

மாத: (பையிலிருந்து இன்னொரு ரூபாய் எடுத்து, மொத்தம் 2ரூபாய் ரெட்டிக்கு கொடுக்கிறான். ரெட்டி அதை மெதுவாக முன்ஷியின் மேஜை மேல் வைக்கிறார். குமாஸ்தா தன் பார்வையை அந்த காசின் மேல் வைத்து)

முன்ஷி: எஜமானரே, உங்க முகத்தை பார்த்தால், உதவி செய்யணும் போலதான் இருக்கு. (என்றவாறு அந்த பணத்தை தன் பையில் போட்டுக் கொள்கிறார்).

நாராயண: நன்றி ஸ்வாமி. கூடியமட்டும் விரைவில் என் வழக்கை கூப்பிடணும் (செல்வதற்கு முயல்கிறார்)

முன்ஷி: ஐயா சாமி. கொஞ்சம் இங்கே வாங்க. அந்த கோளிபுரத்து வழக்குதானே உங்களுது?

நாராயண: ஆமாம் சார். அதே அதே.

முன்ஷி: அந்த வழக்கு ரொம்ப 'வீக்'கா இருக்கேப்பா. வழக்கில் விஷயமே இல்லையேப்பா. அப்புறம் எதுக்கு இந்த வழக்கில் நீயா போய் பிராது கொடுத்திருக்கே? யார் உன்னுடைய வழக்கறிஞர்?

நாராயண: ஐயா. முனிசாமிதான் எங்க வழக்கறிஞர்.

முன்ஷி: நல்லவர்தான். சரி வழக்கிற்கு எவ்வளவு காசு கொடுத்தே?

மாத: 150க்கு பேசி இப்போ 100 ரூபாய் கொடுத்திருக்கோம் ஐயா.

முன்ஷி: சரிதான் விடு.

மாத: அது என்ன ஐயா? ஏதாவது விஷயம் தெரிந்தா சொல்லுங்க தயவு செய்து.

முன்ஷி: எனக்கு எப்படி தெரியும்னா கேட்குறே? சரிதான். எனக்கு தெரியாமல் எப்படி எந்த வழக்கும் ஜட்ஜிடம் போகும்? நாந்தானேய்யா ஒவ்வொரு வழக்கிற்கும், அதன் தகுதிக்கேற்ப, இதன் விசாரணை இப்படி இருக்கணும்னு குறிப்பு எழுதி கொடுப்பது. என்னுடைய குறிப்பு இல்லாமல் ஜட்ஜ் அவர்கள் எதையும் செய்ய முடியாதே?

மாத: அப்படின்னா, என்னுடைய வழக்கு ஜெயிச்சிடுமான்னு கொஞ்சம் சொல்லுங்க ஐயா.

முன்ஷி: ஜெயிப்பதா? சரி சரி. இது பொய் வழக்குன்னு என் மேல் 'டி∴பார்மேஷன்' போடாமல் இருந்தால் நல்ல காலம். போலீஸ்காரர்களும் ஏனோதானோன்னு ரிபோர்டிங் செய்திருக்காங்க. இதெல்லாம் தெரியாமல் அநியாயமா நீ வந்து மாட்டிக்கிட்டே.

மாத: அவ்வளவுதானா ஐயா இந்த வழக்கின் கதி?

நாராயண: டேய். கொஞ்ச நேரம் சும்மா இருக்கியா? ஐயா. நீங்க உங்க குறிப்புகளை சரியா எழுதினீங்கன்னா, ஒரு வேளை இந்த வழக்கு பிழைச்சிக்கலாம்.

முன்ஷி: அது சரி. கல்யாணம் பண்ணிக்கோன்னா நீதான் என் பொண்டாட்டின்னானாம். அது மாதிரிதான் இருக்கு.

நாராயண: அப்படி சொல்லாதீங்க ஐயா. உங்களை மாதிரியான நல்லவங்க இல்லேன்னா, நாங்க ஏழைங்க என்ன செய்யறது?

முன்ஷி: சரி சரி. ஆனா, இந்த குறிப்புகள் மட்டும் போதாது. சரியான நேரம் பார்த்து, ஜட்ஜ் காதில் சில விஷயங்களையும் போடணும். ஏன்னா, இந்த வழக்கு பெரியது. வீணா ஆயிரக்கணக்கில் செலவாகக் கூடாது, பிறகு பேரும் போயிடும். அவமானமும் வந்து சேரும் பாரு.

நாராயண: சரியா சொன்னிங்க. எங்களுக்கு நீங்கதான் கதி. பார்த்து செய்யுங்க ஐயா.

முன்ஷி: அதில்லைப்பா. உங்களைப் போல கிராமத்தவர்களுக்கு, போலீஸ்க்கும், வழக்கறிஞர்களுக்கும் காசு பணமா கொடுப்பாங்க. நிஜமா வேலை செய்றவங்களுக்கு எதுவும் கிடைக்காது. அவங்களுக்கும் எதுவும் கொடுக்கணும்னா மட்டும் கை உள்ளே போயிடும்.

நாராயண: அப்படி சொல்லாதீங்க ஐயா. அதுக்கு எவ்வளவு ஆகும்னு சொல்லுங்க.

முன்ஷி: சும்மா ஐயா பையான்னு சொல்லாமல் கிளம்பி போங்க. 100 ரூபாய் இருந்தால் வேலை நடக்கலாம்.

நாராயண: (மாத ஷெட்டியைப் பார்த்து) ஷெட்டி, என்ன சொல்றே? ஊரில் மரியாதையா சுற்றணும். மானத்தை காப்பாத்திக்கணும். காசு பிரச்னையில்லை. ஐயா சொன்னதை கேட்டேதானே? என்ன முழிக்கறே? ஐயாதான் உதவி செய்யறேன்னு சொல்றாரே. எடு காசை. இன்னிக்கு நீ நரி முகத்தில்தான் முழிச்சிருக்கே.

மாத; எவ்வளவு காசு?

நாராயண: சார் சொன்னதை அப்படியே எடு (மெதுவாக மாதனின் காதில்) அவர் 100 கேட்டா 50தான் கொடுக்கணும். 50ரூபாயை மட்டும் எடு.

(நாராயண 50 ரூபாயை முன்ஷியின் மேஜையில் மெதுவாக வைக்கிறார்)

முன்ஷி: இதிலும் பேரம் பேசறீங்களா? ஐயா சாமி. உன்னுடைய கெஞ்சலைப் பார்த்துதான் இதுக்கு நான் ஒத்துக்கொண்டதே.

நாராயண: தப்பா நினைக்காதீங்க ஐயா. தயவு செய்து இதை எடுத்துக்கிட்டு உங்க குறிப்புகளை மாத்திக் கொடுக்கணும்.

முன்ஷி: அதுதான் பணத்தை எடுத்துக்கிட்டேனே. என்னை லஞ்சப் பேர்வழின்னு நினைச்சிக்கிட்டீங்களா?

நாராயண: சிவசிவ. நீங்க எங்களைப் போன்ற ஏழைகளின் தெய்வம் ஐயா. உங்களை அப்படி நினைப்பேனா? (அங்கிருந்து கிளம்புகிறார்).

காட்சி - 3
(கோர்ட் வளாகத்தில், ஒரு முஸ்லிம் ஆள் (சுலைமான்) கூப்பிட்டதால் உள்ளேயிருந்து குமாஸ்தா, பேனாவை தன் காதில் சொருகியவாறு வருகிறார்).

சுலைமான்: சலாம் பாய்

முன்ஷி: சலாம். எதுக்கு என்னை கூப்பிட்டீங்க?

சுலைமான்: எனக்கு ஒரு உதவி செய்யணும் நீங்க.

முன்ஷி: என்ன உதவி அது சார்? நீங்க எந்த ஊரு?

சுலைமான்: எங்க ஊர் பேர் கோளிபுர. பிரதிவாதி ஷெட்டி. இன்னிக்கு எங்க வழக்கு ஒண்ணு விசாரணைக்கு வருது.

முன்ஷி: ஆமா. வருது. அதுக்கு என்ன செய்யணும்?

சுலைமான்: வழக்கை கொஞ்சம் அட்ஜர்ன் செய்யணும் சார். அபராதி மொஹம்மத் அலி ஊருக்குப் போயிருக்கார். நீங்கதான் உதவி செய்யணும். நீங்க சொல்ற மாதிரி நடந்துக்கறேன் ஐயா.

முன்ஷி: ஓஹோ சார். இது முடியாது.

சுலைமன்: ஐயா நீங்க அப்படி சொல்லக்கூடாது. பயங்கர தொந்தரவான வழக்கு சார் இது. எப்படியாவது பிரதிவாதிக்கு தண்டனை கிடைக்கணும் ஐயா.

முன்ஷி: இதுக்குதான் அறிவு வேணும்ன்றது. பிரதிவாதிக்கு தண்டனை தரணும்றீங்க. அட்ஜர்ன் பண்ணிட்டா தண்டனை எப்படி கிடைக்கும்? பிறகு, உங்க வழக்கில் நீங்க ஜெயிப்பது சாத்தியமே இல்லை. அவங்க தரப்பு செமயா இருக்கு. போலீஸ் ரிபோர்டிங்கும் அவங்களுக்கு சாதகமாவே இருக்கு. மொஹம்மத் அலி சாஹப் இல்லே, அவங்க தாத்தா வழக்கறிஞரா இருந்தாகூட இதில் வெல்வது கஷ்டமே.

சுலைமான்: அரே அல்லா. அதென்ன அப்படி சொல்லிட்டீங்க? நம்ம சாட்சிக்கு என்ன குறைச்சல்? அவங்க பக்கத்தை தூக்கி சாப்பிடலாம். இந்த ஒரு முறை அட்ஜர்ன் செய்துடுங்க சாமி.

முன்ஷி: இது என்ன நமாஸ் செய்வதைப் போல சுலபமா? அபராதிக்கு கண்டிப்பா ஜெயில் கிடைக்கும். ஆனா அதுக்கு இந்த லாயர் கீயர், சாட்சி கீட்சி எதுவும் வேலைக்காகாது. புத்திசாலித் தனமா வேலை செய்யணும். நீங்க எந்த பாரிஸடரை வேணா பாருங்க. யோசித்து சொல்லுங்க.

சுலைமான்: அதென்ன ஸ்வாமி? ஏதாவது செலவு செய்யணுமா? நீங்களே சொல்லிடுங்க.

முன்ஷி: சாஹிபரே, இதெல்லாம் நான் சொல்லக்கூடாது. என்ன செய்யறது, நல்லவங்க யாராவது கஷ்டப்படுவதைப் பார்த்தால், எனக்கும் மனசு ரொம்ப கஷ்டமாயிடுது.

சுலைமான்: பஹுத் அச்சா, பஹுத் அச்சா. தயவு செய்து நீங்கதான் என்னை காப்பாற்றணும்.

முன்ஷி: இந்த சாட்சி கீட்சியெல்லாம் வேலைக்கே ஆகாது. இங்கிருக்கும் ஜட்ஜ் புதியவர். அதனால, அவர் தீர்ப்பு எழுதும்போது, நான் ரொம்ப அனுபவசாலின்னு என்னை உள்ளே கூப்பிடுவார். அந்த சமயத்தில் அவர் காதில் நல்ல

விஷயங்களை சொல்லி, கையில் ஏதாவது கொடுத்துட்டா தப்பிச்சோம். அது ஒண்ணுதான் வழி. அதைவிட்டு சும்மா வழக்கை அட்ஜர்ன் செய்தா, உங்களுக்குதான் நஷ்டம், கஷ்டம். சொல்றதை சொல்லிட்டேன், அதுக்கு மேல் உங்க இஷ்டம்.

சுலைமான்: சாப், நீங்கதான் எங்க தெய்வம். என்னன்னு சொன்னீங்கன்னா அதன்படியே செய்றேன்.

முன்ஷி: (மெதுவாக அவர் காதில் மட்டும் விழுமாறு): அம்பது ரூபாய்.

சுலைமான்: (கட்சிக்காரரிடமிருந்து வாங்கி கொடுக்கிறார்) சரியா இருக்கா பாருங்க சார்.

முன்ஷி: கவலைப்படாமல் போயிட்டு வாங்க.

காட்சி-3
வழக்கு நடைபெறும் நாள். முன்ஷி, நாராயண ரெட்டி, மாத ஷெட்டி மூவரும் சந்திக்கின்றனர்.

முன்ஷி: பார்த்தீங்களா ரெட்டி ஜோக்கை? என்னுடைய குறிப்புகள் எப்படி இருந்தது? இந்த கேஸ் டிஸ்மிஸ் ஆயிடும், பிரதிவாதி 1,000 ரூபாய் தண்டம் கட்டப்போறான்னு எல்லா வழக்கறிஞர்களும் காத்திருந்தாங்க. நம் தலைவிதி நல்லாயிருந்தது. வாதம் சரியாக இருந்தாலும், என்னுடைய குறிப்புகளை குற்றம் சொல்ல முடியலை. அப்படி எழுதியிருக்கேன்.

நாராயண: ஆமாம் ஐயா. நீங்கதான் எங்க மானத்தை காப்பாத்தினீங்க. இந்துக்களின் மானத்தையே காப்பாத்திட்டீங்க. (மாத ஷெட்டியைப் பார்த்து) ஏண்டா டேய், காசு கொடுக்கறதுக்கு பயந்தியே, இப்போ பார்த்தியா ரிசல்டை?

முன்ஷி: நீங்க கேட்டதால்தான் நான் இப்படி செய்தேன். இப்போ நான் போகணும்.

நாராயண: நமஸ்காரம் ஐயா. தயவு செய்ங்க.

முன்ஷி: வரட்டுமாய்யா. சரிசரி. சாப்பாட்டுக்கு ஏதாவது காசு கொடு.

காட்சி-4 - (முன்ஷி, சுலைமான் மற்றும் அபராதி சந்திக்கின்றனர்)

சுலைமான்: என்ன ஸ்வாமி இப்படி நம்மை ஏமாத்திட்டீங்களே? நான் எதிர்பார்க்கவேயில்லை.

முன்ஷி: சாகிப், நான் என்ன செய்யட்டும்?

சுலைமான்: இனி என்ன செய்றது? அதான் செய்துட்டீங்களே? உங்களுக்கு காசு வேற கொடுத்தேனே?

முன்ஷி: சாகிப், இந்தாங்க உங்க 50 ரூபாய். நான் ஒண்ணும் மோசமானவல்ல. என்னால் செய்ய முடிந்ததையெல்லாம் நானும் செய்தேன். ஆனாலும் என்னால் முடியவில்லை. ஜட்ஜின் மனசை யாரோ மாத்தியிருக்காங்க.

சுலைமான்: (மகிழ்ச்சியுடன்) நல்லதாப் போச்சு. கொடுங்க. நீங்க பெரிய மனுசந்தான். ஒத்துக்கறேன். நாந்தான் உங்களை தப்பா நினைச்சிக்கிட்டேன். மன்னிச்சிடுங்க.

முன்ஷி: ஒண்ணும் பரவாயில்லை. சாகிப், நான் ஒண்ணும் லஞ்சப்பேய் இல்லை.

சுலைமான்: ஆமாம் சாமி. நீங்க பெரிய ஆள்தான். சலாம்.

முன்ஷி: புரிஞ்சா சரி. நான் எல்லாருக்கும் நல்லவன்.

காட்சி - 5
முன்ஷி சங்கரப்பாவின் வீடு. அவர் மகன் குப்பண்ணா அழுதவாறு வருகிறான். சங்கரப்பா அப்போதே நீதிமன்றத்திலிருந்து வீடு திரும்பி, கோட்டினை கழற்றி வைக்கிறார்.

சங்கரப்பா: குப்பு, ஏம்பா இப்படி அழறே? என்ன ஆச்சு?

குப்பண்ண: (இன்னும் அதிகமாக அழுகிறான்)

சங்கரப்பா: என்ன ஆச்சுன்னு சொல்லிட்டு அழுடா.

குப்பண்ண: ஹெட் மாஸ்டர் என்னை தேர்ந்தெடுக்கவில்லை.

சங்கரப்ப: ஐயோ. என்னடா? இவ்வளவுதான நீ? இன்ஸ்பெக்டர் வந்து எங்க வகுப்பில் தேர்வு செய்தபோது, வகுப்பிலேயே நாந்தான் முதலில் வந்தேன். அப்படின்னு சொன்னே, இப்போ நீ எப்படிடா ஃபெயில் ஆனே?

குப்பண்ண: அந்த பாழாய்ப்போன வாத்தியார் என்னுடைய பெயரையே கொடுக்கவில்லை, அப்பா (என்று அழுகிறான்)

சங்கரப்ப: நீ எவ்வளவு பாடங்களில் ஃபெயில் ஆனாயோ யாருக்குத் தெரியும்?

குப்பண்ண: உடல்நலம் ஒன்றை மட்டும் விட்டுவிட்டு, பாக்கி எதிலேயும் வாத்தியார் என் மார்க்கையே கொடுக்கவில்லை. அந்த கும்பார ஷெட்டியின் மகன், அந்த தப்பண்ணனின் மகன், அவர்களும் என்னைப் போலவே ஃபெயில் ஆனவங்கதான். முதலில் அவங்க பேரும் செலக்ட் செய்யவில்லைதான். பிறகு அவங்க அப்பா வந்து, வாத்தியாரிடம் பேசினபிறகு, அவங்களை செலக்ட் செய்துட்டார். நானும் அதே போல போய் கேட்டேன் 'டாம் டூம் கெட் அவுட். இந்த விஷயமெல்லாம் உன்னைப் போல சின்னப் பசங்க பேசக்கூடாது. உங்க வீட்டில் பெரியவங்க யாராவது இருந்தா கூட்டிட்டு வா. நான் அவரிடம் பேசறேன்' என்று திட்டு அனுப்பிட்டாரு.

சங்கரப்ப: ஏன்? ஏன் பெரியவங்க வந்து பேசணுமாம்? இருக்கட்டும் நான் வந்து விசாரிக்கறேன். நாளைக்கே வந்து ஹெட் மாஸ்டரை பார்க்கறேன். நீ இப்போதைக்கு அழறதை நிறுத்து.

காட்சி-6
பள்ளியில் தலைமை ஆசிரியர் அறை. சங்கரப்பா நுழைகிறார்.

சங்கரப்பா: குட் மார்னிங் சார். பயங்கர பிஸியா இருக்கீங்க போலிருக்கு.

த.ஆசிரியர்: குட் மார்னிங் சங்கரப்பா. தயவு செய்து இங்கே உட்காருங்க (சங்கரப்பா அமர்கிறார்). என்ன விஷயம் சொல்லுங்க.

சங்கரப்பா: நீங்க என்ன சார் கல்வித் துறையில் இருக்கீங்க. எல்லாரையும் போட்டு அல்லாட வைக்கிறீங்க.

த.ஆசிரியர்: அதென்ன சார் அப்படி சொல்லிட்டீங்க?

சங்கரப்பா: அதை சொல்லத்தான் நான் இவ்வளவு தூரம் வந்திருப்பது. தயவு செய்து என் மகன் குப்பண்ணனை செலக்ஷன் செய்துடுங்க.

த.ஆசிரியர்: அதுக்கு எதுக்கு இவ்வளவு தூரம் நீங்க வரணும்? அவன் மேல் எனக்கு அபார நம்பிக்கை இருக்கு. ஆனா நான் என்ன செய்யறது? உடல் நலம் தவிர வேறு எதிலும் அவன் தேர்ச்சியே அடையவில்லையே?

சங்கரப்பா: இன்ஸ்பெக்டர் வந்து வகுப்பில் தேர்வு நடத்தியபோது, அவனே முதலாதவனாக வந்தான். இப்போ என்ன ஆயிடுச்சு?

த.ஆசிரியர்: அதுதான் எனக்கும் வியப்பா இருக்கு. நன்றாக படிக்கவில்லை. நல்லா வெட்டியா காலம் கழிக்கிறான்.

சங்கரப்பா: சார், இந்த வருசம் அவன் இதே வகுப்பில் இருந்துட்டா, அவன் படிப்பு இத்தோட முடிஞ்சிடும். இறுதித் தேர்வுக்கு இன்னும் நான்கு மாதங்கள் இருக்கு. தயவுசெய்து நீங்க செலக்ஷன் கொடுத்துட்டா, தடியால் அடித்து நான் அவனை நல்லா படிக்க வெச்சிடுவேன்.

த.ஆசிரியர்: அது என் கையில் இல்லை. இவங்க நம்பர்களை DDPI துறைக்கு அனுப்பிட்டேன். நான் இனி எதுவும் செய்ய முடியாது.

சங்கரப்பா: நீங்க மனசு வெச்சா, இது ஒண்ணும் பெரிய விஷயமேயில்லை.

த.ஆசிரியர்: கொஞ்ச நாள் முன்னாடி வந்திருந்தீங்கன்னா, ஏதாவது செய்ய முடியுமாயிருந்திருக்கும். இப்போ வந்து என்னைக் கேட்டால், என்ன பண்றது? நீங்க நீதிமன்றத்தில் வேலை செய்பவர். உங்களுக்கு நான் விளக்கணுமா?

சங்கரப்பா: (கொஞ்சம் கோபத்துடன்) இல்லை சார். ஒருவருக்கு ஒரு மாதிரி, இன்னொருத்தருக்கு இன்னொரு மாதிரி செய்ய முடியுமா? அந்த கும்பாரி செட்டியின் மகன், தப்பண்ணனின் மகன் இவங்களும் ஃபெயில் ஆனவங்கதானே? எந்த விதிகளின் படி அவங்களை நீங்க செலக்ட் செய்தீங்க? முதலில் அதுக்கு பதில் சொல்லுங்க. நாங்க என்ன, எதையும் பார்க்காமல் உட்கார்ந்திருக்கோம்னு நினைச்சீங்களா? ம்?

த.ஆசிரியர்: கோபப்படாதீங்க சார். நீங்க இவ்வளவு வருசமா நீதிமன்றத்தில் வேலை செய்தும், இன்னும் ரூல்ஸ் மதிக்கணும்னு சொல்றீங்களே? ஆச்சரியம்.

சங்கரப்பா: ஃபெயிலான அந்த பசங்களுக்கு எப்படி செலக்ஷன் கொடுத்தீங்க? அதுக்கு முதலில் பதில் சொல்லுங்க. பேசாமல், என் பையனுக்கும் செலக்ஷன் போடுங்க. அவ்வளவுதான்.

த.ஆசிரியர்: சார், இந்த காலத்தில் அரசு வேலையில் சேர்வது மிகக் கஷ்டம். அதிலும் நம்முடைய துறை? எதிரிக்கும் வேண்டாம் இங்கே வேலை. வேணும்னே பிரச்னை பண்றாங்க. தொட்டதுக்கெல்லாம் 'எக்ஸ்ப்ளனேஷன்'. இன்ஸ்பெக்டர் வந்தா, பசங்களை பரிட்சை செய்யாமல், வாத்தியார்களை பரிட்சை செய்து பிரச்னை பண்றாங்க. எங்களுக்கு எவ்வளவு கஷ்டம் இருக்குன்னு நான் என்ன சொல்றது?

சங்கரப்பா: நான் எதையோ கேட்டா, நீங்க எதையோ சொல்றீங்க. என் பையனை சரியா பரிட்சை செய்யாமல், என்னை இப்போ

பரிட்சை செய்றீங்க. என் கேள்விக்கு சரியான பதில் சொல்லுங்க.

த.ஆசிரியர்: சங்கரப்பா ஐயா. வெறும் கோபம் கொண்டு பிரயோஜனமில்லை. ஃபெயிலான பசங்களுக்கு, ஹெட் மாஸ்டர் அவரே பொறுப்பு எடுத்துக்கிட்டு, துறைக்கு சிபாரிசு செய்தால் மட்டுமே இதில் ஏதாவது செய்ய முடியும். அந்த இரு பசங்களுக்கு இதே மாதிரிதான் நான் பொறுப்பு எடுத்துக்கிட்டு, செலக்ஷன் செய்தேன்.

சங்கரப்பா: அதே மாதிரி என் பையன் விஷயத்திலும் நீங்க ஏன் பொறுப்பு எடுத்துக்கக் கூடாது?

த.ஆசிரியர்: சரியா சொன்னீங்க. வெறும் பொறுப்பு எடுத்துக்கிட்டா போதுமா? அந்த பசங்களை தயார் செய்வதற்கு எவ்வளவு கஷ்டப்படணும்? பள்ளியில் படிப்பது மட்டும் போதுமா? எவ்வளவு ப்ரைவேட் ட்யூஷன் கொடுக்க வேண்டியிருக்கு? இவ்வளவு செய்தும் அந்த மாணவன் பொதுத் தேர்வில் தேர்ச்சி அடையலேன்னா எங்க கதி என்ன? டீக்ரேட் அல்லது டிஸ்மிஸ்தான் எங்களுக்கு. நீங்களே சொல்லுங்க. இதை நாங்க எப்படி எதிர்கொள்றது?

சங்கரப்பா: என் பையனுக்கும் அதே ப்ரைவேட் ட்யூஷன் கொடுங்களேன். யாரு வேண்டாம்னு சொன்னது?

த.ஆசிரியர்: அதுக்கு ட்யூஷன் ஃபீஸ் கட்டணும். பிறகு செலக்ஷன் சிபாரிசுக்கு 'ஹானரேரியம்' கட்டணம் கட்டணும். இதுக்கெல்லாம் நீங்க தயாராக இருந்தா கண்டிப்பா செய்யலாம். உங்க பையன் மேல் எனக்கு நல்ல நம்பிக்கை இருக்கு. நல்ல புத்திசாலிதான். அவனுக்கு ஒரு வருட படிப்பு நஷ்டமாவதில் எனக்கும் இஷ்டம் இல்லை. ஆனால், அதுக்கான பொறுப்பு எடுத்துக்கணுமே நினைச்சா, உடம்பு நடுங்குது.

சங்கரப்பா: (மனதில் - நினைச்சா மாதிரி கடைசியில் பணத்தில் தான் வந்து முடியுது). இதுக்கெல்லாம் எவ்வளவு ஆகும்னு சொல்லுங்க. கொடுத்துடறேன்.

த.ஆசிரியர்: நீங்க அதுக்காக ரொம்ப டென்சன் ஆகக்கூடாது. இது கல்வி சம்பந்தப்பட்ட விஷயம். மகிழ்ச்சியும் மரியாதை யுமே இங்கு முக்கியம்.

சங்கரப்பா: எனக்கு மிகவும் மகிழ்ச்சிதான் சார். கடவுள் சத்தியமா மகிழ்ச்சிதான். எவ்வளவு ஆகும்னு தயவு செய்து சொல்லுங்க சார்.

த.ஆசிரியர்: 'செலக்ஷன் ஹானரேரியம்' பத்து ரூபாய்; 'ட்யூஷன் கட்டணம்' நாற்பது ரூபாய். மொத்தம் ஐம்பது ரூபாய். ஒரே சமயத்தில் கொடுத்துட்டா நல்லது. இதில் எவ்வளவு கஷ்டம் இருக்குன்னு நீங்களே யோசித்து பாருங்க.

சங்கரப்பா: கஷ்டம் யாருக்கு? பணம் வாங்குறவங்களுக்கா? கொடுக்கறவங்களுக்கா?

த.ஆசிரியர்: உங்களுக்கு பணம் கொடுப்பதில் கஷ்டம் இருந்தா, கண்டிப்பா கொடுக்க வேண்டாம் சார். எதுவும் கட்டாயமில்லை. கல்விக்கும் கட்டாயத்திற்கும் ரொம்ப தூரம் ஸ்வாமி. உங்களுக்கு பலத்த யோசனை இருக்கும்போல தோணுது. பணப்பிரச்னை வேற. ஆகவே இதில் கட்டாயம் ஒன்றும் இல்லை. நீங்க கிளம்பலாம்.

சங்கரப்பா: யோசனை ஒண்ணும் இல்லை சார். வெறும் ஆடு மேய்க்கிற துறைன்னு நினைச்சேன். ஆனால், இதில் இருக்கும் லாபம் வேறு எந்தத் துறையிலும் இல்லைன்னு இப்போ தெரியுது. நீங்களும் சரியா ஐம்பதே ரூபாய் கேட்டீங்க. உங்களுக்கு ஏதாவது கனவு கினவு விழுந்ததா? சரி போகட்டும். இந்தாங்க ஐம்பது ரூபாய். தயவு செய்து, என் பையனை பார்த்துக்குங்க. இனி அவனது எதிர்காலம் உங்க கையில்.

த.ஆசிரியர்: கண்டிப்பா சார். இனி அவனைப் பற்றிய கவலையே உங்களுக்கு வேண்டாம். அதெல்லாம் இனி எங்களை சேர்ந்தது (என்று அந்த பணத்தை தன் பாக்கெட்டில் போட்டுக் கொள்கிறார்).

காட்சி-7

தலைமை ஆசிரியர் வீடு. மாலை வேளை. த.ஆசிரியர் பள்ளியிலிருந்து வந்து, நாற்காலியில் அமர்கிறார்.

த.ஆசிரியர்: ஏய், சோனி. இங்கே வா. என்ன செய்திட்டிருக்கே உள்ளே?

சோனி: வந்துட்டே இருக்கேனே. ஏன் இப்படி கத்தறீங்க? (குழந்தையை கையில் ஏந்தி, வாயில் வெற்றிலை பாக்குடன் வருகிறார்).

த.ஆசிரியர்: ஐயயோ. உன்னை ஏன் கூப்பிட்டேன்? இள-கர்ப்பிணியாச்சே (தாய்). அதுவே எனக்கு மறந்து போச்சு.

சோனி: எதைத்தான் நீங்க ஞாபகம் வெச்சிருக்கீங்க?

த.ஆசிரியர்: கோபப்படாதேம்மா. சும்மா தமாஷுக்கு சொன்னேன். இந்தா 50 ரூபாய்.

சோனி: இன்றைய வசூல் இதுதானா?

த.ஆசிரியர்: வசூலா? இதெல்லாம் உங்க அப்பா போலீஸ்காரராச்சே, அவர்கிட்டே சொல்லு. என்னுடையது சம்பாத்தியம். வியர்வை சிந்தி உழைச்சது. குரல் வற்றிப் போகும் அளவுக்கு கத்தி சம்பாதிச்சது. தெரியுதா?

சோனி: சும்மா சொன்னேன். அதுக்குள்ளே கோபம் வந்துடுச்சா? ஐயோ மறந்தே போச்சு. உங்களுக்கு ஏதோ கடிதம் வந்திருக்கு. மேலே 'அவசரம்'னு எழுதியிருக்கு. (உள்ளேயிருந்து ஒரு கடிதத்தைக் கொண்டு தருகிறார்).

த.ஆசிரியர்: (அதை பிரித்துப் படிக்கிறார். முகம் கலவரம் அடைகிறது) ஐயோ கிருஹச்சாரமே. இது என்ன புது பிரச்னை?

சோனி: ஐயோ என்ன ஆச்சுங்க? என்ன பிரச்னை?

த.ஆசிரியர்: இனி என்ன சொல்றது? தலை மேல் பாறாங்கல்லே விழுந்துடுச்சு. என்னை ஷிவமொக்க தாலுகா கரடிஹள்ளி பள்ளிக்கு பணி மாறுதல் செய்திருக்காங்க.

சோனி: ஐயோ. என்ன பிரச்னை இது? இந்த ஊருக்கு வந்து இன்னும் ஒரு வருசம்கூட ஆகலையே? அதுக்குள்ளே மாறுதலா? ஏன் அப்படி?

த.ஆசிரியர்: இது அந்த ராஸ்கல், ஸ்கௌண்ட்ரல், தலைமை குமாஸ்தா வெங்கோபராவ் அவனின் வேலையாதான் இருக்கும். எனக்கும் அவனுக்கும் எப்போதும் பிரச்னைதான்.

சோனி: இந்த ஊரில் சம்பளத்தைத் தவிர மேலே சுமார் 400 ரூபாய் வந்துட்டிருந்தது. இதை யாராவது விட்டுட்டு போவாங்களா? நம் வீட்டில் நிறைய குழந்தைகள் இருக்கு. நானோ இப்பதான் குழந்தை பெற்றிருக்கேன். இத்தகைய சமயத்தில் பணி மாறுதல்னா அது எப்படி முடியும்? கொஞ்சமாவது அவங்க சிந்திக்க மாட்டாங்களா?

த.ஆசிரியர்: சரிதான். நானா போய் என்னை வேற ஊருக்கு மாத்துங்கன்னு கேட்டேனா? உடனடியாக அடுத்தவருக்கு பொறுப்பு ஒப்படைக்கணும்னு வேற சொல்லியிருக்காங்க.

சோனி: என்ன செய்யறது இப்போ? புதுசா குழந்தை பிறந்திருக்கு. பெரிய குடும்பம் வேற. திடீர்னு இவ்வளவு பேரையும் முன்னூறு மைல் தாண்டி ஊருக்குப் போகணும்னா எப்படி? எங்களையெல்லாம் இங்கேயே விட்டுட்டு நீங்க மட்டும் போகலாம்னா, எங்களை யார் பாதுகாப்பது? சமையல் செய்வது யார்? தண்ணீர் பிடிப்பது யார்? இளம் தாய்க்கு சரியான பத்திய சமையல் செய்வது யார்? பசங்களின் துணிகளை துவைத்து மடிச்சி வைப்பது யார்?

த.ஆசிரியர்: நீ சொல்றதெல்லாம் சரிதான். நானும்தானே கஷ்டப்படறேன். அந்த ஆசாமிக்கு யாரோ லஞ்சம் கொடுத்து, இப்படி செய்ய சொல்லியிருக்கணும். இவரை எடுத்து அங்கே போடு. அவரை இங்கே மாத்து. காசு கொடு. என்னை இந்த

ஊருக்கு மாறுதல் செய்தபோதும், அவனுக்கு நான் காசு எதுவும் கொடுக்கலை. அதுக்காக இப்போ பழி வாங்கறான்.

சோனி: அவர் ஒரு சாதாரண குமாஸ்தாதானே? அவரைவிட பெரிய ஆபீசரை பார்த்து பேச வேண்டியதுதானே?

த.ஆசிரியர்: அவர் ஒரு தண்டம். குமாஸ்தா சொல்றதுதான் அங்கே சட்டம். கையெழுத்து போடுன்னா உடனடியா போட்டுடுவார்.

சோனி: சரியாப் போச்சு. அப்போ அந்த குமாஸ்தாவிடமே போய் பேசுங்க. இப்போ இந்த மாறுதல் தேவைதானா?

த.ஆசிரியர்: அவனை அப்படியே கொன்னுடலாமான்னு தோணுது. ஆனா ஒண்ணும் பிரயோஜனமில்லை. ஏழையின் கோபம் எதுக்கும் உதவாது. ஏதாவது லஞ்சம் கொடுத்தே ஆகணும் போலிருக்கு. நான் இன்னிக்கு இரவே புறப்படறேன். சரி அந்த பணத்தைக் கொடு.

காட்சி-8

DDPI ஆபீஸ். தலைமை குமாஸ்தா அறை. வெளியில் காவலுக்கு நிற்கிறார் கௌசுசாப். த.ஆசிரியர் வருகிறார்).

த.ஆசிரியர்: என்னய்யா கௌசுசாப், நல்லாயிருக்கியா?

கௌசுசாப்: ஜி. வணக்கம். நல்லா இருக்கீங்களா?

த.ஆசிரியர்: த.குமாஸ்தா உள்ளே இருக்காரா? கொஞ்சம் அவரை பார்க்கணுமே?

கௌசுசாப்: இருக்காரு ஸ்வாமி (த.ஆசிரியர் உள்ளே போக முயற்சிக்கையில், அவரை தடுக்கிறார்). ஆனா, உள்ளே போகாதீங்க சார்.

த.ஆசிரியர்: நான் ஒரு த.ஆசிரியர் தெரியுமா? அவசரமா ஒரு விஷயமா த.குமாஸ்தாவை பார்க்கணும்யா. நான் உள்ளே

போனா அவர் எதுவும் சொல்ல மாட்டார். பயப்படாதே. (மறுபடி உள்ளே போக முயல்கிறார்).

கௌசுசாப்: சார். கொஞ்சம் நில்லுங்க. வர்றவங்களையெல்லாம் அப்படியே விடுவதற்கா, எனக்கு சம்பளம் கொடுத்து வெச்சிருக்காங்க? இன்னிக்கு அவரை பார்க்கவே முடியாது. போங்க போங்க. என் வேலைக்கு வேட்டு வைப்பதே உங்களுக்கெல்லாம் வேலையா போயிடுச்சு.

த.ஆசிரியர்: ஐயா. அப்படி சொல்லாதீங்க. இன்னிக்கு நான் அவரை பார்த்தே ஆகணும். பார்க்கலேன்னா காரியமே கெட்டுடும். உனக்கு நூறு முறை வணக்கம் சொல்றேன். என்னை உள்ளே விடுய்யா.

கௌசுசாப்: நூறு வணக்கம். வயிறே நிரம்பிப் போச்சு. என் மனைவி மக்கள் எல்லாரும் பிழைச்சிட்டாங்க. உங்க வணக்கமெல்லாம் எனக்கு வேண்டாம். (மனதில்) வணக்கத்தினாலேயே வேலை முடிச்சிக்கலாம்னு நினைக்கிறாங்க.

த.ஆசிரியர்: (பையிலிருந்து ஒரு ரூபாய் எடுத்து) சரிதான்யா நீ சொல்றது. அவசரத்தில் எனக்கு தோணவே இல்லை. ஐயோ பாவம். பெரிய குடும்பஸ்தன். சரி இந்தா போய் நாஷ்டா சாப்பிடு (என்று ஒரு ரூபாயை கொடுக்கிறார்).

கௌசுசாப்: (பெரிய வணக்கத்தைப் போட்டு) கொஞ்சம் இருங்க சார். உள்ளே போய் பார்த்துட்டு வந்து சொல்றேன். (உள்ளே போய் ஒரு நிமிடத்தில் வருகிறான்). சரி சார். உள்ளே வாங்க. (த.ஆசிரியரும் உள்ளே போய் ஒரு நாற்காலியில் அமர்கிறார். கை கூப்பி வணக்கம் சொல்கிறார்).

த.குமாஸ்தா: என்ன த.ஆசிரியரே? உங்களுக்கு பணி மாறுதலுக்கான ஆர்டர் வந்து சேர்ந்ததா?

த.ஆசிரியர்: ஆமாம் ஸ்வாமி. அதுக்கே உங்களைப் பார்க்கணும்னு ஓடி வந்தேன்.

த.குமாஸ்தா: கரடிஹள்ள பள்ளிக்குதானே உங்களுக்கு மாறுதல் வந்திருக்கு?

த.ஆசிரியர்: ஆமாம் ஸ்வாமி. கரடிஹள்ளியில் போய் விழுவதற்கு முன் ஒருமுறை உங்களைப் பார்த்துவிட்டு போகலாம்னு வந்திருக்கேன் ஸ்வாமி.

த.குமாஸ்தா: சரி சரி. சரியா பார்த்துடுங்க.

த.ஆசிரியர்: என் மேல் உங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம் ஸ்வாமி? நான் மாறுதல் பெற்று இன்னும் ஒரு வருசம்கூட ஆகலை. வீட்டில் இருபதே நாள் ஆன குழந்தை இருக்கு. ஏன் ஸ்வாமி இப்படி செய்தீங்க?

த.குமாஸ்தா: என்னய்யா இப்படி பேசறீங்க? அது என்னுடைய தவறு / வேலை இல்லையே?

த.ஆசிரியர்: இல்லை ஸ்வாமி. அது என்னுடைய தப்புதான். என் தலையில் கல் போட்டுடாதீங்க. என் மாறுதலை தயவு செய்து நிறுத்திடுங்க.

த.குமாஸ்தா: ரத்து செய்யணும்னா என்னய்யா அர்த்தம்? நான் என்ன ஆபீசரா? மேலிடத்திலிருந்து வந்த உத்தரவு அது. அதை உனக்கு அனுப்பறது என் தப்பா? பைத்தியக்காரன் மாதிரி பேசறீங்களே?

த.ஆசிரியர்: ஸ்வாமி எனக்கு எல்லாம் தெரியும். இந்த ஆபீஸில் எல்லாமே உங்க கண்பார்வையில்தான் நடக்குது. நான் உங்களுக்கு பெரிய அவமரியாதை செய்துட்டேன். போன பணி மாறுதலின்போது உங்களை சரியா கவனிக்கலை. இப்போ அதை மனதில் வெச்சிக்காதீங்க.

த.குமாஸ்தா: சரியாப் போச்சு. இதென்னய்யா உன்னோட ரோதனை? என் மகளோட திருமணப் பிரச்னை எனக்கு ஒரு பக்கம். நாளன்னிக்கு முகூர்த்தம். கடன் கிடன் வாங்கி எல்லாத்தையும் தயார் செய்து வெச்சிருந்தா, மாப்பிள்ளையா

வரப்போறானே, அந்த மகாபுருஷன் ‘ஐம்பது ரூபாய் பெருமானமுள்ள ஒரு கை கடிகாரம் கொடுத்தா நான் வந்து தாலி கட்டறேன்’னு சொல்றான். இதுக்கு நான் யாரிடம் போவது? நான் என்ன லஞ்சம் வாங்குபவனா? இந்த பிரச்னையில் நான் மூழ்கிட்டிருக்கும்போது, நீ இங்கே வந்து அழுதிட்டிருக்கே. எல்லாம் என் தலையெழுத்து.

த.ஆசிரியர்: ஸ்வாமி தன்யனானேன். இந்தாங்க 50 ரூபாய். (என்று ரூபாயை மேஜை மேல் வைக்கிறார்). எனக்கு இந்த உதவி செய்ய வைத்ததற்கு நன்றி. தயவு செய்து என் பணி மாறுதலை மட்டும் ரத்து பண்ணிடுங்க.

த.குமாஸ்தா: என்னய்யா, நான் ஏதோ சொன்னா, நீ ஏதோ புரிஞ்சிண்டிருக்கே. பணம் கொடுன்னு உன்னை நான் கேட்டேனா? சரி அதையும் நான் எடுத்துக்கிட்டா, நம் த.குமாஸ்தா பணம் வாங்கிட்டாருன்னு நீயே ஊரெல்லாம் போய் தண்டோரா போட்டுடுவியே?

த.ஆசிரியர்: ஸ்வாமி, எங்கப்பா மேல் சத்தியமா, நான் அப்படியெல்லாம் செய்ய மாட்டேன். இது லஞ்சம் அல்ல. உங்க மகளோட திருமணத்திற்காக நான் கொடுத்த அன்பளிப்புன்னு நினைச்சிக்கோங்க. முதலில் என் பணி மாறுதலை மட்டும் நிறுத்திடுங்க. அது போதும்.

த.குமாஸ்தா: பெரிய தர்ம சங்கடத்தில் வந்து நிறுத்திட்டே என்னை. இப்போ நான் என்ன பண்றது? மேலிடத்திலிருந்து ப்ரஷர். சரி இருக்கட்டும். உனக்கு பதிலா ஒருத்தன் வர்றானே, அவனுக்கு ட்ரெயினிங் ஆகியிருக்கா தெரியுமா?

த.ஆசிரியர்: இல்லை ஸ்வாமி இல்லை.

த.குமாஸ்தா: நல்லது நீ பொழச்சிட்டே. நீ போயா. பணி மாறுதலை ரத்து செய்து நாளையே ஒரு உத்தரவு போடறேன். நீ யாருக்கும் பொறுப்பு கொடுக்கத் தேவையில்லை.

த.ஆசிரியர்: ஸ்வாமி. அனேக நமஸ்காரங்கள். என்னை காப்பாத்திட்டீங்க. உத்தரவு கொடுத்தால் நான் புறப்படறேன்.

த.குமாஸ்தா: போய் வாங்க. நல்லாயிருங்க. ஏதோ பணம் கொடுத்ததால் நான் இந்த வேலையை செய்யறேன்னு நினைக்காதீங்க.

த.ஆசிரியர்: சத்தியமா இல்லை ஸ்வாமி. உங்களுக்கு என் மேல் வரும் மரியாதை அதுக்காகவே நீங்க இதை செய்யறீங்கன்னுதான் நான் நினைக்கிறேன். (கிளம்பிப் போகிறார்).

காட்சி-9 (மாத ஷெட்டி மற்றும் நாராயண ரெட்டி)

நாராயண: ஏய். நல்லா கண் திறந்து பாருப்பா. நீ அந்த வழக்கில் ஜெயிச்சி நாலு மாசம் ஆயிடுச்சு. தண்டனை முடிந்து அபராதி வெளியில் வந்தும் விட்டான். எனக்கு கொடுக்க வேண்டியதை இன்னும் கொடுக்காமல் இழுத்தடிக்கிறியே?

மாத: ஏன் உனக்கு நான் எதையும் கொடுக்கவில்லையா? டிபன், சாப்பாடு, மோட்டார் செலவு எல்லாமே என் செலவுதானே. நீ கேட்டபோதெல்லாம் பணம் கொடுத்தேனே.

நாராயண: என்ன சாப்பாடு, மோட்டருக்கு கொடுத்ததையெல்லாம் சொல்லிக் காட்டறியா? அதுக்காகதான் நான் இந்த வழக்கை உனக்கு ஜெயிச்சிக் கொடுத்தேனா? வழக்கு நல்லபடியா முடிந்தா, உனக்கு பணம் கொடுக்கறேன்னு நீதானே சொன்னே?

மாத: அதுக்கு ஏன் இப்படி புலம்பறே? நான்தான் கொடுக்கறேன்னு சொன்னேனே? கொடுக்க மாட்டேன்னு எப்பவாவது சொன்னேனா?

நாராயண: நாலு மாசமாயிடுச்சு. இன்னும் எப்போ தரப்போறே? அந்த முன்ஷிக்கு லஞ்சம் கொடுத்து, உன் வழக்கை ஜெயிச்சி கொடுக்காட்டி, உன் வீடு சொத்து எல்லாத்தையும் வித்துட்டுப்

போயிருக்கணும். இப்போவாவது பணத்தை கொடுக்கறியா இல்லையா? அதை மட்டும் சொல்லு.

மாத: கண்டிப்பா கொடுக்கறேன்பா. அந்த வழக்கிற்குப் பிறகு என்னிடம் எப்போவாவது பணம் இருந்ததைப் பார்த்தியா? இருந்திருந்தா கண்டிப்பா கொடுத்திருப்பேன். என்னிடம் பணம் இருக்கான்னு மட்டும் சொல்லு.

நாராயண: சரி. கண்டிப்பா கொடுப்பியா?

மாத: கொடுக்கலேன்னா மட்டும் கேளு.

நாராயண: அப்படின்னா ஒரு வேலை செய். நீ வேலை செய்யறியே அந்த நிலத்தின் முதலாளி - தலைமை குமாஸ்தா, அவருக்கு ஒரு கடிதம் எழுது. 'உங்க நிலத்தில் மேடுபள்ளம் நிறைய இருக்கு. அதனால் விவசாயமே செய்ய முடியல. இந்த கடிதத்தைக் கொண்டு வருபவரிடம், அந்த நிலத்து ரிப்பேருக்காக ஐம்பது ரூபாய் கொடுத்து அனுப்பவும். இல்லைன்னா, இந்த நிலத்தை நீங்களே பார்த்துக் கொண்டு, என்னை விட்டுவிடவும்' அப்படின்னு எழுதிக் கொடு. நான் போய் வசூல் செய்துட்டு வர்றேன்.

மாத: அப்படியே செய்வோம். நானும் வரட்டுமா?

நாராயண: வேண்டாம்.

மாத: என்னால் எப்படி எழுத முடியும்? நீயே எழுதுப்பா. நான் கைநாட்டு வைக்கிறேன். (நாராயண ரெட்டி கடிதம் எழுதுகிறார். மாத ஷெட்டி தன் கட்டைவிரலால் கைநாட்டு வைக்கிறார்.)

காட்சி-10

(தலைமை குமாஸ்தா வீடு. அவரும் நாராயண ரெட்டியும் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர். குமாஸ்தா கையில் கடிதம் இருக்கிறது).

த.குமாஸ்தா: இது என்ன கணக்குய்யா? பள்ளத்தை சரிபண்ணனும்னா என்னய்யா? விவசாயின்றவன் எதுக்கு இருக்கான்?

நாராயண: இது என்ன ஸ்வாமி, எல்லாம் தெரிஞ்ச நீங்களே இப்படி பேசறது? மேடு பள்ளத்தையெல்லாம் விவசாயி சரி செய்யமுடியுமா ஐயா? மற்ற ஆட்கள் இதுக்கு பணம் கொடுத்து சரி செய்துக்கறாங்க தெரியுமா? இந்த முட்டாள் மாத ஷெட்டி, இந்த நிலத்தை இப்படியே விட்டுடலாம்னான். நான்தான், நம்ம த.குமாஸ்தா ஐயாவின் நிலம், அப்படியே விட்டுடாதே'ன்னு அவனுக்கு அறிவுரை கொடுத்தேன். உங்களைப் போன்றவர்களுக்கு நஷ்டம் வருவதை நாங்க விரும்பவில்லை. நீங்களே சொல்லுங்க.

த.குமாஸ்தா: சரியாப் போச்சு. இந்த ரிப்பேருக்கு ஐம்பது ரூபாய் ஆகுமா?

நாராயண: மஹாஸ்வாமி. உங்க விவசாயி ஆனதால் இந்த மட்டுக்கு ஒப்பிக் கொண்டான். மற்றவர்களா இருந்தா, 100 ரூபாய்க்கு கம்மி வாங்க மாட்டாங்க. உங்களுக்கே தெரியும். ஒண்ணு செய்யலாம். இந்த வருசம் நிலத்தை அப்படியே விட்டுடுங்க. அடுத்த வருசம் பார்த்துக்கலாம்.

த.குமாஸ்தா: இப்படி சொல்லிட்டா எப்படி? அப்புறம் எதை மண்ணையா தின்பது? கொஞ்சம் கம்மி பண்ணச் சொல்லுய்யா.

நாராயண: சிவசிவ. நான் ஏதோ இதில் கமிஷன் எடுத்துக்கறேன்னு நினைக்கறீங்க போல. நானே ஆனாலும் இந்த நிலத்து ரிப்பேருக்கு இவ்வளவுதான் ஆகும்னு சொல்வேன். நீங்க வேணா வேற ஆளை பார்த்துக்குங்க.

த.குமாஸ்தா: ஐயயோ அது சாத்தியமே இல்லை. இந்தா 50 ரூபாய். மாத ஷெட்டிக்கு கொடுத்துடு.

நாராயண: அப்படியே செய்யறேன் ஸ்வாமி. இது ஒண்ணும் யாரையும் ஏமாத்தற விஷயம் இல்லை ஐயா. (பணத்திற்கான ரசீது கொடுத்துவிட்டு, நாராயண ரெட்டி கிளம்புகிறார்).

காட்சி-11
பணத்துடன் நாராயண ரெட்டி வரும்போது, எதிரில் அபராதி குல்ஷன் வருகிறார்.

குல்ஷன்: அரே ரெட்டி முட்டாள். எனக்கு தண்டனை வாங்கிக் கொடுத்தே. உனக்காகத்தான் இங்கே காத்திருக்கேன். லஞ்சம் கொடுத்து வழக்கில் ஜெயிச்சியா நீ? இப்படி எவ்வளவு குடும்பத்தை அழிச்சிருப்பே நீ? (என்று அவர் சட்டையைப் பிடித்து, அடிப்பதற்கு தயாராகிறார்).

நாராயண: வாடா. வா (என்று அவரும் சட்டையைப் பிடிக்க இருவருக்கும் நடுவே சண்டை நடக்கிறது. அதற்குள் நாராயண ரெட்டியின் பையில் இருந்த ஐம்பது ரூபாயை, குல்ஷன் எடுக்கப் போக, அந்த நேரம் பார்த்து அங்கு இரு போலீஸ்காரர்கள் வருகின்றனர்).

போலீஸ்: ஏய், யார் அங்கே? இது என்ன உங்க வீடுன்னு நினைச்சீங்களா? இது பொது வீதி. (என்று இருவரையும் அடித்து, அவர்களிடம் இருந்த 50 ரூபாயை பிடுங்குகிறார்) சொன்னா கேட்குறீங்களா இல்லை உங்க ரெண்டு பேரையும் கைது செய்து, ஜெயிலில் போடவா? ராஸ்கல், ஓடுங்க ஓடுங்க (நாராயண ரெட்டி மற்றும் குல்ஷன் இருவரும் பயந்து ஓடிப் போகின்றனர்).

கான்ஸ்டபிள்: ஷெட்டப்பா. பார்த்தியா இன்றைய அதிர்ஷ்டத்தை? சுளையா ஐம்பது ரூபாய் கிடைச்சது (அதிலிருந்து ஐந்து ரூபாய்களை ஷெட்டருக்குக் கொடுக்கிறார்).

ஷெட்டர்: இது எதுக்கு வெறும் ஐந்து ரூபாய் எனக்கு?

கான்ஸ்டபிள்: இல்லையப்பா. நான் உன்னைவிட சீனியர். எனக்கு 30 வருசம் சர்வீஸ் ஆகியிருக்கு. இன்னும் எவ்வளவு கொடுக்கணும்?

ஷெட்டர்: அந்த கதையெல்லாம் இருக்கட்டும். எடுங்க 25.

கான்ஸ்டபிள்: 25ஆ? சரியாப் போச்சு. உனக்கும் எனக்கும் சரிபாதியா?

ஷெட்டர்: இல்லையா?

கான்ஸ்டபிள்: கொடுக்க முடியாது.

ஷெட்டர்: வாங்காமல் போக மாட்டேன்.

கான்ஸ்டபிள்: கொடுக்க முடியாது.

ஷெட்டர்: வாங்காமல் போக மாட்டேன்.

கான்ஸ்டபிள்: பார்க்கலாம்.

ஷெட்டர்: பார்க்கலாம்.

கான்ஸ்டபிள்: அப்படியா? (என்று இருவருக்குமிடையே அடிதடி சண்டை. இருவரும் கட்டிப் பிடித்து உருள்கின்றனர். அதற்குள், சத்தம் கேட்டு, பக்கத்து காட்டிலிருந்து ஒரு புலி வந்து உறுமுகிறது. இருவரும் உயிருக்கு பயந்து, ஐம்பது ரூபாய் நோட்டினை கீழே போட்டுவிட்டு, ஓடுகின்றனர்).

பணம் இப்போது காட்டில் கிடக்கிறது.

***